உ

ஸ்ரீ காசிவிசுவேசுவராயநம:

ஸ்ரீ வேதவியாஸ & ஸ்ரீ ஆதிசங்கரரது

ஸ்ரீகாசி—சேதுவாதிமான்மிய

# கங்கா யாத்ரா தீபிகை.

# ALL INDIAN PILGRIM'S GUIDE.

**Third Edition Revised & Enlarged**

Containing about 250 pictures and

A complete Indian Railway Map to scale in Tamil

Edited & Published by the Proprietor

KASIVASI PERI SIVARAMA SASTRIAL,

of TIRUVADI.

PRINTED AT :—S. V. V. PRESS, TANJORE.



**Price 1915. Rs. 2—0—0**

Shri Kashi Bishvanathku Jeh !

# Preface to the Second Edition.

As all the copies of the First Edition of 1911 of this book having been exhausted by a rapid sale, and a further demand formorecopies from different parts, having shown that the work has not been without its use; the author feels it, justified in bringing out a **Second Edition** of it with the hope of its receiving due encouragement at the hands of the public.

In revising this book notwithstanding of the Author's own experiences gained over by his due pilgrimages performed twise to Benares and of the Himalayan frontiers &c. many of the valuable suggestions have been received from the reverened religious travellers (பாரத நவகண்டயாத்ரிகர்கள்) *i. e.* **Sathus, Bairagees, Yogees &c.**, and from various orthodox Granthas and pundits of the land having been attended to; and a few misprints having been corrected, and **a complete Railway map of the religious India** in Tamil to scale to guide practically have also been added in the present edition.

The voluminous favourable opinion of the Press, the general Public, and the **distinguished scholars of the Tamil Sangam of Madura** &c, as having been published with the first edition, the same have been **omitted** to be republished here, as they are **deemed uncalled for**.

Notwithstanding of the above additions &c., **the price of the book has not been enhanced**, with the view that the book may become within the easy reach of the **more general public,** and thus more familiar and popular.

Sri Panchanad
January 1913.

THE AUTHOR,
அடியார்க்கடியேன்.

# The Great Shankaracharya,

Life-time From B. C. 42 to B. C. 10.

ஸ்ரீ ஜகத்குரு ஆதி, சங்கராசாரியஸ்வாமிகள் ஜீவிதகாலம் கல்யப்தம் 3058 முதல் 3090 வரை அதாவது வயது 32, ஜனனபூமி மலேயாளத்திலுள்ள காலட்டி அக்கிரஹாரம், இம்மஹானது ஏழாவது ஆண்டிலேயே சகலகலாவல்ல ஜகத்பூஜியராய் 16-வது ஆண்டில் கோவிந்த பாதரைச் சற்குருவாய்த்தேர்ந்து சந்நியாஸவாசிரமத்தைப் பெற்று ஸ்ரீ சக்கிரம், நவக்ரஹ யந்திரம், சந்திரமௌளீஸ்வரலிங்கம் நரசிங்க சாளிக்கிராமமிவைகளை யளிக்கப்பெற்றார்கள் பின்னர் ஸ்ரீ காசிக்குச் சென்று

12000 பண்டித சிஷ்யர்களைப்பெற்றதில், சுரேசுவரர் பத்மபாதர், ஹஸ்தாமலகர், துரோடகராகிய நால்வரைத்தேர்ந்தெடுத்து திக்விஜயஞ்செய்து இறுதியில் காஸ்மீர ஸ்ரீநகர சர்வக்ஞய பீடத்தையும் கைப்பற்றி ஸ்ரீங்கேரிக்குச் சென்று சாரதாபீடம் வியாக்கியானசிம்ஹாசனங்களுடன்



சுரேசுராசாரியருக்கு ஆசாரியாபிஷேகஞ்செய்வித்தனர். இதைப்போலவே பதரிகாச்சிரமம், துவாரகை, ஜகந்நாத மிவைகளிலும் ஆசாரியபீடங்களைஸ்தாபித்து முடிவில் தத்தாத்ரேயரது குகையினுள்வழியே ஸ்ரீ கைலாஸத்துக்கு விஜயஞ் செய்தார்கள் (சிவஸ்ஸத்யம்—ஸத்யமத்வைதம்.)



Supplement to—ஸ்ரீகங்காயாத்ரா தீபிகை

இதன் விலை 1 அணு.

*Shri Kasi Bishvanathku Jeh! Sri Rameshwar Ramnatkku Jeh!!*
*Shrimath Ajodhya Shri Ramachandra Moorthiku Jeh!!! Jeh!!!*

# Preface to the Third Edition.

As all the copies of the 2nd edition of this book having been exhausted by a more rapid sale than the 1st & 2nd editions, & a further demand for more copies from different parts of India, Burma, & Ceylon &c., having proved that the work has become a practical one, & much more popular, the author feels it justified in bringing out this 3rd edition, with the hope of its receiving much more encouragement at the hands of the very general and common public.

In the revision of this 3rd edition, some important matters & pictures having been added & a few misprints having been corrected, and also some new testimonials granted volunteerly hitherto, have been added by the requests of **the General Public.**

Notwithstanding of the above additions &c., the price of the book has not been enhanced, with the view that this practical work may become within the easier reach of the more general public and thus much more familiar & popular.

Sri Panchanad, January 1915.

THE AUTHOR,
அடியார்க்கடியேன்.

ஸ்ரீ காசிமான்மிய கீர்வாண புஸ்தகசாலை, திருவாதி
தஞ்சாவூர் ஜில்லா.

*இப்புத்தகசாலையில் முக்கியமாய் கிரந்தத்தில் எல்லாவித புஸ்தகங்களும், தமிழ், தெலுங்கு, நாகரத்தில் முக்கியமான புஸ்தகங்களும் பட்நம் விலைக்கே கிடைக்கும். அரை அணா அனுப்பினால் காட்லாக் அனுப்பப்படும். காட்லாக்கில் கண்டிராத மற்றெவ்வித புஸ்தகங்களும் ஆர்டர் செய்தால் பக்கத்தில் சரியான விலைக்கு வாங்கி அனுப்பப்படும்.*

Address all orders and communications to the following address:—
"The proprietor, K. M. Book Depot, Tiruvadi,
Tanjore District."

# சாற்றுக் கவிகள்.

## தஞ்சை சதாவதானம், சுப்பிரமணிய ஐயரவர்கள் இயற்றிய வெண்பா.

வையகத்துச் சைவ வயிணவ தலச்சேவை
செய்யுமகா யாத்திரைக்கோர் தீபிகையைக்—கையளித்தான்
பேருக் கியற்கையதாப் பேரி சிவராம மகான்
யாருக்கு வேண்டா திது.

## மதுரைத் தமிழ்ச்சங்க வித்வான்களிலொருவரும் திரிசிரபுரம், S. P. G. காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதருமாகிய கனம் M. வெங்கடசாமி நாட்டாரவர்களியற்றிய எழுசீரடியாசிரிய விருத்தங்கள்.

தற்கொரு குறியுங் குணமுமில்லாத தனிப்பரஞ் சுடரருளாலே, முற்படுமைந்து தொழிலியற்றுகைக்கா மூவகைமேனி கொண்டுழியும், அற்பமுமறியா விண்டையோர்க்காக வாலயங் களினெழுந்தருள் செய், பொற்புறு குறியைக் காணுமா செல்லும் புனிதருக் குவகை மீப்பொங்க. (க)

சீர்பெறுந் தலங்கடீர்த்த மூர்த்திகளினியல்புகள் செல்லுதற் குரிய,நேர்பெறு நெறிகளாங்குறு நிகழ்ச்சி யாத்திரை நியமங்கள் பிறவும், ஏர்பெற விளக்கி யதன்பெயர்காசி யாதிமான் மியமென ஈந்தான், பார்பெறு மந்நூற் பெருமையை யநந்தன் பகரினும் பகரலாம் படித்தோ. (உ)

அப்பெருநூலை யளித்தவனவான் ஆளுடையரசனுக்கீசன், செப்பரு கயிலை காட்டிய பெருமைத் திருவையாறெனும் பதி யிடையே, ஒப்பரு மறையோர் குலமெனு முத்தியுதித் தொளிர் பானு நற்கலைதேர், திப்பியன் ராமச்சந்த்ரமாதவர்க்குச் சேயென வந்தசே யென்னன். (ந)

துங்கநல் வேதத் துறைவழி யொழுகுந் தூய்மையன்றுக ளிலா மதியன், பொங்கராவணிந்த புரிசடைப்பரமன் பொன்ன டிக்கன்புபூண் டொழுகும், புங்கவன்றினமு மங்கியே வளர்க்கும் பூசுரன் காசியில் வதிவோன், மங்கலந் திகழுநூலணி சிவராமப் பெயர் முனிவரன் மாதோ. (ச)

இஃது, வடபதி ஸ்ரீ-ஸைலபீடம் ஸ்ரீ-தத்தாத்திரேய சிவ யோகிகள் பரம்பராதீனத்தரும், சைவப் பிரசாரகரும், மதுரை நான்காம் தமிழ்ச் சங்கத்துப் புலவருள் ஒருவரும், கரூர் முன்சிபல் ஹைஸ்கூல்தமிழ்ப் பண்டிதருமாகிய,

மகா-ள-ஸ்ரீ தி. மா. அப்பாவுப்பிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

மன்னுறுமோ ரைம்பதினு யிரத்திரு நூற்றாலயமு
 மருவி யொன்றாய்,
மின்னியிரு வினைக்கீடா யிருமையினை மாக்களுக்கு
 விழைவி னல்கும்,
பொன்னவிருங் காசிமுதல் புகழ் தனுஷ்கோடி யிறுதிவரை
 புகலா நிற்கும்,
இன்னியம மட்டோத்ர சத்திவ்ய க்ஷேத்திரயாத்
 திரை செய்வோர்க்கு, (1)

அன்னதல மூர்த்திநன்னீர்ப் பொதுவிதிகண் மான்மியங்க
 ளாற்றும் பூசை,
உன்னலுறுஞ் சீர்சிறப்பா லுறுநாம விளக்கமிய
 லோதும் யாத்திரை,
நன்னயமாச் செயும் விதிகள் பலாபலன்கள் வரலாறு,
 நவில்சங் கற்பம்,
பன்னுசிரார்த் தங்கள் செயல் பிண்டமிடல் வசித்தலறம்
 பண்ண லாதி. (2)

பத்தியுடன் சென்மார்க்க மாங்காங்காங் கண்காட்சி
 பரிந்தே தங்கச்,
சுத்தமவிர் நல்லிடங்கள் சுகாதரம், விளைவு, தொழில்,
 சொல்கண் ஷேட்டம்,
நத்துநடை யுடையோடு பாவனைநல் லயாதத்தி
 னுடிச் செல்லச்,
சத்தமது நிற்குநிலை சீதோஷ்ணஸ் திதிபூமி
 சார மின்னும். (3)

திருவளருந் திராவிடத்திற் றிகழ்ந்தொளிர்கேத் திரமவற்
றின் சிறப்புஞ் சீரும்,
மருவுமிடஞ் சென்மார்க்கம் வளமாதி யிமயமிசை
வயங்குங் கோட்ட,
மருளளிக்குந் தீர்த்தயாத் திரைபுரிவோர்க் கானவிதி
யாவுந் தீட்டித்
தெருளுறவிந் நிலமுய்ய வொருநூலை யுரைநடையில்
தெரித்தீ யென்றான். (4)

அன்னவன்யா ரெனிலொன்றே டானவிரண் டொருமூன்று
நான்கைந்தாறி,
னின்னல்களை யறவொழித்திட் டெட்டிரண்டு மானதனி
யேகாந் தத்தே,
மன்னியொளி ரஜபநிலை மருவிமகார்க் கருள்வழங்கு
வரதன் முத்தன்,
தன்னியன் ஸ்ரீ-ஜகத்குருநன் னரசிம்ஹ பாரதியாஞ்
சங்க ராரியன். (5)

உத்தரவைச் சிரம்வகித்திவ் வுடலெடுத்த பயனிதுவென்
றுன்னி யோர்ந்து,
பத்தியுடன் யாத்திரைசெய் பவர்களுக்கோர் வழிகாட்டி
யாகப் பார்க்கச்
சுத்தமுறும் பளிங்கதுபோல் துலங்கவவா வோங்ககளி
தூங்க யார்க்கு
மெத்திசையும் வழங்குமொழி யேட்டுமொழி
பேச்சுமொழி யெல்லாம் பெய்து, (6)

தொகைமொழியுந் தொடர்மொழியுந் தொடர்புறுபல்
வாக்கியவகை தோன்றச் சொல்லின்,
வகையுறக் கங்காயாத்திரா தீபிகையென் றொருநாமம்
வனைந்தச் சிட்டான்,
மகமொளிரை யாற்றீசர் மலர்ப்பதத்தை யகஞ்சிரத்தும்
வைத்தோன் முத்தீச்
சிகைவிடச்செய் பவன்பேரிசிவராம சாஸ்திரியாஞ்
சீரியோனே. (7)



லால்குடி போர்ட் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் மகா-ா-ா-ஸ்ரீ

## அ. இராமஸ்வாமி அய்யரவர்களியற்றியது.

மணிகொண்ட கடலாடை மகிதலப்பெண் வனப்பமைந்த வதனமென்ன, அணிகொண்ட திருவையாறமர்ந்துறைய வருந் தவமுனுற்றுவிப்ரன், கணிகொண்டபலகலையுங் கண்டவன் மெய் கண்டவனங் காசிவாசி, திணிகொண்ட சிவபத்திமான்பேரிசிவ ராம சாஸ்த்ரி சீலன்.

பேசரிய கங்கை மகிமையை வழியைப் பிறர்க்கெடுத்துப் பேசுவான்போல், தேசுடைய கங்காயாத்ராதீபிகை வெளிச்சந் தெரியக் காட்டி, மாசகலவென்மனத்தை வழிப்படுத்திக் கூட்டி வரந்திக்கு மாட்டி, ஆசிரியவிசுவாசங் காட்டினனுவாளென நான றைகுவேனே.

அங்காசிபோமாசையார்க்கு வழிதெரியவுளமகனெய்யன்பாப் போங்காசைத்திரிபா லனுபவமெனு மங்காச்சுடரைப் பொருத்தி மல்கும், சிங்காரவளங் காணப்பஞ்சநதபேரிசிவராம சாஸ்த்ரி கங்கா யாத்ராதீபிகைப் பளிங்கிற்ப்ரதி பலிக்கக் காட்டினனே.

---

## தஞ்சை கலியாணசுந்தரம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர், மகா-ா-ா-ஸ்ரீ எல் உலகநாத பிள்ளையவர்களியற்றிய ஆசிரியப்பா.

இருங்கட லுடுத்த வகன்றலை யுலகம்
பையுண் மாலை வெவ்வழல் கதுவிய
மும்மலக் குட்டங் கைமமுயன் றேறித்
தாவறு மின்பத் தூநீர் படிதரற்
கீண்டுசா தனமென வான்றோ ரெடுத்தன
தவலறுஞ் சிறப்பிற் றலமுதன மூன்றுட
பணிபடு நெடுங்கோட் டிமாலய மெழுவாய்த்
தென்றிசைப் புணரிச் சேதிறு வாயிடை
யுள்ளன தலமிவை நல்லதீர்த் தங்கள்
பவமாசு கழுவுஞ் சிவமுதற் குறிக
ளிவையிவை யென்னத தெரிதது நவையறச்
செல்லுநர்க் காம்பல நடவையு மல்குதற்
கேற்றன வறப்புறச் சாலையொடாற்றிடை
மற்றைய பிறவு மறறென விளக்கி
'கங்கா யாத்திரா தீபிகை'ப் பெயரிய
பாட்டிடைச் செரீஇய கோட்டமி லுரைநூல்

யாவரு மகிழ்ந்து மேற்கொள வெழுதினன்
நன்னித் திலங்கொழி பொன்னி வடதீரத்
தையா றதன்மிசை யிரண்டு தலையிட்ட
வறன்வள ராயிழை யொருதிறன் மேவாக்
கார்நறுங் கொன்றைத் தார்சுவற் புரளத்
தாழ்சடைப் பொலிந்த யாழ்கெழு மணிமிடற
றந்தணன் மேயவையாற் றகவயின்
மறைதேர் சேது ராமகன பாடிய
வருந்தவப் புதல்வன் கலையொருங் காசறப்
பயின்றர னடிக்கே பத்திசான் மனத்தினன்
றவர்மிகு காசி வாசி
சிவ்ரா மப்பெயர்ச் செழுமறை யோனே.

---

தஞ்சை ஸெயின்ட்பீடர்ஸ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்,
பிர்ம்ஹ ஸ்ரீ வையைச் சுப்பிரமணியையர் இயற்றிய
கட்டளைக் கலித்துறை.

திருவளர் மூர்த்தியுந் தீர்த்தமுஞ் சீர்கெழு க்ஷேத்திரமும்
உருவள ரவ்வவற் றோங்கும் பெருமையு மொண்ணெறியும்
கருவள ருந்நெறி தீரவோர் தீபத்திற் காட்டினனால்
மருவள ரையாற் றுறைசிவ ராம மறையவனே.

---

மதுரை மேலமாசிவீதி வித்வான்,

மகா-ா-ா-ஸ்ரீ மு. திருமலைமுத்துப் பிள்ளையவர்களது

எண்சீர்க்கழியாசிரிய விருத்தம்.

தவராமகானுக்களாலே சொற்ற
தலங்களினுட், டகுப்புகழ்சேர், காசிக்கேகு
பவராம றிந்து சொன்னவாறு செய்யப்
பண்புயர் கங்கா யாத்ராதீபிகை யென்
றுவராம லக்கர்வளை யுலகம் மெச்ச
வொருநூலை மறையவர்தங் குலத்துவந்த
சிவராம சாஸ்திரியென்றுரைக்கும் வல்லான்
செய்து மிகக் கீர்த்தியென்றுந் தேடினனே.

---





உ

ஸ்ரீ சற்குருவேநம:

# PREFACE TO THE FIRST EDITION.

## நூன் முகம்.



வடக்கில் இமயமாமலே, கிழக்கில் கங்காசாகரமென்னும் கங்காநதி சமுத்திரத்தில் சங்கமமாகும்க்ஷேத்திரம், தெற்கில் கன்னியாகுமாரி க்ஷேத்திரம், மேற்கில் விந்துநதி இங்கான்கெல்லேக்குட்பட்ட நம்மிந்துக்களுக் குறைவிடமாகிய இவ்வாரியா வர்த்தமென்னும் பரதங்கண்டத்தில் வேதமேநமக்கு முக்கியப்பிரமாணம். அவ்வேதத்தின் கருத்து.-இந்நெடிய கடல்சூழ்ந்த இத்தொல்லுலகின் கண்ணுள்ள பிரமசிருஷ்டி எண்பத்துநான்குலக்ஷம் ஜீவராசிகளுள், பிறப் பிறப்பிற்குக் காரணமாயுள்ள இச்சம்சார சாகரத்தைத் தாண்டக்கூடிய ஞானத்தையடைந்து முத்தியடையத் தகுதியுடையது இம்மானிட ஜென்மமேயென்றும், அவ்வாறடைவது அவரது கடமையென்றும், அம்முத்தியை அடைய பக்தி, கர்மம், ஞானம் என்னும் மூன்றுவழிகளுள், பக்தி, கருமங்களாலெய்தும் ஞானத்தால் அன்றி முத்தி கைகூடாதாகையால், அவ்விரண்டு மொருங்கமைந்துள்ள புண்ணிய க்ஷேத்திர தீர்த்த யாத்திரையே சுலபமார்க்கமாயிற்றென்க.

அங்ஙனமாகவும் சர்வ ஜீவ கருணாநிதியாகிய பரமசிவன் பந்தபாசத்தினால் கரையேற வழிதெரியாது திரிந்தலையும் ஆன்ம கோடிகள் பிறத்தல், இறத்தல், காண்டல், நினைத்தல் முதலியவைகளால் அடையும் பவரோகத்தை நிவர்த்தித்து பரகதியடையச் செய்யுமாறெழுந்தருளிய ஸ்தலங்கள் அனேகமிருப்பினும், அவைகளனைத்தும் ஒருங்கமைந்துள்ளதாயும், தேவாமிருதவாரிதியனைய ஸ்ரீ கங்கைமாநதியைத் தன்பாற்பெற்றதாயும் எம்பெருமான் தேவியாரோடினிது வீற்றிருக்கும் ஸ்தலமாயும் சர்வோத்கிருஷ்டமாயும் விளங்குவது ஸ்ரீ காசியம்பதியே யாதலானும் அதற்கங்கமான இராமேஸ்வராதிகளைப் பற்றியும் இவையல்லாத நம் வேதசாஸ்திர புராணேதிகாசங்களிற் கூறப்பட்டுள்ள இப் பரதகண்டத்தின் க்ஷேத்திர தீர்த்தங்களைப்பற்றியும் விவரித்தலானும், அக்ஷேத்திர தீர்த்தங்களை யடைந்து அவ்வவ்விடங்களிற் செய்யவேண்டிய முறைகளை யெடுத்துக்கூறுதலானு மிந்நூலிற்கு ஸ்ரீ காசியாதிமான்மிய கங்காதியாத்ரா தீபிகை யெனப் பெயர் பொருத்தப்படலாயிற்று.

இவ்வரியநூல் அடியிற்குறித்த ஒன்பது அத்தியாயங்களாக பகுக்கப்பட் டிருக்கின்றது:—

1. புண்ணியஸ்தல தீர்த்தயாத்திராப் பொதுவிதிகளும், ஸ்ரீகாசிரகசியமும், விபூதி உருத்திராக்ஷ மகிமையும்.

2. ஸ்ரீ காசி, கங்காமான்மியங்கள்.

3. பூபிரதக்ஷிண யதோக்தபாரத நவகண்ட யாத்திராக் கிரமமும், அவைகளின் க்ஷேத்திர தீர்த்த மூர்த்தி விவரங்களும், மஜிலிகள் முதலிய சௌகரியங்களும்.

4. இராமேசுவரத்திலிருந்து ஸ்ரீகாசிக்குச்செல்லும் மேல, கீழ மார்க்க மிரண்டிலுந் தொடர்ச்சியாய் ஒவ்வொரு ரெயில்வே ஸ்டேஷனும், மெயில் வண்டித் தொடர்களின் கால நிர்ணயங்களும். இறங்கக்கூடிய மஜிலிகளும், பிரயாண சௌகரியங்களும், ரெயில் சார்ஜ் (கட்டணம்) விகிதமும்.

5. பிரயாணிகளுக் கவசியமான ரெயில்வே சட்ட திட்டங்கள்.

6. ஷை பூபிரதக்ஷண யாத்ரா மார்க்க மல்லாத இதர க்ஷேத்திர, தீர்த்த, மூர்த்திகள்.

7. இமயமாமலையின் கண்ணுள்ள க்ஷேத்திர தீர்த்தங்கள்.

8. ஷை ஸ்ரீ காசி இராமேசுவரத்திற்குச் செல்ல நாட்டு மார்க்கமும், அவைகளின் மற்றைய விவரங்களும்.

9. சேர, சோழ, பாண்டியாதி திராவிட தேசத்தின் கண்ணுளதாய மூவரால பாடல்பெற்ற சிவக்ஷேத்திரங்களின் பெயர், தீர்த்தம், மூர்த்தி, விருக்ஷம், சுவாமிபெயர், அம்மன் பெயர்முதலிய விவரஙகள்.

10. அநுபந்த அத்தியாயம்:— ஸ்ரீவிஷ்ணுஸ்தல மஹாத்மிய சாரசங்கிரஹம.

குறிப்பு:—ஷை பத்து அத்தியாயங்களில் இரண்டாவது அத்தியாயமாகிய ஸ்ரீகாசி கங்காமான்மியங்கள் மட்டும் இப்புத்தகத்திலடங்கியிருககின்றன இது போலவே மற்ற ஒவ்வொரு அத்தியாயம் தனித்தனி புஸ்தகமாக பிரிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ஸ்காந்தம், பதுமம், இலிங்க புராணங்கள், தைத்திரீய கைவல்ய மண்டூக்கியோப நிஷத்துக்கள்; நாகேஸ்வரர் செய்த திரித்தலிம்சது, சுரேசுராசிரியர் செய்த மிருதிமோக்க நிர்ணயம், காசிமான்மியம், திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவள்ளுவர் வாக்குண்டாம், இருசமயவிளக்கம், பெரியபுராணம், பாதமோத்தர புராணம், வில்லிப்புத்தூராழ்வார் பாரதம், காஞ்சிப்புராணம், திருவள்ளுவர் மாலை, தொல்காப்பியம், ஜீவகசிந்தாமணி, பிரயோக விவேகம், சிலப்பதிகாரம், ஸ்ரீமத் கம்பராமாயணம, நூற்றெட்டு திருப்பதியந்தாதி, திராவிடவேதமாகிய தேவாரம், திருவாசகம், நாலாயிரப் பிரபந்தம், ஆரியப்புலவர் பாகவதம், நாலடியார், காசிகாண்டம், கொலைமறுத்தல், சேஷதருமம், அத்தியாத்மிக ராமாயணம், நாரதீயபுராணம், சிற்பசாஸ்திரம், நைஷதம், தயாசதகம், பாதுகாசகஸ்ரம, விசுவகுணாதிர்ஸியம் முதலிய நூல்களின் சில சுலோகார்த்தங்களும், வேறு சில பாடல்களும், இந்தியன் ரெயில்வே கயிட்ஸ் விவரங்களும, ஆங்காங்கு உதாகரிக்கப்பட்டிருப்பினும், "பொதுவாகப் பெரும்பான்மையும் பண்டிதரல்லாத எனைய சாதாரண ஜனங்களினுபயோகத்தின பொருட்டே, மிகவும் எளிய செந்தமிழ் நடையில் இந்நூலை ஜகத்குரு ஸ்ரீமத ஆதி சங்கராசாரிய ஸ்வாமிகள் திருவாக்கைப் படி எடுத்து எழுதியிருப்பதால்" இதன் கணுளதாய குற்றங்குறைகளைத் திருத்தஙகளுடன் தெரிவிப்போருக்கு நன்றி பாராட்டப் படும.

ஸ்ரீ பஞ்சநதமென்னும் திருவையாறு,
தஞ்சாவூர் ஜில்லா.

கிரந்தகர்த்தா,
அடியார்க்கடியேன்.

ஓம் சுபம்.





ஸ்ரீ காசிவிசுவேசர் துணை.

ஸ்ரீ காசியாதிமான்மிய கங்காயாத்ரா தீபிகை.

## துண்டிராஜ கணபதி துதி—கீர்த்தனை.

பல்லவி.

துண்டிராஜ ஸ்ரீ கணபதியே, சிந்தாகுலங்கள் தீர்த்தருளே
சிந்தாமணி ஸ்ரீகணபதியே.

அநுபல்லவி.

பந்தமறுப்பீர் பாவனஞ்செய்வீர், சுந்தரஜோதியாய் சுக மேதருவீர், (துண்டிராஜ)

சாமரகர்ண வாமனகாத்ரா கோமளபாதா கோடிதிவாகர தேஜோரூபா (துண்டிராஜ)

ஸிந்தூரவதன சந்திரமகுடா சந்ததஞ்சிந்தையில் சாந்த மருள்வீர் (துண்டிராஜ)

சத்தியப்பொருளினை சற்ஜனமறியா சத்தியந்துதிக்கையால் தானறிவித்த (துண்டிராஜ)

வியாஸர் செய்த காசிதன்னில் உயிர் விழுந்தால் கார்த்தப ஜன்மமென்றே தயவாய்ச்சாரதி திருவாக்கை தக்ஷணமெழுதி வந்தவரே (துண்டிராஜ)

சிவராமன் ஸோதரியாம் பார்வதியீந்தப் பாலகனே பத்ம சரணே தினந்தினம்போற்றி (துண்டிராஜ)

---

## காலபைரவர் துதி.

---

கீர்த்தனை—சாஸ்தாப்பாட்டு மெட்டு.

பல்லவி.

காலபைரவ மூர்த்திக்காசிதனைக் காத்துரக்ஷிக்கும் தேவே

அநுபல்லவி.

மலரய்யன் மதிகெட்டு மகாதேவ நிந்தைசெய்ய மலரை யிறுப்பதுபோல் விதியின் தலையறுத்த (கால)

சரணங்கள்.

1. அண்டங்கள் அதிரவே அட்டகாசஞ் செய்துமிகக் கொண்டு வைகுண்டவாசலிலே விஷ்வக்ஸேனர் தம்மைசூலத்தில் குத்திநின்ற (கால)

2. வைகுண்டத்தில் உட்புகுந்து விஷ்ணுவிடரத்தமுண்டு, வெகுவாய் வணங்கிநின்ற லெக்ஷிமிக்கு மங்கிலிய பிக்ஷையிட்டு அனுக்கிரகம் செய்துவந்த (கால)

3. அஷ்டதிக்குப்பாலகரும் அங்கங்கே நடுநடுங்க, இஷ்ட முடன் இந்திரனும் இமையோரும் பூச்சொரிந்து வாழ்த்தி நின்ற (கால)

4. அந்தரத்தில் தாரையெல்லாம் அலர்போ லுதிர்ந்திட வும், அந்தகனுர் லோகமெல்லாம், அலறி ஓலமிடச்செய்த (கால)

5. வடமாலை வழிபாடு வணக்கத்துடனே சார்த்தி, அடி யிணை கதியென்றால் அநுக்கிரகம் செய்யுமப்பன் (கால)

6. சிவராமன் செய்பிழையை முற்றிலும் பொறுத்து நீரும், பத்ம சரணந்தன்னில் பக்திதன்னை மேவச்செய்யும்(கால)

### விஷ்ணுத்துதி—ஜாவளி.

முக்கிய சிவபக்தரையா, எங்கள்விஷ்ணு முக்கிய சிவ பக்தரையா

முக்கண்ணனருளை முழுது முணர்ந்து கீதையுரைத்தா ரன்றோ, பாண்டவர்க்கு உண்மையுரைத்தா ரன்றோ பாண்ட வர்க்கு (முக்கியசிவ)

பாணமா யிருந்தும் பாரியாயுழைத்தும் கோணுதவரம் பெற்றான் கோவிந்தன் (முக்கியசிவ)

ஆயிரங்கதிரொளி சக்கரம்பணி கொள்ள ஆக்கினான் விழி யாயலராய் அரனடிக்கு (முக்கியசிவ)

பங்கஜமாயிரம் பாதத்தில் பூஜைசெய்து பங்கஜ நயனம் பெற்றான்றனை சிவராமனேற்றித் துதிசெய்வாம் (முக்கியசிவ.)



### கங்காஸ்துதி—கீர்த்தனே.



ராகம்—நாதநாமக்கிரியை.

பல்லவி:—கங்கே கங்கே காசிகங்கே, கங்கே கங்கே சுபதரங்கே

அநு:—சங்கரனுர் திருச்சடையில் தங்கிநின்று காசியில் வந்த (கங்கே கங்கே)

சரணங்கள்:—1. பகீரதமகராஜன் பரசிவனைத்தவ மிகச் செய்து சாகரானைச்சற்கதி சேர்க்க காசிதனில் அழைத்து வந்த (கங்கே கங்கே)

2. தெரிசனத்தால் பாபநாசம், ஸ்பரிசனத்தால் புண்ணிய லாபம், சேவனத்தால் கோடிதீர்த்தம ஸ்நாநமசெய்தால் மோக்ஷ மாமே (கங்கே கங்கே)

3. காசிக்கன்னியமான ஸ்தலத்தில் கங்கையென்று கூவி யன்பாய் நேசமுடன் ஸ்நாநம்செய்தால் ஸ்ரீ பதியின் லோகம் சேர்வார் (கங்கே கங்கே)

4. சிவராமன் தேடிக்காணு பதமுடையோன் திருமுடி மேல் பத்மஜாக்ஷி நீயிருந்து பளிஙகெனவே நின்றனை யேற்றிப் போற்றுவாம் (கங்கே கங்கே)

## அன்னபூரணி துதி.



கீர்த்தனை.—நாகநந்தி ராகம்.

அன்னபூர்ணி நின்பாதஞ்சரணம் அடிமையென்னை ஆண்டு கொள்வாய்

அநு:—அன்னவாகனத்திலேறி அனைவருக்குமமுதளிக்கும் உன்னையல்லால் உலகந்தன்னில் ஒருவரையும் உளங்கருதேன்

சிஷ்டர்போற்றும் காசிதன்னிற் சிறந்துவாழும் சிற்பறையே அஷ்டதிக்குப் பாலகரும் அரியயனும் போற்றிச்செய்யும்

காசிதன்னில் வந்தேனம்மா காயமென்னும் சொமடுங் கொண்டு, நேசமுடன் நீயிரங்கி நாசமில்லா நிலையருள்வாய்

காரணமாம் தேகந்தன்னை காசிதன்னில் கருகச்செய்து பூரணமாம் சொரூபந்தன்னில் பொருத்திடுவாய் சிற்பறையே

சிவராமன் போற்றும்பறையை பக்தரெல்லாம் புகழும் தாயே, பத்மபீடம் வசிப்பவளே பார்வதியே பரஞ்சோதியே.



## அன்னபூர்ணித்துதி—வேறு.



கீர்த்தனை—ஆநந்தபைரவி.

பல்லவி:—அன்னபூர்ணித்தாயே அடிமையென்னை ஆதரித் தாள வாவா.

அநு:—அன்னையிலச்சைபோல அலைந்துதிரிந்து நானும் உன்னையே தஞ்சமென உள்ளபடி நம்பினேன் (அன்னபூர்ணி)

சரணம்:—1. தேகத்தில் துன்பவினை சோம்பல் அருள் செய்து தாகமுடனே யென்னைத் தாங்கியே யாதரிப்பாய்

2. காசில்லா வெளியோரைக் கலிமனிதர் சணியார் மாசில் லாமாதே நீயும் அதுபோலிருக்கலாமோ (அன்னபூர்ணி)

3. மாணிக்கப்பாத்திரத்தில் அமுதமே தானெடுத்து பே ணியே ஊட்டிடுவாய் பாதம் பணிந்தோர் தம்மை(அன்னபூர்ணி)

4. பஞ்சக்ரோஸ யாத்திரை செய்யப் பலமில்லார்க்குத் தஞ்சமுடன் சதம் வலம் சிரத்தையுடன் செய்தார்க்கு அந்தப் பலமும் கொடுப்பாய் (அன்னபூர்ணி)

5. சிவராமனுமுந்தன் பாதத்தைப் பூஜித்துச் சந்ததம் ஏற்றிப்போற்றிவுளம் வைப்பான் (அன்னபூர்ணி)



## காசிவிசுவேசுவரர் துதி. (ஜாவளி.)



விசுவேசுவரனே கிருபைசெய்யும் விசுவனாதா கண்பாரும்.

1. பாதம் பணிந்தேன் பரகதிவேணுமென்று போதத்தைத் தந்தருள்வீர் பூரணமாய் பஞ்சநதீசனே கண்பாரும். தேகத்திலபிமானம் தீரும்படியே பார்யோக நிலையருள்வீர்

2. என்சாமி ஞானநிலையருள்வீர் யென்சாமி விசுவேசுவரனே.

3. காமக்கடல் கடந்துக் கரையேறிப் போவதற்கு ஓமெனும் ஓடமளிப்பீர் உத்தமனே-கேதாரேசுவரனே.

4. திருமால்விடைதன்னில் தேவியுடனேயேறி தெரிசனந் தாருமையா தாஸனுக்கு காசிவிசுவேசுவரனே.

5. ஸ்ரீ கண்டதாஸனும் சிவராமனுங் காதகுளிரச்செய்யும் ஹர-ஹர உள்ளங்குளிரச்செய்யும் சிவ-சிவ, நின்பாதமதனை என் னிதயத்துள் வைப்பாய்-விசுவேசுவரனே.



## சற்குருமூர்த்தி துதி.



*அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

திருக்கிளர்வெண்பிறைக்கொழுந்துஞ்செஞ்சடையுமறிமானுந்திண்டோளெ
முருக்கிளர் வெம்புலியதளுங்கரந்து மானிட வடிவினுலகிற் போந்து [ட்டு
மருட்கிடனாமெனைப் பிணித்தவல்வினையின்றொடரனைத்துமாய நூறி
யருட்கடைக் கணளித்தாண்டசுவாமி தேவன்றிருத்தா ளகத்துள்வைப்பாம்.

## சிவனடியார்க டுதி.



அறந்தவறாதொழுகும் வைதிக சைவநெறியினிலகனிலமருங்கிற்
பிறந்துளோர்பிறவா நின்றுளோர் பிறப்போர் பெய்கழற்றாமரைப்போதின்
மறந்திடாதன்பு பூண்டுளோர் யாவராயினுமுவந்து மற்றவர்தஞ்
சிறந்த பூங்கமலமருட்டி வீடளிக்குஞ்சேவடி சென்னியிற்சேர்ப்பாம்.

## வாழ்த்து.



அருமறைமுனிவர் வாழ்கவானினம் வாழ்கத்தெண்ணீர்
விரிதிரையுலகங்காக்கும் விறல் கெழுவேந்தன்வாழ்க
மருவிய திங்கடோறுமழைவளஞ்சுரக்கவெங்கோன்
பொருவறமொழிந்ததொன்னூல் பொற்பொடும் பொலிகமாதோ.





# முதலாவது அத்தியாயம்.

## புண்ணிய ஸ்தலதீர்த்த யாத்திராப் பொதுவிதிகள்.

தர்மார்த்த, காம, மோக்ஷமென்னும் நான்குவித புருஷார்த்தங்களையும் ஒரே கிரியையில் கொடுப்பது புண்ணிய ஸ்தலதீர்த்த யாத்திரையே யென்பது சுருதி-ஸ்மிருதி புராணேதிகாசங்களாற் றெளிவாயிருக்கிறது. பாபமேமிகுந்திருக்கும் இக்கலியுகத்தில் யதோக்தமாய் விதிப்பிரகாரஞ்செய்து முடிப்பது கடினமாகையால், அவைகளின் முக்கிய கருத்தும்-சாதனமுமாகிய பக்தி என்பதொன்றை மட்டும் பரிபூரண நிலைமையில் வைத்துக்கொண்டு மிகவும் முக்கியமான அடியிற் கூறும் சிலவிதிகளை மட்டும் பின்பற்றி நடந்தால் யதோக்தமாய்ச் செய்வதினாலடையும் முழுப்பலனையும் இக்கலியுகத்திலடைந்து சற்கதி பெறுகிறார்களென்று பராசர ஸ்மிருதியில் கூறப்பட்டிருக்கிறது. ஏராளமான திரவியத்தைச் செலவுசெய்து யதோக்தமாய் நடத்தக்கூடிய தனவந்தர்களை இதனால் தடுக்கவில்லை. உதாரணமாக கோதானஞ் செய்யவேண்டுமானால் தங்கத்தினாலும்—சாக்ஷாத்

காரமாயுஞ் செய்வது யதோக்தமானாலும் அசக்தர்கள் சடைசி பக்ஷத்துக்கு ஒரு தேங்காயுடன் இரண்டொரு அணாவை வைத்தாவது செய்யவேண்டுமே யொழிய, கிரியையை எக்காரணத்தாலும் விட்டுவிடக்கூடாது. பக்தி காரணமென்று கிரியாலோபம் செய்தால் பலனொன்றுமே கிடையாமல், முன்னிருந்த பக்தியுங் கெட்டு கர்மலோபத்தின் பாபபலனைப் பெறுகிறார்கள்.

பரிசுத்த மனதுடனும், பக்தி சிரத்தையுடனும் செய்யும் யாத்திரைகளின் பலன் பரிபூரணமாயும் நிச்சயமாயும் நிதர்சனமாயுமடைகிறார்கள் என்று, அந்தந்த புராணிகர்கள் பிரதிக்ஞைகளுடன் உறுதிகூறுகிறார்கள். உதாரணமாக "ஸேதுஸ்நாநம் செய்தால் பிரம்மஹத்தியாதி பாதகங்களும், பிரம்மரக்ஷஸ்யாதி சங்காதோஷங்களும் நிவர்த்தியாய் சத்கதி யடைகிறார்கள் என்னும் வாக்கியத்தின் உண்மையை என் ஸ்வானுபவத்தாலும்; பிறர் பெற்றிருக்கும் புத்திரப் பேற்றினாலும் நிச்சயப்படுத்தப் படுகிறது. இக்காலத்தில் இதை நிதர்சனமாய் பரீக்ஷித்தறியப் பட்டிருக்கிறது. ஒருமுறை ஸேதுஸ்நாநஞ் செய்வதால் சர்வ சங்கா தோஷங்களும் நிவர்த்தியாகி, தப்பாமல் புத்திர பாக்கியத்தை அடைகிறார்கள். யாத்திரையின் பூர்ண பலனை யடைவதற்கு மேற்கூறிய பக்தி முதலியவைகளுடன் "நம்பிக்கை" என்பதும் இன்றியமையாதது. இவைகளைப்பற்றிய அநேக புராணேதிகாசங்களைப்பற்றி எங்கெங்கும் பிரசித்தமாகையால் அவைகளைப்பற்றி இங்கெடுத்துக் கூறுவதனாவசிய மென்று விடுத்தனம்.

நான்கு வருணத்தார்கள் மட்டிலல்ல, பிறரும் அதிகாரிகளாவர். பத்னி முதலியவர்களோடிருப்பவன் பத்னியை விட்டுத் தனியாயும், விதந்து புத்திர னனுமதியில்லாமலும், சிஷ்யன் குருவினனுமதியில்லாமலும் யாத்திரை செய்வதில் பயனில்லை. ஆனால் அப்படிப்பட்ட அநுமதி எம்மட்டில் அவசிய மென்பதையும் கண்டுகொள்ளவேண்டும்.

யாத்திரை நியமம் செய்துகொள்ளும்பொழுது இடையில் எவ்வளவுதீர்த்த க்ஷேத்ரங்களுக்குச் செல்லவேண்டுமென்பதைச் சங்கற்பஞ்செய்து கொள்ளாவிட்டால் பாதி பலன் கிடைக்கும். கூலிக்கு யாத்திரை செய்பவனுக்கு பதினாறிலொருபங்குதான். குடை செருப்பின்றி யாத்திரை செய்பவனுக்குப் பூரண பலன். வாகனங்களில் செல்பவனுக்கு அரைப்பங்கு; வேறு வழியால் முடியாதவிடத்து யாசகஞ்செய்து யாத்திரை செய்தல் குற்ற

மாகாமல் பாதி பலன் கிடைக்கும். ஒரு ஜாமத்திற்குமேற்படாத காலத்துக்குப் பிராமணன் ஸ்டீமர் முதலியவற்றால் யாத்திரை செய்யலாம்.மார்க்கத்திலிருக்கும்தீர்த்தவிசேடங்களைத்தவிர்த்து செல்லுதல் கூடாது. இடையில் சூதகம் முதலிய ஆசௌசங்கள் நேரிட்டால், ஒரூரையடைந்து சூதக நிவர்த்தியின் மேல் யாத்திரை செய்யவேண்டும். யாத்திரை, திருவிழா, தீர்த்தம் முதலிய விடங்களில் சண்டாளரை நேரில் தீண்டினாலன்றி மற்றப்படி தீட்டில்லை. முதல் முதல் யாத்திரைசெய்வோர் விதித்த பருவகாலங்களிலன்றி போகலாகாது. க்ஷேத்திரத்தையடைந்ததும் தீர்த்தத்தில் இயற்கனவே கட்டியிருந்த வஸ்திரத்தோடு ஸ்நானஞ் செய்து, வபன ( க்ஷவரம் சர்வாங்கமாய் ) ஞ்செய்து பின்பு பன்னிரண்டு தடவை மூழ்கி, மிருத்திகாஸ்நானம், மந்திரவத்தான அகமருடணஸ்நானமிவைகளுடன் தீர்த்த தர்ப்பணம் தீர்த்த சிரார்த்தமுஞ்செய்து ஸ்தல தரிசனமும் க்ஷேத்திரோபவாசமும் செய்வது கடமை. மூன்று இராத்திரிக்குக் குறைந்து க்ஷேத்திரவாசஞ் செய்யக்கூடாது. அதாவது பூர்ணபலன் கிடைக்காது. விசாலம், புஷ்கரம், கயா, விரஜை இவைகளில் முண்டனம் அதாவது வபனம் இல்லை. பிரயாகையில் திரிவேணி சங்கமத்தில்வேணிதானஞ்செய்யும்போது ஸ்திரீ, புருஷனுடைய தொடையிலுட்கார்ந்து கொண்டு அவனுடைய க்ஷேமத்தை விரும்பியே செய்யவேண்டும். குருக்ஷேத்திரத்தில் சூரியகிரஹணகாலத்தில் ஆயிரம்பாரம் ஸ்வர்ணத்தைத் தானஞ்செய்தபலனை பிரயாகை முண்டனத்தாலும், வேணிதானத்தாலு மடைவர். யுவதிகள் புத்திரசம்பத்தை, சேதுஸ்நானத்தால் முன்சொன்னபடிசர்வபீடைகளும் தொலைநது தவறாமல் அடைகிறார்கள்.

மகாதீர்த்தங்களில்ஸ்நானஞ்செய்யும் பருவகாலங்களாவன:- சூரியகிரகணம், சந்திரகிரகணம, அர்த்தோதய மகோதயங்கள், அமாவாசை, பௌர்ணமி, மாதப்பிரவேசம், தை-ஆடி மாதங்கள் அதிக விசேஷம். இப்பருவகாலங்களல்லாத மற்றகாலங்களிலும் மகாதீர்த்தங்களுக்குச் சென்றால் பருவகாலங்களிற் போலவே க்ஷேததிரோபவாசம், ஸ்நானங்கள், வபனம், தர்ப்பணம், தீர்த்த சிராத்தங்கள் முதலிய எல்லாவற்றையு மெதோக்தமாய்ச் செய்ய வேண்டும். பிராமணர் அன்னசிராத்தமாகவும் சைவர், வைசியர் ஆமசிராத்தமாகவும்—மற்றோர் ஏம சிராத்தமாகவும் செய்வது ஸ்மிருதியுக்தம். அன்னசிராத்தமல்லாதமற்றிரண்டையும்க்ஷேத்திரத்துள் வந்ததினமே அன்றிரவு செய்யலாம். சௌகரியப் படாவிடின் மறுநாள் செய்யாவிட்டால் சிரார்த்த லோபபாதகம் சமபவிக்கும். மறுநாள் தவறினல் பிறகு செய்வதில் பூரண

பலன் கிட்டாது. பிரமணனுயிருந்தாலும் வீடு, ஜாகை, சமையல் செய்ய சௌகரியம் முதலியவை கிடைக்காத விடத்து ஆமரூபமாயும் ஹிரண்ய (பணம்) ரூபமாயும் செய்யலாம. சிராத்தாங்கங்கள் செய்யவேண்டிய பத்ததி முதலிய சாதாரண விஷயங்களை இங்கெடுத்துக் கூறவேண்டிய அவசியமில்லை. அவைகளெல்லாம் அந்தந்த ஸ்தலங்களின் தொழிற்குரிய அந்தணர்களால் செவ்வனேதெரிவிக்கப்படும். தவிரவும அச்சில்லரை விஷயங்களின் பாபபுண்ணியங்கட்கு அத்தீர்த்தவாசி பிராமணர்கள் பாத்திரமாவரேயன்றி, யாத்திரைவாசிகளுக்கின்று வாதலானுமவைகளை இங்கெடுத்துக் கூறுமல் விடுத்தனம்.

அன்ன சிராத்தத்தை மறுநாள் இரண்டாஞ்சாமமாகிற வரையில் பசியெடுக்காமலிருக்கும்படி அவ்வளவு திருப்தியாயன்னமளித்து, ஒரு மிருஷ்டான்ன சாப்பாட்டு விலைமதிப்புள்ள தக்ஷிணைக்குக்குறையாமலும் கொடுக்கவேண்டும், ஆமசிராத்தத்தில் குறைந்தது அன்னமளிப்பதின் இரட்டிப்பு மதிப்புள்ள தானியாதிகளையும், ஏம(பணம) சிராத்தத்தில் அதற்குநான்குபங்குக்குக்குறையாமலும் கொடுத்தாலன்றி பூரணபலன் கிட்டாது. தீர்த்த சிரார்த்தஞ்செய்யச் சக்தியில்லாதவன் யவை மா, யவை நொய்ப்பாயசம் இவற்றால் பிண்டம் போடலாம். அதற்குஞ் சக்தியிலலாதவன் உபவாசமும் தர்ப்பணமுஞ் செய்யவேண்டும. கங்கை, சேதுமுதலிய மகாதீர்த்தங்களில் தீரதத சிராத்தாங்கத்திலொன்றுகவே பிண்டமிட்டு அன்னதானம், சுவர்ணதானம், கோதானம, பூதான முதலியவைகளை அவரவர்கள் சக்திக்கியன்றவாறு செய்யாமலிருக்கக்கூடாது.

மேற்கூறியமுறைகளை விடாது க்ஷேத்திர தீர்த்தயாத்திரை செய்வதனுலெய்துமப் பலனுகிய தர்மம், அர்த்தம், காமம(சுவர்க்காதி போகங்கள்) இவைகளனறி மோக்ஷத்திற்குக் காரணமான ஞானத்தையடைவதற்கு உபகரணங்களான சமம், தமம், விடல், சமாதானம், சகித்தல், சிரத்தையாகிய இவ்வாறினையும்பெற,யாத்திரா மார்க்க மத்தியில் எப்போப்பட்ட அரசனுகவிருந்தாலும், சமர்த்தனுக விருந்தாலும், பிறருதவியை எதிர் பாராமலிருகக முடியாது; உதாரணமாக தஞ்சாவூர் அரசனுகிய சரபோஜிமகாராஜா தனுஷ்கோடியில் ஸ்நானகட்டத்துக் கருகில வேறுவகையால முடியாமல்,இக்காலததில் தர்மாத்மாக்களாகவிளங்கும்நாட்டுக்கோட்டையாரது தர்மசத்திரத்தில்கோமயம்பெற்றுகொள்ளவேண்டியவராயினர். இதுபோலவே மேற்கூறிய ஆறும் சாதாரணமாயெல்லோருக்கும் விளங்கக்கூடியதாகையால், அவ்வாறை

யும் பெறக்கூடியதென்றும், பெற்றபின்னர் ஞானத்தையும், ஞானத்தால் இச்சம்சாரசாகரமாகிய பிறவிக் கடலையும் படிப்படியாய்த் தாண்டி கடைசியில் நிரதிசயானந்தமான சாக்ஷாத்கார கைவல்ய மோக்ஷ சாம்பிராச்சியத்தையும் பெறுகின்றார்களென்பது திண்ணம்—திண்ணம்,

---

உ

# ஸ்ரீ காசிரகசியம்.

காசியைநினைக்கமுத்தி காசியென்றுரைக்கமுத்தி
காசியைக்காணமுத்தி காசியில்வசிக்கமுத்தி
காசியைச்சூழமுத்தி காசியைகேட்கமுத்தி
காசியில்வசித்தோர்தம்மைக் கண்டுதாழ்ந்திடுதென்முத்தி (1)

விடைகொடுகாசிபுக்கு வெண்டிரைக்கங்கையாடி
யடையவெண்ணீறுபூசி யக்கமாமணியும்பூண்டு
மிடையவைந்தெழுத்துமெண்ணி விச்சுவநாதனன்ன
நடைகெழுவிசாலக்கண்ணி நற்பதம்படிந்துபோற்றி (2)

அருணாசலபுராணம்.

காசியெனுமொருதலமிக் கயிலையினுஞ்சிறப்புளது கங்கைநீத்தம்
வீசுதிரைக் கொழுந்தோட்டிப்பரகதிக்கு வேரோட்டும் வியந்துமூழ்கின்
மாசினுடலதிலிறந்தால் மரமேனும் விலங்கேனும் மனிதரேனு
மீசனருளுபதேசஞ் செவிப்புகலா லிறைவனெனவிருக்கலாமே.

ஜன்மகிருதார்த்த-திருவங்கமாலை-பண்-சாதாரி.

தலையேநீவணங்காய் தலை-மாலைதலைக்கணிந்து
தலையாலே பலிதேருந்தலைவனைத் தலையே நீவணங்காய் (1)

கண்காள்காண்மின்களோ கடல் நஞ்சுண்ட-கண்டன்றன்னை
யெண்டோள்வீசிநின்றாடும் பிரான்றன்னைக் கண்காள்காண்மின்களோ (2)

செவிகாள்கேண்மின்களோ சிவ-னெம்மிறைசெம்பவள
எரிபோல்மேனிப்பிரான்றிற மெப்போதுஞ் செவிகாள்கேண்மின்களோ (3)

மூக்கேநீமுரலாய் முது-காடுறைமுக்கண்ணனை

வாக்கேநோக்கிய மங்கைமணாளனை மூக்கேநீமுரலாய் (4)

வாயேவாழ்த்துகண்டாய் மத-யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும் பிரான்றனை வாயேவாழ்த்துகண்டாய்

நெஞ்சேநீநினையாய் நிமிர்-புன்சடைநின்மலனை
மஞ்சாடுமலைமங்கைமணாளனை நெஞ்சேநீநினையாய் (6)

கைகாள்கூப்பித்தொழீர் கடி-மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக் கைகாள்கூப்பித்தொழீர் ()

ஆக்கையாற்பயனென் அரன்-கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ் வாக்கையாற்பயனென்()

கால்களாற்பயனென் கறைக்-கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக் கால்களாற்பயனென் (9)

உற்றாராருளரோ வுயிர்-கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக் குற்றாராருளரோ (10)

இறுமாந்திருப்பான்கொலோ வீசன்-பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன் சேவடிகீழ்ச்சென்றங் கிறுமாந்திருப்பன்கொ

தேடிக்கண்டுகொண்டேன் திரு-மாலொடுநான்முகனுந் [லோ ()
தேடித்தேடொணாத் தேவனையென்னுளே தேடிக்கண்டுகொண்டேன்

### விபூதிமஹிமை-திருநீற்றுப்பதிகம்-பண்-காந்தாரம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன் திருவாலவாயான்றிருநீறே (1)

வேதத்திலுள்ளதுநீறு வெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறு புன்மைதவிர்ப்பதுநீறு
வோதத்தகுவதுநீறு வுண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்த திருவாலவாயான்றிருநீறே (2)

முத்திதருவதுநீறு முனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறு தக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறு பரவவினியதுநீறு
சித்திதருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே (3)

காணவினியதுநீறு கவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம் பெருமைகொடுப்பதுநீறு

மாணந்தகைவதுநீறு மதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே (4)

பூசவினியதுநீறு புண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறு பெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறு வந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறு திருவாலவாயான்றிருநீறே (5)

அருத்தமதாவதுநீறு வவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறு வானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறு புண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தமாளிகைசூழ்ந்த திருவாலவாயன்றிருநீறே (6)

எயிலதுவட்டதுநீறு விருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறு பாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறு சுத்தமதாவதுநீறு
வயிலைப்பொலிதரு சூலத்தாலவாயான்றிருநீறே (7)

இராவணன்மேலதுநீறு வெண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறு பாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறு தத்துவமாவதுநீறு
வராவணங்குந்திருமேனி யாலவாயான்றிருநீறே (8)

மாலொடயனறியாத வண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண் மெய்யதுவெண்பொடிநீறு
வேலவுடம்பிடர்தீர்க்கு மின்பந்தருவதுநீறு
வாலமுதுண்டமிடற் றெம்மாலவாயான்றிருநீறே (9)

குண்டிக்கைக்கையர்களோடு சாக்கியர்கூட்டமுங்கூடாக்
கண்டிகைப்பிப்பதுநீறு கருதவினியதுநீறு
வெண்டிசைப்பட்டபொருளாரேத்துந் தகையதுநீறு
வண்டத்தவர்பணிந்தேத்து மாலவாயான்றிருநீறே (10)

ஆற்றலடல்விடையேறு மாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவுபூசுரன் ஞானசம்பந்தன்
றேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள் பத்தும்வல்லவர்நல்லவர்தாமே. (11)

## உருத்திராக்ஷமகிமை.

திரிபுரனெனும்பெயர் திருந்தசுரனுலே
யரியயன்முதற்சுராழிந்து துயரெய்தி
வரியுழுவையுரியுனையும் வானவனைநோக்கி
யுரியதவமாவருட மாயிரமுறைத்தார் (1)

பன்றிரிபுரன் புரியும் வாதைதனை நோக்கி
யன்றுவிடைமே லரனுமம் பிகையும் வந்து
வன்றிறன் முராரியயன் வானவரை நோக்கிவாழ்த்த
மென்றுனிகண் முக்கண்ணும் வீழ்ந்த தென்ம.

உருத்திரன் + அக்ஷம்=பொதுவகையால் "உருத்திரன் கண்" சிறப்புவகையால் குறித்த கண் எனப்பொருள்படுகிறது. திரிபுரனென்று வழங்குகிற ஒரு ராக்ஷதனால் விஷ்ணு, பிர்மா முதலான சகல தேவர்களும் மனவலிமையொழிந்து துன்பத்தை யடைந்து, வரிபரந்த புலித்தோலை யாடையாகக்கொண்ட பரம சிவனைக்குறித்து ஆயிரந்தேவ வருஷபரியந்தம் சிவதரிசனமுண் டாவதற்குரிமையான பெருமைபொருந்திய தவத்தைச் செய்தார் கள். அங்ஙனம் அவர்களெல்லோருந் தவஞ்செய்த காலத்தில் பரமசிவனானவர், கொடிய திரிபுரனானவன் செய்கின்ற வருத்தத் தைக்கண்டு உமையவளோடும் ரிஷபவாகனத்தின் மேலெழுந் தருளிவந்து மஹாபலத்தையுடைய விஷ்ணு, பிர்மா முதலான சகல தேவர்களையும் பார்த்து அவர்கள் படுந்துன்பம் சகிக்காமல் சிவபெருமான் முத்திருக்கண்களி னின்றும் மிருதுவாகிய நீர்த் துளிகள் சிந்தித் தாழ்ந்ததினால் அப்பூமியில் புண்ணிய ஸ்வரூப மான பரிசுத்தமுள்ள உருத்திராக்ஷ விருக்ஷம் முளைத்தெழ அன்றுமுதல் அம்மரத்தினின்றுண்டான காய்களுக்கு உருத்தி ராக்கம் (உருத்திராக்ஷம்) என சிறப்புப் பெயரோடு வெண்மை, செம்மை, பொதுன்மை, கருமை இந்நான்கு நிறங்களுடையன. இவற்றுள் பலமுகங்கள் உளவாயினும் ஒருமுகமுதல், பதி னான்கு முகம்வரை ஜெபத்திற்கும் அணிதற்கும் சிறந்தன. எவ் வகை சிவகருமமும் இவ்வுருத்திராக்ஷதாரணம் இன்றேல் சிறி தும் பயன்படுவதன்று.

பூணாது கண்டியினைப் பூசைபுரிவார் பலத்தைக்
காணா ரெனவே கழறுமறை—நாணாதே
பூண்டு சிவபூசை புரிகுவார் மேற்புறத்துக்
காண் டிருப்பா ரீசன் கழல்.

இவ்வாறு இதன் பெருமை பலவாகச் சிவாகமம் முதலிய சைவநூல்கள் வியந்து கூறுகின்றன. நிற்க, தற்காலத்திய இங்கி லீஷ் படிப்பின்பயனால் (Western Education) நம்பூர்வீகவேதா கம மதாசாரபரத கண்டமென்னும் தற்கால இந்தியாவிலும் பதார்த்தகுண தரிசனக்கோட்பாடு (Materialism) தலையெடுத்து மேட்டிமை பெறவே, அந்த சாஸ்திரத்தில் விசேஷ பிரக்ஞை யுள்ள மேதாவிகளால் பரீக்ஷை செய்யப்பட்டதில், இம்மணியி னிடத்து (Electricity) மின்சாரசக்தி இருப்பதால் இம்மணி

யை அணிந்துகொண்டால் உடம்பில் மணியினிடத்துள்ள மின் சாரசக்தி வியாபித்துச் சரீர ஆரோக்யத்தையும், பலத்தையும் உண்டுபண்ணுமென்றும், ஔஷதங்களில் சேர்த்து உட்கொண்டால், அதிகதாகம், திரிதோஷம், விக்கல், பித்தம், பித்தகோபம், சிலேஷ்மாதிக்க மிவைகளைப் போக்குகிறதென்றும் அங்கீகரித்திருக்கிறார்கள். சுவாமி விவேகாநந்தரது பிரசங்கத்தினால் அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும்கூட சிலர் உருத்திராக்ஷங்களை விருப்புடன் தரித்துக்கொள்ளுகிறார்கள். இவ்வாறு சுகாதாரமான பலவற்றையும் பதார்த்தகுண பாவனையை யனுசரித்து நுழைத்த நம் பூர்வீகமதாசாரியர்களின் புத்தியூகத்தை நயமவர்களைக்காட்டிலும் பிறமதஸ்தர்களல்லவா அதிகமாய்க் கண்டுபிடிக்கிறார்கள். இப்படிப்பல நியாயங்களாலும், தந்திரங்களாலும் ஆதியில் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதினாலல்லவா நமது மேன்மைதங்கிய வைதிக (Religious India) இந்தியாவை புறமதஸ்தர்களால் தாக்கமுடியவில்லை !!

நம் இந்தியாதேசத்தில் இவ்வுருத்திராக்ஷம் நேபாளதேசத்திலும், அதைச்சார்ந்த மோரங்கிமலையிலும் உற்பத்தியாகின்றது.

## உருத்திராக்ஷங்களின் வர்ணபேதம்.

இவைகளில் வெண்மை நிறமுள்ளவை பிராமணஜாதி, சிவப்புநிறமுள்ளவை உண்மையான க்ஷத்திரியஜாதி, இவ்விரண்டிலும் கலந்திருப்பவை வைசியஜாதி, திண்மையுடன் கருமை நிறமுள்ளவை சூத்திரஜாதி யென சொல்லப்படுகிறது.

## இலக்ஷணகுறிப்பு பலன்.

N. B:—இதனடியிற் கூறும் பலன்கள் அஞ்ஞான கிருதத்திற்கு மட்டிலென்பதைக் கண்டு தெளிக.

1. ஒருமுகமுள்ளது சிவரூபம், இதை யணியில் பிராமண ஸ்திரீயை ஹத்திசெய்த பாதகத்தை யொழிக்கும்.

2. இரண்டுமுகமுள்ளது சிவசக்தி ஸ்வரூபம், இதையணியில் பல கோஹத்தி நிவர்த்தி.

3. மூன்றுமுகமுள்ளது அக்கினிஸ்வரூபம், இதையணியில் ஸ்திரீ ஹத்தி நிவர்த்தி.

4. நான்குமுகமுள்ளது பிரமதேவஸ்வரூபம், இதையணியில் தீயநரகத்தினின்று மீட்கும்.

5. ஐந்துமுகமுள்ளது காலருத்ரஸ்வரூபம், இதையணியில் தகாதபுசிப்பும், பொய்முகமாய் இன்பமிலாத புணர்ச்சியினாலுண்டாகும் தோஷத்தை யங்ஙனே போக்கும்.

6. ஆறுமுகமுள்ளது சிவசுப்ரமண்ய ஸ்வரூபம், இதை யணியில் ப்ருணஹத்தியை நிவர்த்திக்கும்.

7. ஏழுமுகமுள்ளது ஆதிசேஷஸ்வரூபம், இதையணியில் கோஹத்தியையும், நினைத்தற்கரிய போர்க்களக் கொலைபாதகத்தையும் தீர்க்கும்.

8. எட்டுமுகமுள்ளது விநாயகஸ்வரூபம், இதையணியில் துலாபாரந்தூக்கிய பொருள்தான முதலாகிய தானம் வாங்குதலாலுண்டாகும் பாபத்தையும், பிறன்கைச் சோறுண்பதால் நேரும் பாதகத்தையும், ஊணிழந்திரப்பவர்கட்குக் கொடாததினால் சம்பவிக்கும் பாதகத்தையும், சூரியன் முன்றோனறும் பனியைப்போல் நீக்கும்.

9. ஒன்பதுமுகமுள்ளது பயிரவர்ஸ்வரூபம், இதையணியில் விடமுள்ளதக்ஷகன் முதலான சர்ப்பங்களை முன்ஜன்மத்திலடித்துக் கொன்றபாவத்தையும் நீக்கி முத்திக்குவித்தாக்கும்.

10. பத்துமுகமுள்ளது உலகமுண்ட திருமால் ஸ்வரூபம், இதையணியில் இருபத்தேழு நக்ஷத்திரங்கள், நவக்கிரஹங்கள், பைசாசங்கள், பிரமராக்ஷதர்கள் முதலானவர்களாலுண்டாகும் பயமுதலான எல்லாக்குற்றங்களையும் போக்கும்.

11. பதினொரு முகமுள்ளது ஏகாதசருத்ரஸ்வரூபம், வேதவிதிப்படி செய்கிற ஆயிரம் அஸ்வமேதயாக பலனுக்கும், தானங்களுக்குள் சிறந்த நூறாயிரங் கோதானங்களை யவைகளுக்குத் தக்க திரவியங்களுடன் தானஞ்செய்யும் பலனுக்கும் ஒப்பானதாகும்.

12. பன்னிரண்டுமுகமுள்ளது துவாதசாதித்ய ஸ்வரூபம், இதையணியில் அஸ்வமேதமும், பசுமேதமும், பொன்மேரு தானமும் செய்தலால் பொருந்தும் பெரும்பேற்றைத் தராநின்ற பலனைக் கொடுக்கும்.

13. பதின்மூன்றுமுக முள்ளதாகில் காமசிந்தையிலாத மற்ற இஷ்டகாமியங்களையும், ரசவாதப் பொன்னையும், நன்மைகளையும் பயப்பிக்கும். தாய், தந்தை, சகோதரர் இவர்களுக்குச் சதிசெய்த பாதகத்தை நீக்கும்.

14. பதினான்குமுகமுள்ளது சிவம்,சத்தியென்றுமிரண்டு சொரூபம், இது முனிவர்களும், தேவர்களும், மற்ற யாவரும் வாழக்கடவை யென்று தொழும்படி வசியம் என்பதனைக் கொடுத்துப் பின்பு ஊழிகாலத்திலு மழியாத மோக்ஷத்தைத்தரும்.

பதினான்குமுகமுள்ள உருத்திராக்ஷம் கிடைப்பது மிகவுமரிது. அப்படிக் கிடைக்குமாகில் குற்றமற்ற ஞானவான்கள்

தங்கள் கண்டத்தில் தரிக்கத்தக்கது, இது சிவன், சக்தி மந்திரத்திற்கு ஒப்புவமை வாய்ந்தது.

குறிப்பு:—தோற்கருவிசெய்யும் வருணத்தாரும், அவ்வருணத்துக் கன்னியரை அபுத்தி பூர்வமாய் புணர்பவரும், மதுமாமிசமுண்ணுகிற மாந்தரும், உருத்திராக்ஷத்தைத் தலையிலெடுத்துக்கொண்டு தாங்குவாராகில் துன்பத்தைச் செய்கின்ற வினை யொழிந்து சிவஸ்வரூபமாவர்.

## உருத்திராக்ஷம் தரிக்கவேண்டிய ஸ்தானமும் அதன்பலமும்.

சிகையில் ஒன்றும், சிரசில் முப்பத்தாறும், கண்டத்தில் முப்பத்திரண்டும, மார்பில் ஐம்பதும், கரத்தில் பதினாறும் கரத்தின் மணிக்கட்டில் பன்னிரண்டும், தாழ்வடம் (யெக்ஞோபவீதம்) நூற்றெட்டுமாக வகுத்துத்தரித்து உமாமஹேஸ்வரனை மனதில் நிற்சிந்தையுடன் மானஸபூஜை புரிந்து, யாதொரு ஜீவராசிகளையும் மிதிக்காமல் ஓரடி எடுத்துவைக்கில் ஒரு அஸ்வமேதயாகஞ்செய்த பலனுண்டாகுமென்று கூறப்படுகிறது.

குடுமியில் உருத்திராக்ஷம் அணியில் கோடிபலன்,காதிலணியில் ஒன்பதுகோடிபலன்,கண்டத்திலணியில் ஆயிரங்கோடிபலன்

அஞ்ஞானபூர்வமாய் எவ்விதபாவம் செய்தவர்களானாலும் இறந்துபோகு முடிவுகாலத்தில் சற்று அன்புடன் ருத்ராக்ஷதாரணம் செய்வார்களாகில் காலன் வாதையினின்று நீங்குவதுமல்லாமல், மறுபிறப்புத் தொடராதென்பதும் சுருதிப்பிரமாணம்.

## பிரகடனம்.

தென்ஜில்லாவாசிகளான பலரும் வற்புறுத்தின வேண்டுகோளுக்கிசைந்து, சிவநேசச்செல்வர்களினுபயோகத்தின் பொருட்டு, நாம் நேரடியாய் நேபாளத்தில் உருத்திராக்ஷ வர்த்தகம் செய்யும்கோஸாயிகளிடம் வாங்கி இங்கு கொண்டுவந்து சுத்தப்படுத்தி கடுகெண்ணெயில்மாத்திரம் தோய்த்துப்பதப்படுத்திச்சுயமானநல்லவர்ணம் வந்தவுடனே விற்பனை செய்கிறோம். அப்படித்தயார்செய்த பலவித முகங்களுள்ள உருத்திராக்ஷங்கள் எங்களிடம் விற்பனைக்குச் சித்தமாகவிருக்கின்றன. அவைகளின் விலை விபரங்களை எமக்கெழுதித் தெரிந்துகொள்ளலாம். ஆர்டர்களுக்கு உடனே தபால்மூலம் அனுப்பப்படும்.

விலை:—ஸ்ரீ காசிதாரணைக்கு ஒரு பைசாவும் ஜாஸ்தியாக மாட்டாது. சரக்கு மாதிரியுமப்படியே; இவைகட்குக் கண்டிப்பாய் உத்தரவாதஞ் செய்யப்படும்.

**விலாசம்:—ஸ்ரீ காசிமான்மிய புத்தகசாலை**
திருவாதி—தஞ்சாவூர் ஜில்லா.

இந்நூலின் கண்ணுள்ளதாய

## ஸ்ரீ சைவாகம சுவாயம்புவ ஸ்தலங்கள்.

| நெ. | க்ஷேத்திரம். | மூர்த்தி. | இருப்பிடம். |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீ காசி | விசுவேசர் | பிரசித்தம் |
| 2 | ,, பிரயாகை | சோமேசர் | யமுனையின் தென்கரை. |
| 3 | ,, நைமிசாரண்யம் | தேவதேவேசர் | பிரயாகைக்கு வடமேற்கில் 155 மைல். |
| 4 | ,, கயா | பிரபிதாமஹர் | பிரசித்தம். |
| 5 | ,, குருக்ஷேத்ரம் | தாணுமூர்த்தி | தாணுதீர்த்த வடகரை. |
| 6 | ,, பிரபாஸம் | சசிபூஷணர் | புஷ்கரத்துக்குத்தென்மேற்கு |
| 7 | ,, அட்டகாசம் | மஹாநாதர் | குருக்ஷேத்திரபச்சிமபூமி. |
| 8 | ,, புஷ்கரம் | இரஜோகந்தர் | மதுராவுக்குத் தென்மேற்கு. |
| 9 | ,, அவந்தி | மஹாகாளர் | ஓங்காரத்துக்கு மேற்கு. |
| 10 | ,, சங்குகர்ணம் | மஹாதேஜர் | ஸோணபத்திரா தீரம் |
| 11 | ,, கோகர்ணம் | மஹாபலர் | தலைக்காவேரிக்கு வடமேற்கு 165 மைல். |
| 12 | ,, உருத்திரகோடி | மஹாயோகீசர் | கங்கோற்பத்திக்கு சமீபம். |
| 13 | ,, கேதாரம் | ஈசானருத்திரர் | பதிரிகாச்சிரமத்தை யடுத்தது |
| 14 | ,, இமாலயம் | உருத்திரர் | கேதார சமீபம். |
| 15 | ,, பைரவம் | பைரவர் | குருக்ஷேத்ர பிரதேசம். |
| 16 | ,, பத்ரவடம் | பத்திரர் | கங்காத்வார சமீபம். |
| 17 | ,, கனகலம் | உருத்திரர் | ஹரித்வாரம். |
| 18 | ,, தேவதாருவனம் | தண்டீசர் | நைமிசாரண்யத்துக்கு வடகிழக்கு. |
| 19 | ,, திரிசந்தி | ஊர்த்வரேதர் | ஷை |
| 20 | ,, ஏகாம்பரம் | கிருத்திவாசர் | காஞ்சீபுரம். |
| 21 | ,, காஸ்மீரம் | விஜயர் | இமயமலையின் வடமேற்கு ப்ரதேசம். |
| 22 | ,, பூதேசம் | பஸ்மகாயர் | ஷை வடகிழக்கு ப்ரதேசம் |
| 23 | ,, சப்தகோதாவரி | பீமேசர் | இராஜமஹேந்திரத்துக்கு கிழக்கு. |
| 24 | ,, கைலாசம் | த்ரிபுராந்தகர் | கங்கோற்பத்திக்கு வடமேற்கு |
| 25 | ,, ஹேமகூடம் | விருபாக்ஷர் | கிஷ்கிந்தை சமீபம். |
| 26 | ,, ஹிமஸ்தானம் | கங்காதரர் | இமயமலை. |
| 27 | ,, விரஜா | த்ரிலோசனர் | நாதத்வார சமீபம். |
| 28 | ,, நேபாளம் | பசுபதீசர் | கண்டகீ ப்ரதேசம். |
| 29 | ,, அமரேசம் | ஓங்காரேசர் | நர்மதா தீரம். |
| 30 | ,, ஹரிச்சந்திரம் | ஹரேசர் | கோதாவரிதீரம் |
| 31 | ,, ஸ்ரீசைலம் | ஸ்ரீசைலேசர் | கிருஷ்ணா தீரத்துக்கு தக்ஷிணம். |

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.

ஓம் சுபம்.

# இரண்டாவது அத்தியாயம்.

# ஸ்ரீகாசி, கங்காமான்மியங்கள்.

## ஸ்ரீ காசிமான்மியதிரிசியம்.

இருப்பிடம்:—நெடியகடல்சூழ்ந்த இப்பூலோகத்தில் சர்வ ஜீவகோடிகளும் தெரிசித்து பந்தபாசத்தொடரறுத்து சத்கதியடையும் பொருட்டு, ஆதியந்தரகிதமாயும், பரிபூரணமாயும், துரியாதீதமாயும், சர்வத்துக்கும் சாக்ஷி பூதமாகவும் மனோவாக்குக் காயங்களாலுணரப்படாததாயும், சச்சிதாநந்தமாயும், ஒப்புயர்வற்ற ஒன்றாயாகவும், நிர்க்குண, நிஷ்களங்க, நிரவயவமாயுமுள்ள ஸ்ரீ பரமசிவன், சர்வசத்தி ரூபமாயும், சர்வதேஜோரூபியாயும், சர்வஜீவதயாபரராயும், சர்வலோகரக்ஷணியாயுமுள்ள உமையவளோடுங்கூடி யெழுந்தருளியிருக்கும் சிவ க்ஷேத்திரங்கள்பலவற்றிற்கும் மேலானதாயும் அவைகளெல்லாஞ்சேர்ந்து ஒருங்கமைந்துள்ள இம்மாநகர் கங்கைமாநதியின்பேரில் கல்கத்தாவுக்கு வடமேற்குத் திசையில் 425-மைல் தூரத்திலிருக்கின்றது.

மேலும் ஆரியாவர்த்தமென்னும் இவ்விந்து தேசத்துக்கு ஹிருதயகமலம்போல் (நடுமையம்) மத்தியில் பிரகாசிக்கின்றது. இக்காசியினின்று சற்று வடமேற்குத் திசையாய் சுமார் 120-மைலில் ஸ்ரீமத் அயோத்தியும் அங்கிருந்து சுமார் 100-மைலில் இமயமலையும் வியாபித்திருக்கின்றது.

காசிக்குத்தெற்கே இருபதுமைலிலிருந்து வடக்கே இருபது மைல் வரையில் கங்கா நதியானது தெற்கிலிருந்து வடக்காய் அதாவது உத்தரவாகினியாய் ஓடுகிறது. காசியானது கங்கைக்கு அக்கரை அதாவது மேற்குக் கரையிலிருக்கிறது. காசிப் பட்டணத்துக்கு இரண்டு பக்கத்திலும் அதாவது தெற்கில் அஸிநதியும் வடக்கில் வருணநதியும் வந்து கங்காநதியில் சங்கமமாகிறது. இக்காரணத்தால் இதற்கு "வாராணஸி" என்னும் பெயர் வாய்ந்தது. இவ்விரண்டு நதி சங்கமங்களுக்கும் மத்தியில் கங்காநதியின் மேல்கரையில், தென்வடல் கங்காநதிக்கரையோரமாக மூன்றரை மைலும் கிழமேல் ஐந்து மைலும்கூடி 17½ சதுரமைல் விஸ்தீரணமுள்ளதாயிருக்கின்றது. நாளுக்கு நாள் இப்புண்ணிய புராதனநகர் விஸ்தீரணம் முதலியவற்றில் விருத்தியடைந்து வருகிறது.

நகரின் சிறப்பு:—அயோத்தி-ரோகில்கண்ட் ரெயில்வேயி லுள்ள இந்நகர் ரெயில்வேஸ்டேஷன் ஷை அயோத்தி-ரோகில் கண்ட் ரெயில்வேயும் ஈஸ்ட் இண்டியன் ரெயில்வேயும் கூடுகிற மொகல்சிராய் ஜங்ஷன் ஸ்டேஷனிலிருந்து வடமேற்காக ஏழு மைலிலிருக்கிறது. இக்காசிமாநகருக்கு பெனாரிஸ்ஸிட்டி அல்லது காசி ஸ்டேஷனென்றும், பெனாரிஸ் கண்டோன்மெண்ட் ஸ்டே ஷனென்றும் இரண்டு ஸ்டேஷன்களுண்டு. இராஜ காட்டிலிருக் கிற ஷை ஸிடிஸ்டேஷனில் யாத்திரைவாஸிகள் இறங்கவேண்டும். இவ்விடத்திலுள்ள கங்காநதியின் பாலம் 3508 அடி, அதாவது கொஞ்சங்குறைய முக்கால் மைல் நீளமுள்ளது.

இந்த ரெயில்வேபாலத்தில் நாட்டுவண்டிகள் போவதற்கு தனியாய் ஒருபாதையும், ஜனங்கள்நடந்து செல்வதற்குத் தனி யாய் இரண்டு ஓரங்களிலும் ஒருபாதையும் ஆக மூன்று பாதை களிருக்கின்றன. ஷை வாராவதியின்மேல் தகரக்கூரையினால் மூடப்பட்டும் பாலத்தின் மத்தியில் அங்கங்கே பெஞ்சு முதலிய வீட்டுகளும் கங்கையிலிருந்து தண்ணீர் பைப்புகளும் வைக்கப் பட்டு உட்கார்ந்த காற்று வாங்க சுகமாய் அமைக்கப்பட்டிருக் கிறது பகீரதன்தேர்க்காலிறங்கி அண்டமுடியாத ஆழமுள்ள இந் நதியின் பாகத்தை இதற்கென்று ஸ்பெஷலாய் சீமையில் தயார் செய்துகொண்டு வரப்பட்ட ஒரே ஒரு இரும்பு கர்டரால் ஒரே கண்வாயாகச் சேர்த்து அமைத்து கட்டப்பட்டிருக்கிறது. மதிக்கமுடியாத வெகுகாலத்துக்கு முன் ஆரியர்களான நம் முன்னோர்களால் இப்போதைய பட்டணத்துக்குச் சமீபத்தில் வேறொரு நகரம இருந்திருக்கிறதாக தெரிகிறது. சுமார் 2500 வருஷங்களுக்குமுன்னால் கௌதமபுத்தர் என்பவர் இந்நகரத்தை மத்திய ஸ்தானமாக வைத்துக்கொண்டு பௌத்த மதத்தைப் பரவச்செய்தார். எண்ணூறுவருஷம் வரையில் இந்த பௌத்த மதம் ஓங்கிவந்து மறுபடியும் பூர்வீக மதமாகிய நம்மிந்து மதமே மேம்பாடுள்ளதாய்ப் பரவிற்று. மறுபடியும் 2000 வரு ஷங்களுக்குப்பிறகு மகம்மது கோரி என்னும் துலுக்க அரசன் இக்காசிமாநகரைப் பிடித்துப்பீடித்து அதுமுதல் 600 வருஷம் வரையில் அவர்கள் வசமாகவேயிருந்து சுமார் 150 வருஷங் களுக்கு முன்னால் இப்போதைய நம்காருண்ய பிரிட்டிஷ் அர சாங்கத்தாருக்குக் கொடுக்கப்பட்டது.

அதுமுதல் நம்முடைய மதக்கோட்பாடுகளுக்கு யாதொரு இடஞ்சலுமின்றி கொண்டாடப்பட்டுவருகிறது. இப்போதைய பட்டணத்திலுள்ள வீடுகள் எல்லாம் இரண்டுமாடி அந்தஸ்துக் குக்குறையாத கருங்கல் கட்டிடத்தாலாகியவை. அநேகம், ஆறு,

வழு மாடிகள் வரையிலிருக்கிறது. இயற்கனவே குறிப்பிட்டிருக்கிறபடி கங்கைக் கரையோரமாயுள்ள ஹிந்து மதாசாரங்களுக்குரிய விடிபாகமும், அதற்குமேற்கில் வியாபார வர்த்தகங்கள். கோர்ட் முதலிய கவர்ண்மெண்டு ஹவுஸ்கள், ஐரோப்பியர் வாசஸ்தலம், ராணுவம்முதலியவையடங்கிய கண்டோன்மெண்டு பாகம் என இரண்டு பிரிவினையுடையதாயிருக்கிறது. நம்மவர்களுக்கு எல்லா வேலைகளும் முன் சொன்ன பாகத்திலன்றி பின் சொல்லியதிலொன்றுமில்லை. விடிபாகமாகிய ஸ்ரீ காசிகங்காதீரமானது64(கட்டங்கள்)-காட்ஸ்களையுடையதாயும்அநேக அரண்மனைகள், உப்பரிகைகள், கோடிக்கணக்கான விலைமதிப்புள்ள கம்பெனிகள், ஆயிரக்கணக்கான தேவாலயங்கள், நூற்றுக்கணக்கான தர்மசாலைகள் முதலியவைகளாலும் நிறையப்பெற்றிருக்கிறது. ஷை கங்காதீர முக்கிய காட்ஸ்களிலொன்றும், டவுனுக்கு மத்தியிலுள்ளதுமான பஞ்சகங்கா காட்டில் "மாடு டாஸ்காடியோகரா" என்னும் பெயரினையுடைய இரண்டு பள்ளிவாசல்கள் ஔரங்கஜீப்பென்னும் முகம்மதிய அரசனால் கட்டப்பட்டு பட்டணமத்தியில் பட்டணத்துக்கு ஒரு அழகாக காணப்படுகின்றன. அவைகளினுயரம் 146 அடி.

இஸ்லாமானவர்கள் வசம் நம்மிந்தியவதி அடிமைப்பட்டிருந்தபோது பலகாரணங்களாலும் நம்மிந்துமதம்விருத்தியடையவேதுவில்லாமல் க்ஷீணதசையடைந்திருந்தது. ஆனால் தற்காலத்திலோ, நம்மிந்து தேசத்தின் ஷை இரண்டு முக்கியமான பெரிய மதங்களிலுள்ள ராஜதாந்த்ரீக மதியூகிகள் இவ்விருமதஸ்தர்களுள்ளும் பரஸ்பரம்நட்பைவிருத்திபண்ணி சகோதரபாவனையை விளைவித்துவருவதால், நம்மிந்தியவதியின் ஜீவநாடியாகிய ஹிந்துமதம் நாளடைவில் அதன்பூர்வ பூர்ணமாசற்ற நன்னிலைமையையெய்துமென நம்புகிறோம். இவ்வாறு இவர்களுள் ஒற்றுமையுணர்ச்சியை யுற்பவித்து விருத்தியடைந்து வருவதின் முக்கிய காரணம் நம்மாக்ஷிமைதங்கிய பிரிடிஷ் கெவர்ண்மெண்டாரின் இங்கிலீஷ்(Western Education) படிப்பேயாதலானும், மேலும் சென்ற 1858-ம் வருஷத்தில் நம் விக்டோரியா மகாராணியவர்களால் நமக்களித்திருக்கும் ஸ்வாதந்திரியங்களாலுமாகையால் நாமெப்போதும் நம்முடன்பிறந்த ராஜவிசுவாசத்தை இக்காரணத்தாலின்னுமதிகமாய் விருத்திசெய்து நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

கிறிஸ்துவமதப்பாதிரிமார்கள்ஏராளமான பொருள்முதலியவற்றால் விடா முயற்சியுடன் நம்மிந்து மதத்தைப் பற்பல தந்திரங்களால் ஆக்கிரமித்தாலும், எப்படி சீதையின் சற்குணங்கள்

இராவணனால் அபகரிக்கப்பட்ட பிறகு பிரகாசித்தனவோ அது போல் விளங்குவதும், நம்புராதனமதத்தின் வல்லமையையும் சர்வோத்கிருஷ்டத்தையும் தெளிவுறச் செய்யவில்லையா! சுவாமி விவேகாநந்தரால் அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய தற்காலத்து நாகரீகம் மிகுதியாயுள்ள தேசங்களில் நம்மிந்துமதமே உலகத்தின் சர்வ மதங்களுள்ளும் சிலாக்கியமுடையதென்று "உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கிஸ்தாபிக்கப்பட்டிருப்பதால் இவர்களும் மகம்மதியரைப்போலவேஹிந்துக்களிடத்தில் சகோதரபாவனையை அதிகமாய் விருத்திசெய்து வருவது தற்கால இங்கிலீஷ் படிப்பின் முறைமையும் பிரதிப் பிரயோசனமுமாகும். மேலே சொன்ன மகம்மதியரிடமிருந்து நம் கனம்பொருந்திய பிரிடிஷ் இராஜாங்கத்தாரின் ஆளுகைக்கு வந்தகாலமாகிய சென்ற 150 வருஷத்துக்குள்ளாகத் தான் இப்போதிருக்கிற ஸ்ரீவிசுவனாதஸ்வாமி தேவாலயமுள்பட சமஸ்த தேவாலயங்களும், வாபி, கூப, தடாகாதி தீர்த்தங்களும் தர்மசாலைகளும், சுருக்கமாக:—மதசம்மந்தமான ஒவ்வொரு கட்டிடமும் வர வர நாளடைவில் கட்டப்பட்டுக்கொண்டு வந்தவைகளாகும். இவ்வளவு பெரிய பட்டணத்தில் மதசம்மந்தமில்லாதகட்டிடம் "மான் மந்திர கண்காக்ஷிசாலை ஒன்றே ஒன்றுதான் உளது. காசியில் காணப்படும் ஒவ்வொரு லிங்கத்திற்கும் வாபி, கூப, தடாகங்கள் முதலிய ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு புராணோக்தப்படி தேவலோகம், பூலோகம், பாதாளலோகமென்னும் இம்மூன்று லோகத்திலுமுள்ள பிரம்மா, விஷ்ணு, ருத்திராதி சர்வ தேவதைகளும் சமஸ்ததீர்த்தங்களும் ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வரரையும், கங்கையையும் வந்தடைந்திருக்கிறதாக ஏற்பட்டிருக்கிறபடி மூர்த்திகளும் தீர்த்தங்களுமாய் ஊசிகூடகுத்த இடமில்லாமல் நிறைந்திருக்கின்றன. ஆகையால் தான் யாத்திரையாகப் போகிறவர்கள் ஒவ்வொரு மூர்த்தியையும் தீர்த்தத்தையும் சேவிக்கப்போதுமான சாவகாச காலமேற்படுத்திக் கொள்வ தசாத்தியமென்று கருதியே எல்லாமூர்த்திகளும் ஒருங்கமைந்துள்ள (விஸ்வம்=எல்லாம், ஈஸ்வரன்=மேலானவன்) ஸ்ரீ விஸ்வேஸ்வரரையும், சாகராதி சமஸ்த தீர்த்தங்களையும் தன்னுள்ளடக்கிய ஸ்ரீமத் கங்கையையும் முக்கியமானதாகக் கொள்ளப்பட்டு வருகிறது. ஆனால் போதுமான சாவகாச மேற்படுத்திக் கொண்டு அதாவது கர்ப்பவாசகாலமாகிய பத்து மாதத்துக்குக் குறையாமலிருந்தாலொழிய, ஒவ்வொரு உட்பிரிவினையாகிய யாத்திரையை செய்து முடிக்க இயலாது. இது காரணம் பற்றியே கர்ப்பவாசகாலம் ஸ்ரீகாசியில் வாசஞ்செய்ய வேண்டுமென்பது. ஆதிவிஸ்வேஸ்வரர்

தேவாலயமானது இப்போதுள்ள விஸ்வேஸ்வரராலயத்துக்கு 150-கஜம் தூரத்திலிருக்கின்றது. இப்போதுள்ள விஸ்வேஸ்வரராலயம் 10-கஜசச்சவுக்கமான கருங்கல்லும் சந்திரகாந்தக் கற்களுமிழைத்ததாயும் தங்கத்தாலாகிய விமானமும் நவரத்தினக் கற்களிழைத்த ஸ்தூபியும் திரிசூலமும் விருஷபத்துவஜமுமுடையதாயிருக்கிறது. இம்மண்டபத்தின் மத்தியில் விசுவேஸ்வரலிங்கம் திரிசியம் சுமார் ஒருமுழம் உயரமுள்ளதாயும், முப்பட்டைகளோடு கூடினதாயும், அம்மண்டபத்தின் தளவரிசை மட்டத்துக்குட் பட்டதாயுமிருக்கிறது. இம்மஹாலிங்கம் சுத்தமான சாளக்கிராம சிலையானபடியால் உயர்ந்த கறுநிறமுடையதாயும், எக்ஞோபவீத தாரணமுள்ளதாயும், கற்பூரஹார்த்தி செய்வித்து லிங்கச்சிலையின் ஊடே உற்றுப்பார்க்குமளவில் சுத்த சத்துவ வர்ணத்தோடுங்கூடிய விருஷபாரூடராய் ஸ்ரீபரமசிவனுமையுடன் மூர்த்திகரித்து விளங்காநிற்கின்றார். இம்மண்டபத்துக்கு நான்கு பக்கத்திலும் வாசல்கள்; ஜனங்கள் எலலா வாசல்களின் வழியாகவும் வந்து கொண்டும் போய்க் கொண்டுமிருப்பார்கள். மஹாந்நியாசம், ருத்திரபாராயணம் முதலியவைகளால் அவிடமிருக்கும் வேதியரைக்கொண்டு யதோக்தமாயும் இஷ்டப்படிக்கும் அபிஷேகம் பூஜைகளைச்செய்துகொள்ளலாம். கற்பூரஹார்த்தி, மற்ற நைவேத்தியங்கள் இவைகளுக்கேற்பட்டிருக்கிற ஒன்று முதல் 7 ரூ வரையிலுள்ள கட்டணங்களை அச்சந்நிதியிலிருந்து வரும் உரிமைக்காரர்களான பண்டாக்களிடத்தில் கொடுக்கவேண்டும். மற்றப்படி சாமானியமாய் பிரதிதினமும் கங்காபிஷேக நைவேத்தியாதிகளை அவரவர்கள் செய்து கொள்ளலாம்; சாதாரணமாய் ஜனங்கள் கங்காநதியில் ஸ்நானஞ்செய்து ஒரு செம்பில் கங்கையை எடுத்துக்கொண்டு அதில் ஒரு பைசா அல்லது ½ பைசாவுக்கு (இவிடம் ஒரு பைசாவென்பது ஒருகாலணு) புஷ்பமும், இலந்தை, கொய்யா, மாதுளை, வில்வம் முதலிய பழங்களை (பழவர்க்கங்கள் கூடியவரை மலிவாயிருக்கும்) நிவேதனத்திற்கும் வாங்கிக்கொண்டு போய், போகும்போதே மார்க்கத்திலுள்ள அளவிறந்த லிங்கமூர்த்திகளுக்கு ஒவ்வொரு உத்தரணி கங்கையும் ஒவ்வொரு புஷ்பமுமாக சமர்ப்பணஞ் செய்துகொண்டு போய் கடைசியில் ஸ்ரீவிஸ்வேஸ்வாருக்கு அபிஷேகம்பூஜை ஸ்தோத்திரங்களுடன் தரிசனம் செய்து, பலாதிகளை விஸ்வேஸ்வர லிங்கத்தைச் சுற்றிலும் கட்டப்பட்டிருக்கிற விஸ்தாரமான ஸ்வர்ண ஆவுடையாருக்குள் (சுமார் 1½ சதுரகஜமும் ஒழு முழ ஆழமுமுள்ளது) போட்டு நிவேதனம் செய்து தக்ஷிணையையும் ஒரு பைசாவுக்குக்

குறையாமல் அதற்குள் போட்டுவிடவேண்டியது. பிரபுக்கள் ஆயிரக்கணக்காயும் செலவழிப்போருண்டு.

இம்மூலஸ்தான மண்டபத்தைச் சுற்றி ஒருப்ராகாரமிருக்கிறது, அந்தப்ராகாரத்தில் பல லிங்கங்களும், சக்திகளும் திவ்ய தேஜஸ்ஸுடன் ஜ்வலிக்கின்றன. இந்தப்ராகாரத்துக்கு வெளியில் ஞானவாபியும் முக்தி மண்டபமுமிருக்கின்றன. இந்த ஞான வாபி தீர்த்தத்தைப் புரோக்ஷணாதிகள் செய்துகொண்டு இம்முத்திமண்டபத்தில் ஜபஞ்செய்யாதவர்களுக்கு விசுவனாதரைத்தரிசித்த பலன் கிடையாது. இந்த மூன்றுவதான வெளிப் பிரகாரத்திலும் அநேக திருநாமங்களோடுகூடிய மூர்த்திகளிருக்கின்றன. விஸ்வேஸ்வரர் ஆலயம் தனிமையாயிருக்கும்போது சிறியதாகவிருக்கிறதேயன்றி அவ்வாலயத்தைச்சுற்றி எத்தனையோ கணக்கிறந்த மூர்த்திகள் திருக்கோயில்களோடுங்கூடியிருப்பதால் அவைகளையுஞ் சேர்த்துப் பார்த்தால் பெரிதாகவே இருக்கும். விசுவனாதராலயத்துக்கு சுமார் 50 கஜத்தில் ஸ்ரீ அன்னபூர்ணி ஆலயமும், அங்கிருந்து 50 கஜ தூரத்துக்குள் துண்டி விநாயகர் சந்நிதியுமிருக்கின்றது. விஸ்வநாதராலயத்தைவிட அன்னபூர்ணி ஆலயம் சற்று பெரிதாயும், வேலைப்பாடுகளுள்ளதாயும் அழகாயு மிருக்கின்றது. மேற்கூறிய முத்தி மண்டபத்திலும் அன்னபூர்ணி ஆலயத்திலும் நான்கு பக்கங்களிலு முள்ள மண்டபங்களில் புராணாதி சிரவணங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. ஷை இரண்டு ஆலயங்களும் சென்ற நூற்றுண்டில் புனு ஸ்ரீமந்தனுல் கட்டப்பட்டவை; அவைகள் தசாஸ்வமேத கட்டத்துக்குச் சமீபம், அங்கிருந்து அரை மைல் தூரத்தில் நாட்டுக்கோட்டை செட்டிப் பிள்ளைகளால் மிக சிரத்தையுடனும் அழகுடனுங் கட்டப்பட்ட ஸ்ரீ விசாலாக்ஷி தேவாலயமிருக்கின்றது. இவ்வாலயம் மீர்காட்டில் தனியாகவிருக்கின்றது. பட்டணத்தின் தென்கோடியான துர்க்காகாட்டிலுள்ள அழகான குளத்துடன் கூடிய துர்க்கையம்மன் தேவாலயமும் சென்ற நூற்றுண்டில், பவானி என்னும் மராட்டி ராணியால் கட்டப்பட்டது. காசியில் தென்னுட்டைப்போல் பிரம்மோற்சவங்களாவது மற்ற சில்லறை உற்சவங்களாவது கிடையாது. கேதாரகட்டத்திலுள்ள ஸ்ரீகேதாரேசுவரருக்குமட்டும் ஒருவாறு உற்சவங்கள் நடைபெறுகின்றன. பூர்வகாலத்தில்இந்த துர்க்கா சந்நிதிக்கு நரபலிகள்கூட கொடுத்துவந்தார்கள். அந்தக்கொடுமைகளையெல்லாம் நம்காருண்ய கெவர்ண்மெண்டார் நிறுத்திவிட்டார்கள்.

கங்கா தீரத்தில் கட்டப்பட்டிருக்கிற முன்சொன்ன 64 காட்களில் எதுவும் அதிக (கிலமாய்) பழயதாயில்லை. நதியின் பிர

வாகத்தினுல் எந்த காட்டும் இரண்டொரு தலைமுறைக்குமேல் நிலைப்பதில்லை. ஷை காட்ஸ் 64 லும் முக்கியமானவை ஐந்தே யாகும். 1. தசாஸ்வமேத காட். 2. அஸிஸங்கம் காட், (அஸிநதி கங்கையில் கலக்குமிடம்) 3. மணிகர்ணிகா காட். 4. பஞ்சகங்கா காட். 5 வருணசங்கம காட் அதாவது வருணை நதி கங்கையிற் கூடுமிடம். தசாஸ்வமேத காட்டென்பதற்கு சதுர்முகப் பிரம்மா சிவபிரானுடைய அனுக்கிரகத்தால் இந்த இடத்தில் தசம்=பத்து, அஸ்வம்=குதிரை, தசாஸ்வமேத மென்ற யாகஞ்செய்தமையால் காரணப் பெயராயிற்று. மணிகர்ணிகா காட், இந்தக் கட்டத்தில் மணி=இரத்தினம், கர்னம்=காது, சிவனுடைய காதின் குண்டலம் இவிடத்தில் நழுவிவிழுந்தமையா லிப்பெயர் வாய்ந்தது. இந்த காட்டில்தான் காசிமரணமடைந்தோரை தகனஞ்செய்யவேண்டும். இரண்டாவதாக ஹரிச்சந்திர காட்டிலும் செய்யலாம். வருண சங்கம காட்—இதில் வருணைநதி கங்காநதியில் சங்கமமாகுமிடம். கூபம்=கிணறு ரூபமாயிருக்கப்பட்ட தீர்த்தங்களில் முக்கியமானவை:—இயற்கனவே சொன்ன ஞானவாபி 1. இதில் பரமசிவன் சதா வசித்துக்கொண்டிருக்கிறுர். இரண்டாவது அமிருத குண்டம் இதின் தீர்த்தப் பிராசனத்தினுலும் புரோக்ஷணத்தினுலும் தேகத்தின்பேரிலுள்ள தோலைப்பற்றிய சமஸ்த வியாதிகளும் (குஷ்டரோகமுள்பட) தீர்ந்து தீர்க்காயுசைத் தருகின்றது. மூன்ருவது 'நாககுண்டம்,' எப்பேர்ப்பட்ட பாம்புகடி முதலிய விஷசம்மந்தமான ரோகங்களெல்லாம் இத்தீர்த்தத்தின் பிராசனுதிகளால் பஞ்சாய்ப் பறந்துவிடுகின்றன. தவிரவும் இதில் ஸ்நானம் பண்ணினவர்களை பாம்பு=நாகசர்ப்பம் தீண்டினுலும் விஷம் ஏறுது. இவ்விடத்தில் வருஷத்துக்கொருமுறை நடக்கும் உற்சவ சமயத்தில் காசியிலுள்ள அனைவரும் வந்து ஸ்நானம் செய்கிறுர்கள். புண்ணிய தடாகங்களில் முக்கியமானவை.—மணிகர்ணிகா தடாகதீர்த்தம், இது மணிகர்ணிகை கட்டத்துக்குச் சமீபத்திலுள்ளது. இதில் காசிக்குப் போகும் எந்த யாத்திரிகர்களும் எவ்வளவு அவசரமாயிருந்தாலும் ஸ்நானம் செய்யவேண்டிய கடமை. பைசாசமோசன தீர்த்தம், அதற்குச் சமீபத்திலுள்ள அகஸ்திய குண்டம் இவைகளில் வருஷத்துக்கொருதரம் காசியிலிருப்போரும், பைசாசபாதைகளால் பீடிக்கப்பட்டு வெளியிலிருந்து வருவோரும் தவருமல் ஸ்நாநனம் செய்துவர, மற்றவர்களும் ஸ்நானம்செய்வதால் பைசாச பாதைகளணுகாவண்ணம் ஒரு ரக்ஷாபந்தனமாகிறது.

# ஸ்ரீ காசியிற் செய்யவேண்டிய முக்கிய யாத்திரைகள்.



கர்ப்ப வாசகாலம் காசிவாசியாயிருந்து செய்ய வேண்டிய யாத்திரைகள் இருபத்து நான்கு வகையுள்ளனவாயிருந்தாலும் அவ்வளவு சாவகாசம் பெரும்பான்மையோருக்குக் கிடையாமை பற்றி அன்னோர்களுக்கு மிகவும் அத்தியாவசியக (முக்கியமான) யாத்திரைகள் நித்திய யாத்திரையும் பஞ்சக்ரோச யாத்திரையுமாகிய இரண்டேயாம். மேற்கூறிய இருபத்துநான்கு வகை யாத்திரைகளும் அவைகளின் பலாபலன்களும் அடியிற் குறித்தவாறு காண்க :—

1. நித்திய யாத்திரை—தருமார்த்த காமியங்கள்.
2. பஞ்சக்ரோஸ யாத்திரை—க்ஷேத்திரத்திற் செய்த சர்வ பாப நிவர்த்தி.
3. அஷ்ட பைரவ யாத்திரை—க்ஷேத்திரத்திற் செய்த சர்வ பாப நிவர்த்தி. (பஞ்சக்ரோஸ யாத்திரை செய்யமுடியாத சந்தர்ப்பத்தில் இது செய்யத்தகுந்தது).
4. அறுபத்து நான்கு யோகினி யாத்திரை :—உடனே புத்திர லாபம்.
5. ஸப்தாவரண விநாயகர் யாத்திரை—சர்வவிக்கின நிவர்த்தி.
6. ஸப்தப்ராகாரத்துக்கும் மத்தியிலுள்ள விநாயகர் யாத்திரை—சகல விக்கின நிவர்த்தி பலன்.
7. திதி வார யோகங்களிற் செய்யும் யாத்திரை—தேகாதி பகிர்முக தொண்ணூற்றறு வகை சித்திகள்.
8. ஏகாதச மகாருத்திரயாத்திரை—க்ஷேத்தி ரோச்சாடன பய நிவர்த்தி.
9. அந்தர்க்கிரகயாத்திரை—இம்மைமறுமைசௌக்கியபலன்.
10. சப்தரிஷி யாத்திரை—சகல புண்ணிய பலன்.
11. ஸைலேஸ்வரர் முதல் பதினன்கு ஸ்தல யாத்திரை—ஸாயுச்சிய முத்தி.
12. துவாதசாதித்திய யாத்திரை—சமஸ்தரோக நிவர்த்தி.
13. ஸப்தபுரி யாத்திரை—யமபயங்கர நிவர்த்தி.
14. ஓங்காரேஸ்வரர் முதல் பதினன்கு ஸ்தல யாத்திரை—சிவலோகப் பிராப்தி.

15. அஷ்ட மஹாலிங்க யாத்திரை—ஆயிரத்தெட்டு குற்றங் கள் நிவர்த்தி.
16. அமிருதேஸ்வரர் முதல் பதினான்கு ஸ்தல யாத்திரை—ஸாயுச்சியப்பிராப்தி.
17. தக்ஷிண திக்கிற் செய்யும் யாத்திரை—துரிய ஞானப் பிராப்தி
18. நவ கௌரீ யாத்திரை—ஸர்வ ஸௌபாக்கிய பலன்.
19. நவதுர்க்கை யாத்திரை—சர்வ காரிய ஸித்தி.
20. வடதிக்கு யாத்திரை—சென்ற ஜென்மங்களின் பாப நிவர்த்தி.
21. பஞ்சதீர்த்த யாத்திரை—ஸாரூப பதவி பிராப்தி பலன்.
22. மாதந்தோறும் திதிகளிற் செய்யவேண்டிய யாத்திரை—கைவல்ய முத்தி, ஞான விசேஷ பல பிராப்தி.
23. வார யாத்திரை—சர்வாரிஷ்ட நிவர்த்தி பலன்.
24. யோகயாத்திரை—அணிமாதி அஷ்டயோகபலப்பிராப்தி.

காசிவாசியாய் காசியில் 10ஸ்ரீ தங்கியிருந்து மேற்கூறிய இருபத்து நான்கு வகை யாத்திரைகளும் செய்யவேண்டியவர்களாயிருக்க, சீக்கிர காலத்தில் திரும்பவேண்டியவர்கள் முதலில் சொன்ன இரண்டு யாத்திரைகளை மட்டும் யதோக்தமாயும் அந்தரங்க சுத்தியாயும் செய்தால் மற்ற 22 வகை யாத்திரைகளும் அவைகளுள்ளடங்கி எல்லா யாத்திரைகளும் செய்த பூர்ண பலத்தை அடைகிறார்கள் என்று சூதமாமுனிவன் பிரதிஞ்ஞை செய்து காசிகண்டத்திலும் வாராணஸி மாகாத்மியத்திலும் கூறுகிறார்.

அத்யாவஸியமான பஞ்சக்ரோஸ யாத்திரையைச் செய்ய வாஸ்தவத்தில் சக்தியற்றவர்களுக்குப் பரியாயமான அஷ்ட பைரவ யாத்திரையையும், புத்திரசம்பத்தில்லாத யுவதிகள் புத்திர சம்பத்தை யடையும்படியான அறுபத்து நான்கு யோகினி யாத்திரையும், எடுத்த காரியம் கைகூடும்படியான ஸப்தாவரண விநாயகர் யாத்திரையும் இங்கு தர்ஜிமா செய்தெழுதப் படுகின்றன. மிகுந்த யாத்திராக்ரமங்களை அபேக்ஷிக்கும் காசிவாசஞ்செய்யும் விருப்பமுடைய யாத்திரைவாசிகள் ஆயிரத்துக் கொருவர் கூட இருப்பதரிதாகையால் அவர்களுக்காக இங்கு இடத்தை வீணாக்காமல் மேற்குறித்த ஐந்துவகை முக்கிய யாத்திரைகளை மட்டும் அடியிற் கூறுகின்றோமாயினம்.



## முதலாவது :—நித்திய யாத்திரை.

பஞ்சபஞ்ச உஷக்காலத்தில் துயிலெழுந்து கங்கைமா நதியின்கண் ணுளதாய மணிகர்ணிகா காட்டில் யதோக்தமாய் ஸ்நானஞ்செய்து ஸ்ரீ காசிவிசுவேஸ்வரர் சந்நிதானத்திலுள்ள ஞானவாபிக்குப்போய் அங்கிருக்கும் பிராமணர்களால் சங்கலபம் சொல்லக் கேட்டுக்கொண்டு யாத்திரை செய்யவேண்டியமுறை அடியில் வருமாறு :—

1. ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வரர், 2. பிந்துமாதவர், 3. துண்டிமகாகணபதி, 4. தெண்டபாணி, 5. காலபைரவர், 6. காசி 7. குகை 8. கங்கா (பகிரதகங்கை வருவதற்கு முந்தியேயுள்ளது) 9. பவானி, 10, மணிகர்ணிகா ; இந்த பத்து சன்னிதானங்களையும் மேற்சொன்ன வரிசைப்படி கிரமமாய் தரிசனாதிகள் செய்யவேண்டியது சுலோகம்:—விஸ்வேசம், மாதவம், துண்டிம், தண்டபாணிஞ்ச, பைரவம், வந்தேகாசீம், குஹாம், கங்காம், பவானீம், மணிகர்னிகா.

இவைகளைச்சுற்றி வருவதற்கு சுமார் 3 மைலாகும், இதற்கு வாஸ்தவத்தில் சக்தியற்றவர்கள் அடியிற்கூறும் (எல்லாஞ்சேர்ந்து அரைமைலுக்கு மேலாகாது) மற்றோர்வித நித்திய யாத்திரையை யதோக்தமாய்ச் செய்வதனாலேதே பலனையடைகிறார்கள்.

1. ஆதித்தியாயநம: — அக்ஷயவடம்
2. த்ரௌபதியேநம: — ஷை
3. விஷ்ணுவேநம: — விஸ்வேஸ்வரருக்குச் சமீபம்
4. தண்டபாணியேநம: — ஞானவாவிக்குமேற்கு
5. மஹேஸ்வராயநம: — ஞானவாவிக்குத்தென்மேற்கு
6. துண்டிராஜாயநம: — துண்டிமஹாகணபதி
7. ஞானவாபியேநம: — முன்சொன்னஞானவாவி
8. நந்திகேஸ்வராயநம: — ஞானவாவிக்குக்கிழக்கு
9. மஹாகாலேஸ்வராயநம: — ஷை
10. தாரகேஸ்வராயநம: — ஞானவாவிக்குத்தென்கிழக்கு
11. புனர்தண்டபாணியேநம: — முன்சொன்னதண்டபாணி
12. விஸ்வேஸ்வராயநம: — சர்வப்பிரசித்தம்
13. அன்னபூர்ணியேநம: — ஷை

## 11-வது பஞ்சக்ரோஸ யாத்திரை.

காசியாத்திரை செய்யும் ஒவ்வொருவரும், ஸ்ரீ காசியில் காசிவாஸியாயிருந்தகாலத்தில் மனோவாக்குக்காயங்களாற்செய்தபாவங்களைப்போக்கி காசிவாஸபூர்ண பலனையடையும் பொருட்டு ஒவ்வொருவரும் தப்பாமல் இந்த யாத்திரை செய்யவேண்டும். மற்ற க்ஷேததிரங்களில் செய்த எல்லாபாபங்களும் புண்ணிய க்ஷேத்திரத்தில் நீங்குகின்றன, புண்ணிய க்ஷேத்திரங்களிற் செய்தவை காசியில் நிவர்ததியடைகின்றன; காசியில் செய்த பாவங்களோ வென்றால் இப்பஞ்சக்ரோஸயாத்திரையால் பறந்து விடுகின்றன, எவ்வளவு சிஷ்டாசார சீலமுடையவனாயிருந்தாலும் தேகசம்மந்தமான உபாதிகளைக் கழிப்பது முதலிய பாவங்களைச்செய்யாமலிருக்கமுடியாது. ஆகையால் இந்தயாத்திரை செய்யாதவர்களுக்கு காசிவாஸபலன் முற்றிலும் கிடைக்காது. இந்தயாத்திரையால் ஸ்ரீ காசிபட்டணத்தை பிரதக்ஷணம் செய்வதில் ஐந்து க்ரோஸ தூரம் மொத்தததில் கூடுதலாகிறபடியால் இப்பெயர் வாய்ந்தது; மேலும் இந்த யாத்திரையை யதோக்தமாய்ச் செய்து முடிப்பதற்கு ஐந்துநாளானுலும், அவசரமுடையவர்களும், சக்தியுடையவர்களும எவ்வளவு சீக்கிரமாகவாயினும் செய்யலாம். ஆனாலிது மத்திமம். அரசர்கள், பிரபுக்கள், ஆசாரியாள், முதலியவர்களும் வியாதிஸ்தர், துர்ப்பலமுள்ளவர்கள், குழந்தைகள் முதலியவர்களும், வாகனங்கள் மூலமாய் யாத்திரை செய்யலாம். எந்த விதத்திலும் இந்த யாத்திரை செய்யத் தவறக்கூடாது. இந்த யாத்திரை செய்ய ஐப்பசி, கார்த்திகை, மார்கழி மாதங்களே உததமம்; மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்கள் மத்திமம, இவைகளையனுசரித்து இப்பிராந்தியங்களினின்றும் காசி யாத்திரை செய்யப்புறப்படுகிற புண்ணியாத்மாக்களும் யாத்திரை தொடங்குவது எல்லா விஷயங்களுக்கும் சௌகரியமாயிருக்கின்ற தென்பதையும் இங்கெடுத்துக கூறலாயிற்று, இப்பஞ்சக்ரோஸ யாத்திரை செய்ய உத்தேசிக்கிறதினத்திற்கு முதல் நாளில, சர்வவல்லமையும் மஹிமையும் பொருந்தியவும் சர்வகாரிய வித்தியையுமளிக்கவல்ல ஸ்ரீ துண்டிராஜ மகாகணபதிக்கு அனபுடனும மிக்கபக்தி சிரத்தையுடனும் இருபத்தொருமோதகத்துக்குக் குறையாமல் மோதக நிவேதனஞ்செய்து கிரமப்படி தரிசிதது வணங்கி அன்றையதினம் ஹவிஸ்போஜனமும் நித்திரையுஞ் செய்து, மறுநாள் உஷக்காலததில் கங்காஸ்நானஞ்செய்து விஸ்வேஸ்வரர், அன்னபூரணியைத் தரிசித்து முத்திமண்டபத்திற்குப் போய் அவிடத்துள்ள வேதியர்களால் சங்கற்பஞ்

செய்துகொண்டு ஏழைகளுக்கியன்றமாத்திரம் தருமங்களைச் செய்து சர்வஜீவகருணை முதவாரிதியனைய ஸ்ரீ அன்னபூரணி சமேதவிசுவேஸ்வரரை மனதில் நீங்காமல் தியானித்துக்கொண்டு ஸ்ரீ விஸ்வேஸ்வரரையும் அன்னபூரணி தேவியையும் யதோக்தமாய் பிரதக்ஷிண நமஸ்காரங்களுடன் தரிசித்து அங்கிருந்து தண்டபாணீசுவரரையும், பைரவக்கடவுளையும் தரிசித்த பிறகு தடஸ்தமாய் சமுத்திரம்போல புஷ்பவகைகளால் நிறைந்துள்ள இது காரணம் பற்றியே சில ஸ்திரீ ஜாதிகள் முதலானவர்கள் காசியிலுள்ள கங்கையை சமுத்திரமென்றும் ஓட்டமில்லையென்றும் எண்ணியிருக்கிறார்கள் போலும். பரமசிவனது ஆக்ஞையினால் இக்காசி பஞ்சக்ரோஸத்துக்குள் இம்மாதிரி பகிர்முகத்தில் தடஸ்தமாயிருக்கும்படியா (யாத்திரிகர்களாய் வந்து ஸ்நானஞ்செய்யும் குழந்தை குட்டிகள் முதலானவர்களுக்கனுகூலமாயிருக்கும்பொருட்டு) யும் அந்தர்வாகினியாய் சலித்துக்கொண்டு மிருக்கிறாள். மேலும் கங்கையானவள் தேவலோகத்தினின்றும் பரமசிவன் திருச்சடையாகிய இமயமலையினின்றும் அதிவேகமாய்ப் பிரவகித்துவர ஸ்ரீகாசியினருகில் வரவும் பயபக்தி விசுவாசத்துடன் பொறுமையாயிருக்கிறாளென்றும் அறிக. மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து அவிடத்துள்ள மணிகர்ணிகேஸ்வரரையும், சித்திவிநாயகரையும் தரிசித்துக்கொண்டு கங்கைக் கரைமார்க்கமாய்த்தெற்காக நோக்கி ஸ்ரீகாசியம்பதியை பிரதக்ஷிணஞ்செய்துகொண்டு போகும்போது மார்க்கத்தில் தெரிசிக்க வேண்டிய ஸ்தலங்கள், மூர்த்திகள், தீர்த்தங்கள் முதலியன.

| | | |
|---|---|---|
| 1. | மணிகர்ணிகாயநம: | மணிகர்ணிகைகட்டம் |
| 2. | மணிகர்ணிகேஸ்வராயநம: | ,, |
| 3. | சித்திவிநாயகாயநம: | ,, |
| 4. | கங்காகேசவாயநம: | லளிதாகட்டம் |
| 5. | லளிதாதேவியைநம: | ,, |
| 6. | ஜாரஸங்தேஸ்வராயநம: | மீர்கட்டம் |
| 7. | சோமேஸ்வராயநம: | மான்மந்திரம் |
| 8. | தாலப்யேஸ்வராயநம: | ,, |
| 9. | சூலடங்கேஸ்வராயநம: | தசாஸ்வமேதகட்டம் |
| 10. | ஆதிவராகேஸ்வராயநம: | ,, |
| 11. | தசாஸ்வமேதேஸ்வராயநம: | ,, |
| 12. | வந்திதேவியேநம: | தஸாஸ்வமேதகாட் |
| 13. | சர்வேஸ்வராயநம: | பாடேகட்டம் |
| 14. | கேதாரேஸ்வராயநம: | கேதாரகட்டம் |
| 15. | ஹனுமந்தேஸ்வராயநம: | ஹனுமந்தகட்டம் |

| | | |
|---|---|---|
| 16. | லோலார்க்காயநம : | பதியினிகட்டம் |
| 17. | அர்க்கவிநாயகாயநம : | ,, |
| 18. | சங்கமேஸ்வராயநம : | அஸிசங்கமம் |
| 19. | துர்க்கைவிநாயகாயநம : | ,, |
| 20. | துர்க்கைதேவியேநம : | ,, |
| 21. | விஷ்வக்ஸேனேஸ்வராயநம : | மார்க்கத்தில் |

## முதலாவது நாள் தங்குமிடம்:—கர்த்தமஹேசுவரம்.



| | | |
|---|---|---|
| 1. | கர்த்தமகேஸ்வராயநம : | கர்த்தமகேஸ்வரம் |
| 2. | கர்த்தமதீர்த்தாயநம : | ,, |
| 3, | கர்த்தமகூபாயநம ; | ,, |
| 4. | சோமநாதாயநம : | ,, |
| 5. | விருபாக்ஷாயநம : | எதிர்ப்பக்கத்தில் |
| 6. | நீலகண்டாயநம : | ,, |
| 7. | நாகநாதாயநம : | ,, |
| 8. | சாமுண்டாயநம : | ,, |
| 9. | மோக்ஷஸ்வராயநம ; | தோட்டத்தில் |
| 10. | கருணேசுவராயநம : | ,, |
| 11. | வீரபத்ரேசுவராயநம : | எதிரில்தோட்டத்தில் |
| 12. | விகடாக்ஷதுர்க்காயநம : | ,, |
| 13. | உன்மத்தபைரவாயநம : | ,, |
| 14. | நீல்கணயநம : | ,, |
| 15. | காடகூடாயநம : | ,, |
| 16. | விமலதுர்க்காயைநம : | எதிர்ப்பக்கத்தில் |
| 17. | மஹாதேவாயநம : | ,, |
| 18. | நந்திகேஸகணயநம : | ,, |
| 19. | பிருங்கிரிஷகணயநம : | எதிர்ப்பக்கத்தில் |
| 20. | கணப்பிரியாயநம : | ,, |
| 21. | விருபாக்ஷாயநம ; | கௌராக்கௌ |
| 22. | யக்ஷேசுவராயநம : | ,, |
| 23. | விமலேஸ்வராயநம : | ,, |
| 24. | மோக்ஷதாயைநம : | ,, |
| 25. | ஞானதேவாயநம : | கௌராக்கௌ |
| 26. | அமிர்தேஸ்வராயநம : | ,, |
| 27. | கந்தர்வசாகராயநம : | பீமசண்டிதோட்டத்தில் |

## இரண்டாவது நாள் தங்குமிடம்:—பீமசண்டி.

| | | |
|---|---|---|
| 1. | பீமசண்டிதேவியைநம: | பீமசண்டி |
| 2. | சண்டவிநாயகாயநம: | ,, |
| 3. | ரவிரக்தாக்ஷகந்தர்வாயநம: | ,, |
| 4. | நரகார ணவதாரக சிவாயநம: | ,, |
| 5. | ஏகபாத கஞுயநம: | ,, |
| 6. | மஹாமீ யாயநம: | எதிரில் தீர்த்தக்கரையில் |
| 7. | பைரவாயநம: | எதிரில் தோட்டத்தில் |
| 8. | பைரவ்யைநம: | ,, |
| 9. | பூதநாதாயநம: | எதிரில் |
| 10. | சோமேஸ்வராயநம: | ,, |
| 11. | விந்துசாகராயநம: | பிரஸித்தம் |
| 12. | காலநாதாயநம: | ,, |
| 13. | கபர்த்தீஸ்வராயநம: | எதிரில் |
| 14. | காமேஸ்வராயநம: | ,, |
| 15. | கணேஸ்வராயநம: | ,, |
| 16. | வீரபத்திராயநம: | சவுக்கண்டியில் |
| 17. | சாருமுகாயநம: | ,, |
| 18. | கணநாதாயநம: | ,, |
| 19. | தேகலிவிநாயகாயநம: | பிரசித்தம் |
| 20. | ஷோடஸவிநாயகாயநம: | ,, |
| 21. | உத்தண்டவிநாயகாயநம: | புடவித்தோட்டத்தில் |
| 22. | ருத்ராண்யைநம: | எதிரில் |
| 23. | உத்கலேஸ்வராயநம: | ,, |
| 24. | தபோபூமியைநம: | ,, |
| 25. | வருணைதீர்த்தாயநம: | இராமேஸ்வரம். |

## மூன்றாவது நாள் தங்குமிடம்:—இராமேசுவரம்.

| | | |
|---|---|---|
| 1. | இராமேஸ்வராயநம: | இராமேஸ்வரம் |
| 2. | சோமேஸ்வராயநம: | ,, |
| 3. | பரதேஸ்வராயநம: | ,, |
| 4. | இலக்ஷ்மணேஸ்வராயநம: | ,, |
| 5. | சத்ருக்னேஸ்வராயநம: | ,, |
| 6. | த்யாவாபூமீஸ்வராயநம: | ,, |
| 7. | நகுலேஸ்வராயநம: | ,, |
| 8. | அஸம்க்யாததீர்த்தேஸ்வராயநம: | வருணைநதிக்கரையில் |
| 9. | அஸம்க்யாதலிங்கேஸ்வராயநம: | ,, |
| 10. | தேவஸங்கேஸ்வராயநம: | கமோராவில் |

| | | |
|---|---|---|
| 11. | பாஸ்பாணிவிநாயகாயநம: | ஊனில் |
| 12. | பிருதிவீஸ்வராயநம: | கசுரியில் |
| 13. | ஸ்வர்க்கபூமியைநம: | ,, |
| 14. | யூபசரேஸ்வராயநம: | தீனதயாளாவில் |
| 15. | விருஷபத்வஜதீர்த்தாயநம: | கபிலதாரையில் |

## நான்காவது நாள் தங்குமிடம் :—கபிலதாரை.

| | | |
|---|---|---|
| 1. | விருஷபத்வஜாயநம: | கபிலதாரை |
| 2. | ஜ்வாலாநரசிங்காயநம: | ,, |
| 3. | ஆதிகேஸவாயநம: | ,, |
| 4. | ஸங்கமேஸ்வராயநம: | ,, |
| 5. | கர்வவிநாயகாயநம: | ,, |
| 6. | ஆதிவராகாயநம: | ,, |
| 7. | ப்ரஹ்லாதேஸ்வராயநம: | பிரஹ்லாதகட்டம் |
| 8. | த்ரிலோசனேஸ்வராயநம: | திரிலோசனகட்டம் |
| 9. | பஞ்சகங்காயைநம: | பஞ்சகங்காகட்டம் |
| 10. | பிந்துமாதவாயநம: | பிந்துமாதவகட்டம் |
| 11. | வஸிஷ்டவாமதேவாயநம: | ஸங்கடாகட்டம் |
| 12. | பர்வதேஸ்வராயநம: | ,, |
| 13. | மஹேஸ்வராயநம: | மணிகர்னிகாகாட் |
| 14. | சப்தாவரணவிநாயகாயநம: | பிரமனுல் |
| 15. | சித்திவிநாயகாயநம: | பிரசித்தம் |
| 16. | ஜடபஞ்சாக்ஷரவித்திநாயகேநம: | ,, |
| 17. | மணிகர்னிகையே நம: | பிரசித்தஸ்நாநம் |
| 18. | முக்தி மண்டபாய நம: | பிரசித்தம் |
| 19. | விஷ்ணுவே நம: | ,, |
| 20. | தண்டபாணியே நம: | ,, |
| 21. | துண்டி மகாகணபதிராஜாய நம: | ,, |
| 22. | பைரவாய நம: | ,, |
| 23. | ஆதித்தியாயநம: | ,, |
| 24. | விஸ்வேஸ்வராய நம: | ,, |
| 25. | மோதாதி பஞ்ச விநாயகாய நம: | ,, |
| 26. | அன்னபூர்ணியே நம: | ,, |
| 27. | சர்க்ஷிவிநாயகாய நம: | ,, |

ஷை பஞ்ச க்ரோஸயாத்திரை ஆக மொத்தம் நாற்பத்தொரு மைல். இந்தயாத்திரை ஸ்ரீகாசியில் நிவர்த்தியில்லாமல் செய்யக்கூடிய மனோவாக்குக் காயங்களின் பாப நிவர்த்திக்காக

வாதலான், இந்த யாத்திரை முடிந்து ஸம்பூர்ணமானவுடனேயே ஸ்ரீகாசியில் தங்காமல் ஸ்ரீகாசிவிஸ்வேஸ்வர னுமதியுடனும் கிருபாகடாக்ஷத்துடனும் ஸ்ரீகாசியைவிட்டு பிரயாணம் செய்யவேண்டியது. தங்கினுல் மறுபடி இந்தப்பஞ்சக்ரோஸ யாத்திரை செய்யவேண்டும்.

மேலும் ஸ்ரீ காசியில் இம்மூன்று லோகத்து தீர்த்தங்களும் மூர்த்திகளு மடங்கியிருப்பதால் பஞ்சக்ரோஸ விஸ்தீரணமுள்ள இக்காசியை பிரதக்ஷிணஞ்செய்வதால் இம்மூன்று லோகங்களேயும் பிரதக்ஷிணஞ்செய்த பலனைக் கொடுக்கின்றது.

இந்த யாத்திரையை கிரமப்படி மேற்சொன்ன எல்லா மஜிலிகளிலும் தங்கிச்செய்ய சாவகாசமில்லாத சந்தர்ப்பத்தில், ஒரு ராத்திரி வாசஞ்செய்வோன் இராமேசுவரத்திலும், இரண்டு ராத்திரி வாசஞ்செய்வோன் பீமசண்டியிலும், இராமேஸ்வரத்தும், மூன்று ராத்திரி வாசஞ்செய்வோன் துர்க்காகுண்டம், பீமசண்டி, இராமேஸவரத்தும், நான்கு ராத்திரி வாசஞ்செய்வோன் கர்த்தமேஸ்வரம், பீமசண்டி, இராமேஸ்வரம், கபிலதாரையிலும், ஏழு ராத்திரி வாசஞ்செய்வோன் 1. துர்க்காகுண்டம், 2. கர்த்தமேஸ்வரம் 3. பீமசண்டி, 4. தெகலிவிநாயகர், 5. இராமேஸ்வரம். 6. பாஸபாணி விநாயகர், 7 கபிலதாரை இவ்விடங்களிலும் வரிசைக் கிரமமாய் வாஸஞ்செய்து சம்பூர்ணஞ் செய்யவேண்டும்.

மேலும் காசிவாஸியாக காசியிலேயே நிலேயாய் வசித்துக் கொண்டிருப்பவர்கள் ஒவ்வொரு மாதத்து சுக்லபக்ஷ ஏகாதசி முதல் கிருஷ்ண பக்ஷத்து பஞ்சமிக்குள்ளாகச் செய்வது சௌகரியமானதாயிருக்கிறது. அல்லாத பக்ஷத்து வேறெந்த திதியிலாவது அதாவது ஒரு மாதத்துக்கொருமுறை தவருமல் செய்யவேண்டும்.

## மூன்ருவது :— அஷ்டபைரவர் யாத்திரை.

---

பஞ்சக்ரோஸ யாத்திரையை எந்தக் காரணத்தாலாவது செய்ய முடியாமற்போனுல், அதற்குச்சமமான பல பிராப்தியைக் கொடுக்குமிந்த யாத்திரையை ஒவ்வொருமாதத்தின் அஷ்டமி, சதுர்த்தசியில் செய்வது இக்ஷேத்திரத்திற் செய்த சகல பாப நிவர்த்தி பலன். ஆனுல் மனப்பூர்வமாயும், வாஸ்தவமாயும் ஸ்ரீ பஞ்சக்ரோஸ யாததிரையை செய்யமுடியாமற் போகும் சந்தர்ப்பத்திலல்லது சாமானிய காலத்தில் அப்பலனைக் கொடுக்காது.

| | | |
|---|---|---|
| 1. | இரிருபைரவாயநம: | ஹனுமான் காட் |
| 2. | சண்டபைரவாய நம: | துர்க்காகுண்டம் |
| 3. | அஸிதரங்க பைரவாய நம: | விருத்தகாலம் |
| 4. | கபால பைரவாய நம: | லாட்டு பைரவர் |
| 5. | க்ரோதன பைரவாய நம: | காமாக்ஷாமே |
| 6. | உன்மத்த பைரவாய நம: | பீமசண்டிதெருவில் |
| 7. | ஸம்ஹாரபைரவாய நம: | திரிலோசனுஸங்கமம் |
| 8. | பீஷண பைரவாய நம: | பூதபைரவர் |

இதுவும்முடியாத பக்ஷத்தில் ஸ்ரீ அன்னபூர்ணியம்பிகையை 1008-முடியாவிட்டால் 108-பிரதக்ஷணமாவது கடைசி, அதமாதமபக்ஷமாகச்செய்து காசியிற்செய்த இன்றியமையா பாபத்தை நிவர்த்தித்துக்கொள்ளல்வேண்டும். பஞ்சக்ரோஸயாத்திராபலன் அவ்வளவு அவசியமானபடியால் அதற்கு இம்மாதிரி படித்தரமுள்ள மூன்று பரியாயயாத்திரைகள்ஏற்படுத்தப்பட்டன வென்பதையும், மனப்பூர்வமாய் அசக்தராயிருந்தாலொழிய மற்றது பிரயோனப்படாதென்றும் தெரிந்துகொள்க.

## நான்காவது அறுபத்தினன்கு யோகினி யாத்திரை.

சர்வ தோஷங்களையும் நிவர்த்தித்து உடனே புத்திர லாபம் கொடுக்கக்கூடியது. ஒவ்வொரு மாதத்திலும் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசியிற் செய்வது :—

| | | |
|---|---|---|
| 1. | கஜாநநாய நம: | ராணுமஹலுக்குச்சமீபம் |
| 2. | கிருத்ராக்ஷ்யை நம: | ,, |
| 3. | ஸிம்ஹ முகையை நம: | ,, |
| 4. | உஷ்டிக்கிரீவாயை நம: | ,, |
| 5. | வாரத்தியை நம: | மான்மந்திர கட்டம் |
| 6. | ஸர்ப்பாநநாயை நம: | ஸ்ரீராணுமஹல் |
| 7. | உலூக்யை நம: | ,, |
| 8. | சிவாயவாயை நம: | ,, |
| 9. | மயூர்யை நம: | லெக்ஷிமிகுண்டம் |
| 10. | விகடாநநாய நம: | ஸ்ரீராணுமஹல் |
| 11. | அஷ்டவக்ராயை நம: | ,, |
| 12. | கோடராக்ஷ்யை நம: | ,, |
| 13. | குஹ்யாயை நம: | ,, |
| 14. | விகடலோசனையை நம: | ,, |
| 15. | ஸுக்சோதரியை நம: | ,, |
| 16. | லலசித்தாயை நம: | ,, |

17. சிவதந்திருஷ்டாயை நம: ,,
18. வானரோநநாயை நம: ,,
19. ரிஷியாயை நம: ,,
20. கேகராக்ஷியை நம: ,,
21. விருகதுண்டாயை நம: ,,
22. கபாலஹஸ்தாயை நம: ,,
23. ரக்தாக்ஷயை நம: ,,
24. ஷுக்யை நம: இடவுட்டியாவில்
25. ஸேன்னியை நம: ஸ்ரீராஜுமஹல்
26. கபோதிகாயை நம: ,,
27. பாஸஹஸ்தாயை நம: ,,
28. தண்டஹஸ்தாயை நம: ,,
29. பிரசண்டாயை நம: ,,
30. சண்டவிக்ரமாயை நம: ஸ்ரீராஜுமஹல்
31. சிசுக்நையை நம: ,,
32. பாவஞ்ஞாயை நம: ,,
33. கால்யை நம: ,,
34. ரிதிர்பாயின்யை நம: ,,
35. வஸாதயாயை நம: ,,
36. கர்ப்பபசாயை நம: ,,
37. ஸ்ரவஹஸ்தாயை நம: ,,
38. அங்குரமாலின்யை நம: ,,
39. ஸ்தூல கேஸ்வராய நம: ,,
40. விரஹஸ்குஹ்யை நம: ,,
41. ஸர்ப்பாஸ்யாயை நம: ,,
42. பிரேதவாஹநாயை நம: ,,
43. தண்டசுக்ராயை நம: ,,
44. கிரோந்திர்யை நம: ,,
45. சுகஷீஸ்யை நம: ,,
46. விருக்ஷாநநாயை நம: ,,
47. க்யா தாஸ்யாயை நம: ,,
48. தூமநிஸ்வாஸாயை நம: ,,
49. வ்யோமைகவஞுயை நம: ,,
50. ஊர்த்தட்டஸ்யை நம: ,,
51. தாபின்யை நம: ஸ்ரீராஜுமஹல்
52. வேஷாஷண்யை நம: ,,
53. கோடர்யை நம: ,,
54. ஸ்தூல நாசிகாயை நம: ,,

| | | |
|---|---|---|
| 55. | வித்யுத்பரபாயை நம | ,, |
| 56. | வலாகாஸ்யை நம: | ,, |
| 57. | மார்ச்சாரியை நம: | ,, |
| 58. | காடபூதநாயை நம: | ,, |
| 59. | காமாக்ஷியை நம: | பிரசித்தம் |
| 60. | அட்டாட்டஹாஸ்யை நம: | ,, |
| 61. | விசாலலோசனையை நம: | ,, |

## ஐந்தாவது ஸப்தாவரண விநாயகர் யாத்திரை.—

ஒவ்வொருமாதத்தின் சதுர்த்தசியில் செய்யவேண்டியது:- சர்வ விக்கின நிவர்த்தி பலன்.

### முதலாவது ப்ராகாரம்.

| | | |
|---|---|---|
| 1. | ஞானவிநாயகாயை நம: | மங்களகௌரீசந்நிதியில் |
| 2. | த்வரா விநாயகாயை நம: | ,, |
| 3. | அபிமுக்த விநாயகாயை நம: | ,, |

### இரண்டாவது ப்ராகாரம்.

| | | |
|---|---|---|
| 1. | மணிகர்னிகை விநாயகாயை நம: | மணிகர்னிகையில் |
| 2 | ஆஜாவிநாயகாயை நம: | மீர்கரட் |
| 3. | சிருஷ்டிவிநாயகாயைநம: | காளிகாகல்லி |
| 4. | யக்ஷவிநாயகாயை நம: | துன்டிராகணஜபதிமேல |
| 5. | கஜகர்னவிநாயகாயைநம: | ஈசானேஸ்வரம் [வீதி |
| 6. | சித்ரகண்டவிநாயகாயைநம: | சாந்தனிசவுக்கு |
| 7. | மித்திரவிநாயகாயைநம: | மங்களகௌரீசந்நிதியில் |
| 8. | மங்களவிநாயகாயைநம: | ,, |

### மூன்றுவது ப்ராகாரம்.

| | | |
|---|---|---|
| 1. | அபயஸ்தவிநாயகாயைநம: | தசாஸ்வமேதகாட் |
| 2. | ஸிம்ஹதுண்டவிநாயகாயைநம: | பிரம்மேஸ்வரம் |
| 3. | கூணிதாக்ஷவிநாயகாயைநம: | லக்ஷ்டீகுண்டம் |
| 4. | க்ஷிப்ரப்ரசாதவிநாயகாயைநம: | பிதிர் குண்டம் |
| 5. | சிந்தாமணிவிநாயகாயைநம: | பிரசித்தம் |
| 6. | ஜயேஷ்டவிநாயகாயைநம: | ஜ்யேஷ்டேஸ்வரம் |
| 7. | இராஜவிநாயகாயைநம: | பாரபூதேஸ்வரம் |
| 8. | காலவிநாயகாயைநம: | இராமகட்டம் |
| 9. | நாகேஸவிநாயகாயைநம: | கோசலாகட்டம் |

## நான்காவது ப்ராகாரம்.



1. ஸ்தூலதந்தவிநாயகாயைநம: மான்மந்திரம்
2. கலிப்பிரியவிநாயகாயைநம: மனப்பிரகா
3. சதுர்த்தந்தவிநாயகாயைநம: தூர்வேஸ்வரர்சந்நிதி

## ஐந்தாவது ப்ராகாரம்.



1. வக்ரதுண்டவிநாயகாயைநம: ராணுமஹல்
2. ஏகதந்தவிநாயகாயநம. பங்காளிடோலா
3. த்ரிமுகவிநாயகாயநம: சிவகிரிக்குச்சமீபம்
4. தந்தஹஸ்தவிநாயகாயநம: வடகணேசர்
5. உத்தண்டமுண்டவிநாயகாயநம: த்ரிலோசனம்
6. பிசண்டிலவிநாயகாயநம: ப்ரஹ்லாதகட்

## ஆறுவது ப்ராகாரம்.



1. லம்போதரவிநாயகாயநம: சிந்தாமணிவிநாயகர்சந்நிதி
2. கூடதந்தவிநாயகாயநம: கிருமிகுண்டம்
3. சாலகடங்கடவிநாயகாயநம: மடுஹாடிக
4. பஞ்சாஸ்யவிநாயகாயநம: பைசாசவிமோசனம்
5. ஹேரம்பவிநாயகாயநம: ஷை
6. விக்நராஜவிநாயகாயநம: சித்திரகூடதலாபா
7. வரதவிநாயகாயநம: இராஜகாட்வீதியில் [யில்
8. மோதகப்பிரியவிநாயகாயநம: ஆதிவிஸ்வேஸ்வரர்சந்நிதி
9. ப்ரணவவிநாயகாயநம: த்ரிலோசனுகாட்டில்

## ஏழாவது ப்ராகாரம்.



1. அர்க்கவிநாயகாயநம: லோலார்க்கத்துக்குச்சமீபம்
2. பீமசண்டவிநாயகாயநம: பீமசண்டியில்
3. தெகலிவிநாயகாயநம: பஞ்சக்ரோஸத்தில்
4. உத்தண்டவிநாயகாயநம: இராமேஸ்வரம்
5. கூஸ்மாண்டவிநாயகாயநம: புல்வரியாதோட்டம்
6. விகடத்வஜவிநாயகாயநம: தூபசண்டியில்
7. இராஜபுத்திரவிநாயகாயநம: இராஜகாட்டில்
8. பாஸ்பாணிவிநாயகாயநம: சதுர்பஜார்
9. கர்வவிநாயகாயநம: வருணேசங்கமம்
10. சித்திவிநாயகாயநம: மணிகர்ணிகையில்

இது காசியில் மாத்திரமன்று:-முதலில் சங்கற்பம் செய்து கொள்ளும்போதே இன்னவூரில் இன்னகாலத்தில், இன்னகாரியத்தை உத்தேசித்து என்று சங்கற்பம்செய்துகொண்டு யாத்திரைசெய்வோர்களுக்கு, அந்தக் காரியம் நிச்சயமாய்ப் பலிதமாவது சத்தியம், எப்படிப்பட்ட நியாயகாரியமாயிருந்தாலும் சரியே

## ஸ்ரீ காசிவாஸம்.

எச்சாதியானாயினும், எத்திறமை வாய்ந்துளோனாயினும் அவரவருடைய யோக்கியதைக்குத்தக்கபடி தொழில்கள்செய்து ஜீவிக்கப்பலவழிகளு மமையப்பெற்றிருக்கிறது. ஸ்ரீகாசி, அநாதியான இந்துக்களின் மதாசாரசற்கதிகளுக்குரிய சிரேஷ்டமான பட்டணமாதலான் வைதிக சம்மந்த யோக்கியதையுளளவர்கள் அவவழியிலேயே காமக்குரோதலோப, மோகமத மாற்சரியாதி அறுவகை குற்றங்களுக்கு மிடங்கொடாமல் காலக்ஷேபத்துக்குத் தேவையான பொருளைச் சம்பாதிக்க, மற்ற க்ஷேத்திரங்களினும இதில் அதிக இயல்புண்டு. இங்லீஷ் முதலியவை கற்றுளோர்க்கு வர்த்தகக் கம்பெனிகளிலும், ஜமீனதாரி முதலிய பிரபுக்களிடத்திலும், சர்க்காரிலும் அவரவர் திறமைக்குததக்கவாறு சம்பாதிக்கபபல வழிகளிருக்கின்றன. எவ்விதயோக்கியதையுமில்லாமலிருந்தாலாவது, அல்லது எந்த விருத்தியிலும் பிரவர்த்திக்க மனமிலலாமலிருக்கும் நிவர்த்தி மார்க்கமுளள மஹானுக்கும் அன்னோர்களைப் பின் பற்றுகிறவர்களுககும ஸ்ரீ காசியிலுள்ள 64 காட்களிலும் ஒருகாட்டுக்கு ஒரு தர்மான்ன சத்திரததுக்குக் குறையாமலிருககினறது. அத்தருமசாலைகளில் காலநிர்ணயமிலலாமல் எவ்வளவு காலமானாலும பகல ஒருவேளை தவ்யபக்வானனங்களுடன புசிததுவரலாம. அவிடம சாபபாட்டில் பெரும்பான்மை கோதுமை ரொட்டி சேருகிறபடியால் இராத்திரி சாதாரணமாய்ப் பசியெடுக்காது. அப்படிப் பசிப்பவர்கள் மத்தியானம் தங்களுக்குக் கிடைத்த காலணா அல்லது அரையணாவைக்கொண்டு ஆதமதிருப்தி செய்துகொள்ளலாம். இவிடததில பழவர்க்கங்கள் முதலியவைகள் வெகு நேர்த்தியாயும் மலிவாயுமிருக்கும்; உதாரணமாக ஒரு காலணாவுக்கு ஒரு சேர் (எண்பது ரூபாயெடை) இலந்தைப் பழஙகள் கிடைககும. இலந்தைப்பழமென்றால் இவிடததிலுள்ளதைப்போல் புளிப்பாயும சிறுத்துமில்லாமல் சாதாரணமாக ஒரு சிறு கொய்யாப்பழத்தளவும் நல்ல மதுரமான ருசியுடையதாயுமிருக்கிறது. சுருகக

மாகச்சொல்லுமிடத்து:— இவ்விடங்களில் போலவே பெரும் பான்மை சாமான்களும், சில பொருள்கள் இன்னும் அதிகமலி வாயுமிருக்கின்றன. இந்நகர் எவ்விதத்தினும் வசிக்கக் கஷ்ட முடையதல்ல. ஆனால் நாட்டுப்புறத்தில் விஸ்தாரமாய்த் தோட்டந்துறவுகளில் புழங்கினவர்களுக்குக் கொஞ்சம் நிர்ப்பந்தமாயிருக்கும், ஏனெனில் சென்னப்பட்டணம் முத்தியாலுபேட்டையைப் பார்க்கிலும ஜனநெருக்கமுள்ளதாயும் கோஷ்பாதத்தளவுகூட காலிநிலம் இல்லாததாயுமிருக்கிறது. ஆனாலும் இந்தக் காசிக்கு 56 தேசத்து ராஜராஜாக்களும் வருவதினாலும் (நம்மிந்துக்களென்றால்:-வெவ்வேறு பாஷையையும் மதாசாரமுமுள்ள பெரிய உட்பிரிவு ஜாதிகள் குறைந்தது 100-க்கு மேலிருக்கின்றன.) அந்தந்த ராஜாக்களும் பெரிய பிரபுக்களும் மேற்சொன்னபடி தர்மான்னசத்திரங்கள் மாத்திரமல்ல. யாத்திரையாகவரும் பலதேசத்தாருக்கும் நியதியாய் காசிவாஸஞ் செய்பவர்களுக்கும் ஏனைய அன்னோர்களுக்கும் உபயோகப்படுமாறு தர்மத்துக்காக அனேக மடங்களும் கட்டிடங்களும் தர்மசாலைகளும் கட்டிவைத்திருக்கின்றனர். அவைகளெல்லாம், வரும் யாத்திரைவாஸிகள் முதலானோர்க்கு இனமாக ஜாகா கொடுக்கும்படி முதலில் லெட்சம் லெட்சமாய்ப் பொருளைச் செலவழித்துக் கட்டப்பட்டவைகளானாலும் ஒரு அக்கறைக்காகவும், ஷை கட்டிடங்களின் கூட்டிசுத்தஞ்செய்தல் முதலிய சில்லறைச் செலவுகளுக்தாகவு முபயோகப்படுமாறு ஒரு அறைக்கு மாதம் 1-க்கு நாலணா, மிகவும் பெரிய கொட்டடியாயிருந்தால் எட்டணாவுக்குமேலில்லை; (குடும்பத்துடன் வஸிக்கப்போதுமானது) இந்த விதத்தில் ஜாகை சௌகுரியமுண்டு. இதே இடமுள்ள ஒரு அறைக்கு, கொஞ்சம் மேற்கே வர்த்தக சம்மந்தமான பாகத்துக்குள் போய்விட்டாலோ இரண்டு ரூபாய் முதல் ஐந்து ரூபாய் வரையில் கொடுக்கவேண்டும்.

மேலே பிரஸ்தாபிக்கப்பட்ட தர்மான்னசத்திரங்களில் மிகவும் பெரியதும் விசேஷதருமஞ் செய்யப்படுவதும் பிரக்யாதி பெற்றதும் மீர்காட்டுக்குச் சமீபமான விந்தியாமஹாராஜா சத்திரம். அதற்கிரண்டாவதாக நம்நாட்டுக்கோட்டையார் சத்திரமும், மற்றப்படி திராவிடதேசத்து இராஜாக்களான மைசூர், தஞ்சாவூர், கொச்சி, அநந்தசயனம் முதலான தேசராஜாக்களின் சத்திரங்களும், வடக்கு தேசத்தில் எண்ணிறந்துள்ள ராஜாக்கள் முதலியோரது சத்திரங்களும் விளங்குகின்றன. விதவாஸ்திரீகளுக்கு மட்டும் சத்திரங்களில் இனமாக அன்னமளிப்பதில்லை. ஆனாலும் அவர்களுக்கு ஷை சத்திரங்களில் மிக இலகுவான

வேலை செய்வதால் அன்னமளிப்பதுடன் சம்பளமும் கிடைக்கும். மற்றப்படி ஸ்திரீபுருஷாள் தங்கள் குழந்தை குட்டிகளுடன் எவ்வளவு காலமானாலும் இனமாக அன்னம் புசித்து வரலாம். ஆனால் வரவர தருமம் குறைந்து வருகிறதும் யுகதர்மம். இம்மாதிரி காசியிலிருக்கும் திராவிட தேசவாஸிகள் சுமார் 2000 மிருக்கலாம்; திராவிடதேசத்தாரல்லாத கங்காபுத்திராளுள்பட வட தேசத்தார் சுமார் 6000 பேரிருக்கலாம். ஆகவே ஸ்ரீ காசிவாஸமானது இகபரங்களுக்குரிய புக்திமுக்தி யிரண்டினையும், தம்மை யண்டினோர்க்குத் தயவாய்த் தந்தருளுகின்றது.

ஷை தருமங்கள் பிராமணருக்கு மாத்திரமன்று, மற்ற வருணத்தாருக்குமினிதிலளிக்கப் படுகின்றது. சில மடங்கள் கோயில்கள், தருமசத்திரங்களு மன்னோர்பால் பராமரிப்புக்காக விடப்பட்டிருக்கின்றன. ஆகவேமற்றைய வருணத்தாருக்கும் காசியில் இனமாக அன்னமளிக்கப்படுகின்றது. ஆகவே இதுவரையிற் பேசப்பட்டதும் இனி பேசப்படுவதும் பிராமணருக்கு வேறென்றும் மற்றோருக்கு வேறென்றும் நினையாமல் நான்கு வருணத்தாருக்கும் அனைத்தும் பொதுவாயும் குலாசாரத்துக்குத் தக்கமரியாதைகளும் அளிக்கப்பட்டு வருகின்றன வென்பதூஉம் என்றும் தெரிந்து கொள்க.

சந்நியாசிகள்:—இக்ஷேத்திரத்தில் சந்நியாசம் பெற்றாயினும் அல்லது வெளியிலிருந்து வந்து காசிவாஸ க்ஷேத்திர சந்நியாசியாக சங்கற்பஞ்செய்து வசிப்பவர்க்குத் தனியாய் மடங்கள் முதலியவைகளிருப்பதுந்தவிர, அவர்களுக்கு இவிடத்தில் அதிக சௌகரியங்களும் மரியாதைகளும் செலுத்தப்படுகின்றன. மேலே குறித்த தர்மான்னசத்திரங்களைத் தவிர காசிக்குவரும் யாத்திரைவாஸிகள் அவரவர் சக்திக்குத் தக்கபடி ஒரு பிராமணன் முதல் லக்ஷப்பிராமண போஜனமாக காலபைரவரை உத்தேசித்து சமாராதனைகள் (இவைகளுக்கு காலாஷ்டகம் என்று பெயர்) நாள் தவறாமல் குறைந்தது ஆயிரம் பேருக்கு ஷை 64 கட்டங்களிலும் நடக்கும். இதற்கு இரண்டணாவுக்குக் குறைந்த தக்ஷிணைசாதாரணமாயிராது. இக்காலாஷ்டகங்களில் முதல் உரிமை சந்நியாசிகளுக்காதலால் அவர்களுக்கும் மற்ற க்ஷேத்திரங்களைப் பார்க்கிலும் இவிடத்தில் அதிகமரியாதை வசதி முதலியவைகள் உண்டு. இக்ஷேத்திரத்தில் சுமார் 1000 சந்நியாசிகள் க்ஷேத்திர சந்நியாசிகளாக இருக்கிறார்கள். காசிவாஸிகளாயிருக்கும் இதரர்களுக்கும், சாதாரண தர்மான்னசத்திரத்துக்குப் போகவேண்டிய அவசியமிராது. மாதத்தில் 20 நாளாவது காலாஷ்டக சமாராதனைகளுக்கு வருந்தியழைக்கப்

படுவார்கள். சந்நியாசிகள் மாத்திரமல்ல, மற்றோரும்:—சாதாரண அந்தணர் முதலானோர்.

மேற்சொல்லிய பஞ்சக்ரோஸ யாத்திரையை க்ஷேத்திர சந்நியாசியும் மற்றோரைப்போலவே செய்யக்கடமைப்பட்டிருக்கிறபடியாலும், ஆனால் மற்றோர்களைப் போல காசியின் புறம்பே எல்லையைத் தாண்டிப்போகக் கூடாமையாலும் க்ஷேத்திர சந்நியாசிகள் பஞ்சக்ரோஸ யாத்திரை செய்யுந்தினம், மணிகர்ணிகை ஸ்நானம் செய்து விசுவேஸ்வரர், அன்னபூர்ணி பஞ்சவிநாயகர் துண்டிராஜன், தண்டபாணி, காலபைரவர் இவர்களைப் பூஜித்து கங்கைக்கரையினின்றும் முன்போல பிரதக்ஷிணமாக அங்கிருக்கின்ற மூர்த்திகளைப் பூஜித்து, ஐம்பத்தாறு விநாயகரிருக்கின்ற ஸப்தப்ராகாரங்களின் புறம்பே ஏழாவதான ஆவரண மொழிந்து அறுவதாவரணத்தினின்று, அவிமுக்தேசுவரருக்குள் பிரதக்ஷிணஞ்செய்யுங்கால் தமக்கு இடது பாரிசத்திலிருக்குந் தேவதைகளை அபிமுகமாகத்தரிசித்து ஒரு ராத்திரி, இரண்டு ராத்திரி, மூன்றுராத்திரி சௌகரியப்படி வஸித்து [ஜாஸ்தி ராத்திரிகள் வஸிப்பது யதோக்தமாகும்] தண்டபாணியைப் பிரார்த்தித்துக் கடைசியில் விஸ்வேஸ்வரரைத் தரிசித்துப் பூரணஞ்செய்யவேண்டும்.

காசியிற் செய்யும் புண்ணியங்களைப்போலவே, பாவங்களும் நூறுபங்கு பாபபலனைக் கொடுக்கிறபடியால் காசிவாசஞ்செய்வதும், சுருதிப்பிரமாணத்தை ஆராய்ந்து வாஸஞ்செய்வதும்கடினமோர்காரியமேயாகும். அதுபற்றியே "காசிவாஸமோ ஊசிவாஸமோ" வென்னப்பட்டதென்க. காசிவாஸத்தில் முதல் கவனிக்க வேண்டியது:—வருணாச்சிரம வழி தவறாது க்ஷமை, சாந்தம், சன்மார்க்கம் முதலிய சற்குணங்களோடு கிரஹஸ்தனயிருக்கப்பட்ட பிராமணன் வெளியில் சன்மார்க்கத்தால் சம்பாதித்து வந்த பொருளை நாலிலிரண்டு பங்கு சற்பாத்திரத்தில் தருமநெறியால் விநியோகப் படுத்தியும், பிராமணரல்லாத மற்றோர் நியாயவழி தவறாமல் சம்பாதித்த பொருளில் மூன்றுபங்கு சற்பாத்திரத்தில் செலவுசெய்து ஒரே ஒருபங்கைத் தாமுபயோகப்படுத்திக் கொள்ளவேண்டும். காசியிற் சம்பாதித்தபொருள் சிவத்திரவியமாதலால் அதனை வெளியிலிருக்கிற பந்துக்களுக்குபயோகப்படுத்தக்கூடாது. அப்படி உபயோகப்படுத்துவதினால் அக்குடும்பஸ்தர்கள் சிவத்திரவிய அபகாரிகளாவார்கள். காசியினின்று மிருத்திகையும் வெளியிற்கொண்டு போகுதல் குற்றமாம். காசியில் வசிக்கும் யாவரேனும் பிரதிதினமும் கங்காஸ்நாநம் நித்திய கன்மம் விஸ்வேஸ்வரர் தரிசனஞ் செய்தன்றி லௌகிகத்திற் பிரவேசிக்கக்கூடாததுடன், கடன் வாங்குதலும் பரா

ன்னபோஜனஞ்செய்தலுங் குற்றமாகும். மேலும் காசியிற் பாபஞ்செய்து இறந்தால் ஒரு பாவத்துக்கு முப்பதினாயிரம் வருஷம் வயிரவயாதனை அனுபவித்தல் வேண்டுமாதலால், கர்ப்பவாஸம் முதலிய நியதகால வாஸஞ்செய்பவருள் சக்தன், நிர்ணய ஏகாஹாரமுடையவனைகவும் அசக்தன் நியத ஆகாரமுடையவனுயுமிருந்து தானிருக்குமளவும் சர்வ நியமத்தோடுவசித்துப்போகாவிடின், காசியிற் செய்த பாவத்துக்கு எண்ணிலா நரகயாதனையில் முடிந்து மடியவேண்டும். பின்னும் காசியிலிருந்து க்ஷேத்திர சந்நியாசம்பெற விருப்பமுடையோன் மாக மாச சுக்கிலபக்ஷ சதுர்த்தசியில் மணிகர்ணிகை, ஞானவாபி ஸ்நானஞ்செய்து சுத்த வஸ்திரந்தரித்து, அன்று பிராமண போஜனமும் உபவாசமுஞ் செய்து டுண்டிராஜ கணபதி, தண்டபாணி, அன்னபூர்ணி சகித விஸ்வேஸ்வரரைப் பூஜித்து, முக்தி மண்டபத்திலிருந்து பஞ்சக்ரோஸத்துக்கு வெளியே போகாமல் க்ஷேத்திரவாஸம் செய்கிறேனென்று வேதியரால் சங்கற்பஞ்செய்து, இதற்குச் சாக்ஷியாக டுண்டிவிநாயகர் முதலான தெய்வங்களைப் பிரார்த்தித்து அந்தப்படி க்ஷேத்திர நிவாசஞ்செய்தேனென்று ஸப்தாவர்த்தி உச்சாரணம் மந்திர பூர்வமாய்ச்செய்து நியமத்தோடிருக்கக்கடவன். இவ்வாறடைந்தவன் எல்லா தீர்த்தங்களும் மூர்த்திகளும் காசியிலிருத்தலால், வேறு தீர்த்தங்களையாவது மூர்த்திகளையாவது அபேக்ஷித்து வேறிடத்திற்குச் செல்லாமல் காசியிலேயே வாசஞ்செய்து முக்தியடையக்கடவன். அவ்வாறின்றி காசியை விட்டுப்போனால் பெரியோர்கள் அவனோடு பிரியவார்த்தை சொல்லாமலும், அவனது அன்னத்தைப் புசிக்காமலும் அவனை மகாபாபியாக மதித்து ஒருதவியும் அவனுக்குச் செய்யார்கள். அன்னேனின் பேதமைத்தன்மையை பஞ்சபூதங்களும் இகழ்ந்து பேசும். வியாதி முதிர்ந்தவனும் விருத்தாப்பியனும் காசியை யடைந்தால் க்ஷேத்திர சந்நியாசியைப்போல் நீங்காதிருக்கக்கடவன்.

காசிவாஸத்துக்குரியபலன்:— காசியிற்செய்யும் ஜபதபாதி ஹோமங்களுக்கு மற்றவிடத்திற் செய்பவைகளைக் காட்டிலும் லக்ஷம் பங்கு அதிகபலனைக்கொடுக்கின்றது ஒரு நூறாயிரம் காயத்ரீ ஜெபித்த வந்தணர்கள் நான்குவேதத்தையும் அத்தியயனஞ்செய்த பலனையும், சிவபக்தராயிருப்பவர்களிருக்கவேண்டிய முறைமைப்படி தூப, தீப, நைவேத்திய, சயித்தியோபசாரங்களின் பலனைக் கணக்கிட்டு முடியாமல் எல்லையிலாக்காலம் சாருபிகளாயிருந்து இறுதியில் மோக்ஷத்தையடைவர். காசிவாசி

களில் விசேஷ தனவந்தனுயிருக்கப்பட்டவன் சிவாலயங்கள்— மடாலயங்கள்—ஜெபாலயங்கள் முதலியதை ஜீர்ணோத்தாரணஞ் செய்வராக. இவர்களுக்கும் விசேஷ சாரூப்பிய பலன். மாஸ சிவராத்திரி முதலியவைகளில் உபவாசஞ்செய்து பிராமணபோஜனஞ்செய்தவன் அநேகமாயிரம் அஸ்வமேதயாகம் செய்த பலனையும், ஒருநாள் நியமத்தோடிருந்தால் அன்னிய தீர்த்தங்களில் விதிப்படி சத்பிராமணர்களிடத்தில் நூறுயிரம் பசுவைத்தானஞ் செய்த பலனையும், மூன்று ராத்திரி சிவபூஜை முதலிய நியமங்களோடு வசிப்பவன் மோக்ஷசாம்பிராச்சியத்துக்கருகனுயும தடையின்றி ஆகின்றான்.

ஏழையாய்க் காசி வாஸஞ்செய்கிறவருக்கும் க்ஷேத்திர சந்நியாசிக்கும் செய்யும் அன்னதானத்தால் விசேஷ பலன் அடைவர்கள். தீர்த்தஸ்நாநமும்,—க்ஷேத்திரவாஸமும் மற்ற இடங்களில சித்தசுத்தி பரிபாகத்துக்குக் காரணமாயிருந்தும், அதுவே காசியில் முக்திக்குக்காரணமாயிருப்பதும் யுக்தி அநுபவமாமெனக்கொள்க. இவ்வாறு பலன்களேற்பட்டுளதாயினும்காசிவாஸிகள் அப்பலனுத்தேசமாகக் கருமங்களைச் செய்தல் நெறியன்று. புண்ணிய க்ஷேத்திரங்களிற் செய்யும் பாவம் மற்ற சாமானிய இடங்களைப் பார்க்கிலும் நூறுயிரம் பங்கு அதிகமாய் விருத்தியடைவதால் இவ்விஷயத்தில் காசியை இழிந்ததாகக்கொண்டு எள்ளளவேனும் பாவஞ்செய்யாமல் காசிவாஸிகளிருக்கக்கடவர்.

காசிமரணம்:—காசியில் இறக்கின்றவர்களுக்கு சர்வஜீவ கருணாநிதியாகிய பரமசிவன் சாயுச்சியபதவியையுணர்த்தும் தாரகோபதேசத்தை வருணாசிரமபேதமின்றி மானிடவகுப்பாருக்கும் ஸ்தாவரஜங்கமாதிகளுக்கும் மரணந்தகாலத்தில் திவ்யதேஜா சரீரத்தைத் தந்தருளி உபதேசிக்கின்றனர். இவ்வாறு காசி காண்ட முதலியவைகளில் மாத்திரமன்று, சுருதிஸ்மிருதிபுராணேதி காசங்களிலும் கூறப்பட்டிருக்கின்றன.

காசிகாண்டத்தில்:—



இத்தலை யெய்தியிறக்குநர்யாரு மிளைப்பாற
உத்தரியங் கொடுமாதுமைவீசிட உமையோர்பால்
வைத்தவரும பொருள்மேவருதாரக மறையோதி
முத்தியளித்திடுமிப்பதி யார்விட முயல்வாரே.

இச்செயுளால் காசியிலிறக்கும் யோனிபேதமின்றி 84 லக்ஷம் ஜீவராசிகளுக்கும் மரணந்த காலத்தில் ஸ்ரீ பார்வதி தேவியானவள் தன்னுடைய உத்தரீயவஸ்திரத்தால் இளைப்பாறும்படி

வீசவும், பரமகருணாநிதியாகிய சிவபெருமான் அவர்களுக்குத் தாரகப்பிரம்மோபதேசஞ் செய்து முத்தியளிக்கின்றாராகிய இப் புண்ணியமா நகரை யார் தான் விட்டகல முயல்வார்கள்!

மாசறு பேதமைதம்மை மறைப்ப மறைந்தாணு
வாசையெனுஞ் சுறவெற்றுபவக் கடலாழ்கின்றோ
ரீசனுவந்தமை யோடகலாம விருந்தோங்கு
காசியெனும் புணையன்றி யெவ்வாறுகடப்பாரே.

செய்யவழுத்தலை நின்றுதவம்பல செய்தாலு
மெய்தரும யோகமளப்பில்நாளு மிழைத்தாலு
மையறுகாசியை வார்பிறைசென்னி வனைந்தாடு
மையனருட் சிறிதின்றி யடைந்திடலாகாதே.

அறம்பொருளின்ப மியற்றுதவத்தி னடைந்தாலுங்
கறங்குதிரைக் கடனஞ்சநுகர்ந்தருள் காமாரி
யுறைந்தவனங்கெழு காசியினல்லதை யொன்றானு
மிறந்துபிறந்துழல்வோர் தனிமுத்தியி னெய்தாரே.

அருமறையாகம மாகியநூல்களனைத் தையும்
பொருவறுகாசியை யன்றிவழுத்தல் பொருந்தாவா
லிருவினைவிட்டொரு மும்மலமாயை யிகழ்ந்தோர்கள்
திருவமர்காசியை விட்டயலோர்பதி செல்லாரே.

இடைகலைபிங்கலை வாலைசிறந்துட னிவைகூடு
முடிவறுவாரணசி நடுவுயர்சுழிமுனை யென்னு
விடைமறுத்துயர் மெய்த்தவ மேவியகாபாலி
யடைவினுரைத்தன னிந்நகருக்கிணை யாதேயோ.

ஆசில்வளங்கெழு மூவுலகத்தினு மாயுங்காற்
காசிநகாக்கிணை யாவையுற்பதி காணேமால்
மாசறுதிங்கண் முடித்துயர்மன்றுண் மகிழ்ந்தாடு
மீசனையொப்பவர் தேவனைத்திடை யாரேயோ.

பின்னும் மேற்கூறிய செய்யுட்களால், இம்மூவுலகத்தினுய் முத்தியை அன்புடன் இனிதுநல்கும் நகர் காசியைத் தவிரவே றில்லையென்றும், அக்காசியில் சிவபெருமான் உமையவளோடு ஜீவகோடிகளுக்கு பேதாபேதமின்றி தாரகோபதேசஞ்செய்ய அல்லும்பகலும் கண்டுயிலாது நீங்காதிருக்கின்றனரென்றும், முப்பத்துமுக்கோடி தேவர்களுள்ளும் சிவபெருமானே சிரேஷ்டமான தேவாதிதேவனென்றும், இத்துணை வசதிகளமையப் பெற்ற காசியையடைந்துய்யாது பேதைமையை என்னென்றுரைப்பதுவென்றும், நைமிசாரண்ய ரிஷிகளுக்கு சூதமாமுனிவர் கூறுகிறார்.

நிற்க மோக்ஷத்தையடைய இரண்டு வழிகளுண்டு:—சற்குருவையடைந்து சாதனசதுஷ்டயங்களால் வேதாந்தவிசாரஞ்

செய்து வீடடைவது ஒன்று; ஸ்ரீகாசியையடைந்து தர்மாத்மாவாய் வசித்து இறத்தலால் முத்தியடைவது மற்றொன்று. இதனையனுசரித்துக் காசியும் இரண்டு வகையாயுள்ளது:-அஷ்டாங்கயோகாப்பியாசங்களா லடையக்கூடிய நம் கண்ணின் புருவமத்தியிலுள்ள காசி ஒன்று, கங்காதீரத்திலுள்ள காசி மற்றொன்று; ஆகவும் முன்னது ஆதியான்மிகக் காசி அல்லது ஞானக்காசியென்றும், பின்னது ஆதிபௌதிகக் காசியென்றும் விளக்கப்படலாயிற்று. முற்சொன்னபடி சற்குருகடாக்ஷத்தினால் தத்துவஞானம் பெற்று ஆதியான்மிகக் காசியைத் தரிசித்து வீடடையக்கூடிய துரியாதீதபதவியைப்பெற்ற ஞானிகளுக்கு கங்கைக் கரையிலுள்ள இந்தக் காசிக்குப் போகவேண்டிய தவசியமில்லை. ஆனால் அத்தகையஞானி இப்புவியில் கோடியிலொருவனே யிருப்பன். அவருடைய மகிமையைப் பற்றியும் வேதாந்தரகசியங்களைப்பற்றியும் கைவல்யம் முதலாயநூல்களை ஆராய்ந்துணர்க:-கைவல்யத்தில் :—

தேகத்தனலனாகி யகர்த்தனாகிச்சீவனின்றிப் பிரமமாய்த்தெளிந்தமுத்தன்
போகத்தையுண்பனென்றாற் கர்த்தாவாமேபூரணமா மகர்த்தனுக்குப்போக
[முண்டோ
சோகத்தையறுத்தருளுங்குருவே யிந்தத்துகளறக்கவேண்டுமென்று சொ
[ன்னாயாகின்
மாகர்த்தமாபோகிமாத்தியாகி வகைமூன்றாயவரிருக்கு மகிமைகேளாய்.

செய்கையுஞ்செய்விக்கையு மற்றிருக்குங்காந்தச்சிலைமலை முன்னிரும்புகள்
[சேட்டிக்குமாபோற்
செய்கையுஞ்செய்விக்கையு மற்றிருக்குமென்முன்சடமான வுலகெலாஞ்
சேட்டைசெயும்
மெய்கலந்தவிந்திரிய விகாரரூபவிவகாரவிருத்திக்கும் விருத்திதானாய்
மெய்கலந்தசமாதிக்குஞ் சாக்ஷியோரான்வெயில் போலென்றுரைத்தவனே
[விபுமாகர்த்தன்.

அறுசுவையின்குணங்குற்றம் சுத்தமசுத்தம்பத்தியமபத்திய மெளனனாய்த்
[திடாமற்
பொறுமையுடன்கிட்டினதை காட்டுத்தீப்போற்போகங்கள் புசிப்பவன்மா
[போகியாகுஞ்
சிறிதுவலிதுகடனதன்னியங் கணன்மைதீமைகள்சேரினும் படிகச்செயல்
போற்சித்தம்
வெறிதிருக்குமவனே மாத்தியாகியாவன்விரத மிம்மூன்றுள்ளோரேவீடுள்
[ளோரே.

அஃதாவது :— இவ்வுடலை நானென்பதல்லாதவனாய் கர்த்ருத்வமும் ஜீவேஸ்வரத்வமுமில்லாமல் கூடஸ்தபிரமவைக்கியமாகி இப்பவக்கடலைத்தாண்டின ஜீவன் முக்தனானவன் விஷயாதி போகங்களைப் புசிப்பனென்றால் கர்த்தாவாகவில்லையோ!

பரிபூரணமான அகர்த்தனுக்கு விஷயபோகங்களேது? பிறவித் துன்பத்தை நீக்கி அருளும் என்குருவே இந்த சந்தேகத்தை நீக்கிக் கிருபை செய்யவேண்டுமென்று கேட்பாயாகில், அச்சீவன் முத்தர்:— மாகர்த்த, மாபோகி, மாத்தியாகியென்று மூன்று வகையுள்ளவர்களாயிருக்கிறார்கள். அவர்களின் மஹிமையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்:—தொழில் செய்தலும், தொழில் செய்வித்தலுமில்லாதிருக்கின்ற காந்தக்கல்லின் சந்நிதானத்தில் இரும்புகள் அசைவதுபோல பிரேரக, பிரேரியங்களில்லாதிருக்கின்ற எனது சந்நிதியில் அசேதன ஜடப்பொருள்களாகிய உலகங்களெல்லாம் கூத்தாடிக்கொண்டிருக்கும், தேகத்திற்சேர்ந்த ஞானேந்திரிய கன்மேந்திரிய பேதரூபங்களான பிரேரகபிரேரியமான அவ்விருத்திகளடங்கியத் தன்மயமாய் நிஜஸ்வரூபமான ஸ்வரூபசமாதிக்கும், சூரிய கிரணத்தைப்போல சர்வசாக்ஷியே நானென்று ஸ்திரமானவனே சர்வவ்யாபகமாகிய மாகர்த்தனும், அத்துவிதமான எனது சந்நிதியில் நடக்குந்தேக முதலிய வியாபாரங்களுக்கும் இவைகளிறந்து நின்ற ஞானசமாதிக்குஞ் சாக்ஷிநானேயென்றவைகளோடுவ கூடாமற் கூடியிருப்பவனே மாகர்த்தனென்பதாம்:—ஆறுவகை ரசங்களின் குணாகுணங்கள், சுத்தாசுத்தங்கள், பத்தியாபத்தியமென உணவை ஆராய்ந்து பாராமல் சாந்தத்தோடும் நேரிட்டதை காட்டுத் தீயைப்போல் போகங்களை யனுபவிப்பவன் மாபோகியாவன். அற்பமகத்துக்கள், அந்நியாவந்நியங்கள் நல்லது கெட்டதுகளாகிய இவைகள் அடைந்தாலும், ஸ்படிகக்கல்லின் திறமையைப்போல சித்தமானது பற்றின்றி நிற்பவனே மாத்யாகியாவன், இந்த மூன்று விரதங்களும் உடையவர்களே ஜீவன் முத்தர்களாவர்கள். இவ்வகை இலக்ஷணங்களமையப்பெற்ற, பெறற்கரிய ஞானிகள் மட்டும் கங்காதீர ஆதிபௌதிக காசிக்குப்போகவேண்டிய தில்லையேயொழிய ஏனையோரனைவரும் போகாதிருப்பரேல், இப்பிறவிக்கடலைத் தாண்டி முத்திபெறுதற்கூடாதெனவிளக்கப்படலாயிற்று. பின்னும் முத்திநகர்களேழுளதாயினுமவைகளோரொன்றில் ஓரோர் அமிசங்குறைவாயிருத்தலானும், அவ்வேழும் ஒருங்கேகூடி பரிபூரணமாயிருப்பது இக்காசியம்பதியேயென்றும், இது காரணம் பற்றியே சர்வ தீர்த்தங்களும் சர்வ மூர்த்திகளும் ஸ்ரீகாசியை யடைந்திருக்கின்றன ரென்பது பற்றியும், அது காரணத்தாலேயே ஸ்ரீகாசி சிவராஜதானியாயிற்றென்றும், காசியே ஜீவன் முத்தரல்லாத மற்றோர்க்கு முத்தித்தலமென்றும நிதர்சனப்படுத்தப் படலாயிற்று—ஸ்ரீமகாவிஷ்ணு காசியையடைதல்:—

வள்ளிதழ்க்கமலப்பொகுட்டில் வீற்றிருக்குமணங்கொடு வடவரைப்பொரு
புள்ளரசோடும்பூவைபோல் மேனிப்புங்கவ னருளொடும்போகி [வும்
யள்ளலஞ்சேற்றிலரமைகண் படுப்பவருஞ்சிறைத் தும்பிதாலாட்டும்
வெள்ளநீர்ப்பழனம் விளிம்புடுத்தோங்கு காசியில்விரைவின்வந்தடைந்தான்

மணிதெளித்தனையவான் புனற்றடத்தின்மாதவன்றுள் விளக்குதலா
லணிகிளர்வாவிக்கன்று தொட்டுயர்பாதோதக மென்பவெவ்வழற்கட்
பணியரவுச்சிநடித்தவன்றனது படிவமொன்றமைத்தனன்கரையிற்
றணிவருமாதிகேசவனெனும்பேர் சாற்றினன்பூசனைப்புரிந்தான் பின்னும்,
[விசுவநாதன் காசியையடைதல்:—

ஓரெழுகோடி யைங்கார்கோடி வயிரவரொன்பதுகோடி
சீர்செழுமெண்டோணிவிகள் மயில்மேல்செல்லும் வேலுழவரெண்கோடி
யேர்பெறுமியக்கரொன்றரைக் கோடியிசைநவில்கின்னரர்கோடி
கூர்நுதிப்பிறைப்பற்புயங்கமோர் மூன்றுகோடிதானவரிருகோடி.

முப்பதுகோடிமேலு முக்கோடிவானவர் முனிவரெண்பான்மேல்
வைப்புறுமாறுயிரர்மனைவாழு முனிவரு மத்துணைவகுத்துச்
செப்புறுகணமோர்கோடி மேலிருபானுயிரந்திவ்வியாழ்வல்லோ
ரொப்பிலெண்பதினுயிர ரறுபதினுயிரவர் வானுறைந்தகூத்தியரே.

ஏயநற்கோடியுறையும் விஞ்சையர்களிரண்டு நூறுயிரத்தொருபா
னுயிரர்காமதேனுவெட்டிலக் கங்காருடமகளிராறிலக்க
மீயுயர்வரையெண்ணுயிரஞ் சிறந்தவான்பதிவிளம்பு முந்நூறு
பாய்திரைக்கடலேழெண்டிசைக்கிரி யைம்பத்திமூவாயிரநதிகள்.

உலகெலாம்பூத்தவுந்தியங் கடவுளொளிர்மணிமலர்க்கரந்தாங்க
மலர்செழுங்கமலப்பொகுட் டுறைபிரமன்வாசவன்சாமரையிரட்ட
வுலகில் பல்கணங்கள் வணங்கி யேத்தெடுப்ப வந்தா துந்துமிமுழங்க
விலகொளிக்குடுமிக்கொடுஞ்சியந்தேரி னெம்பிரான்விரைவினிலிவர்ந்தான்

ஆகவே மேற்கூறிய செய்யுட்களாலும் பிறிதாலும் ஸ்ரீகாசியில் விராட்புரு டாம்சங்களான 1008 அண்டங்கள் 33 கோடி தேவர்கள் 48000 ரிஷிகள் சப்தசாகரங்கள் 14 லோகங்கள், முதலிய பலவுமடங்கியிருப்பதால் விஸ்வேஸ்வரனென்று பெயர் காரணத்தான் வாய்ந்தது. ஸ்காந்த புராணத்தில் காசிகாண்டத்தில் மேற்குறித்த ஒவ்வொரு சமஷ்டியாம்ஸங்களும், ஒவ்வொரு சமஷ்டியின் வியஷ்டிபாகங்களும், அவைகளின் ஒவ்வொரு அம் ஸாம்ஸங்களும் வந்தடைந்திருப்பதின் காதைகள் தனித்தனியாயும் பூர்ணமாயும் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்க.

## ஸ்ரீகாசியின் நாமரூபபேதங்களும் வரலாறும்:—

பெனரீஸ் என்று சொல்லப்பட்ட காசிக்கு வாராணஸி, அவிமுக்தம், ஆநந்தவனம், உருத்திரவாஸம், கௌரிமுகம், மாமயானம் என்னும் வேறு நாமங்களும் உண்டு. எந்த பதார்த்தத்

தினிடத்து பரப்பிரம்மஸ்வரூபமாகிய சுத்தசத்துவாம்ஸமான தேஜஸ்பிரகாசித்துக் கொண்டிருக்கிறதோ அது காசியென்றும், விஷ்ணு தேவரின் அங்குட்டங்களினின்றும் பிரவகித்து வரும் வருணை, அஸி என்னும் இரண்டு நதிகளுக்கு மிடையிலிருப்ப தால் வாராணஸியென்றும், சிவபிரானிதினின்றும் நீங்கமனமில் லாது நீங்காமல் மறைந்திருத்தலான் இதற்கு அவிமுக்தமென் றும், சிவபிரானுக்கு பரமாநந்தத்தை இடைவிடாதளிப்பதினால் ஆநந்தவனமென்றும், அஷ்டருத்திரர் முதலாயினோர் இப்பதியி லிடைவிடாது வசித்துக் காசிவாஸிகளை உருத்திராம் ஸமானத னதம்ஸமாய்ச் செய்தருளுகின்றமையாலே உருத்திரவாஸமென் றும், விராட்முதலிய பகிர்முககாரியப் பிரபஞ்சகங்களொடுங்கும் ஸ்தானமாதலின் மாமசானமென்றும், காஞ்சிமுதலிய சப்தசக் திபீடங்களுள் காசிமுதற்பீடமாகிய முகபீடமாதலான் கௌரீ முகமென்றும் காரணப்பெயர் பெறலாயிற்று. சிவாபராதஞ் செய்த தக்ஷன் புத்திரியாயிருத்தற் கூடாதென்று சக்திசம்மந் தமான திருமேனியை நீக்கி உமாதேவி அத்திருமேனியின் முகம் முதலாய அங்கங்களைக்காசி, ஜ்வாலாமுகி, ஹேமகூடம், காஞ்சி முதலிய ஸ்தலங்களிலிடும்படியாக திருவாஞ்யையளித்த படி அவைகள் சிவசக்திக்குக் காரணமான பீடங்களாயிற்றெ ன்று தேவிபாகவதத்திற் கூறப்பட்டுளது. திவோதாதனுக்கு அளித்தவரப்படி காசியை விட்டுச் சிவபிரான் மந்தரகிரியை அடைந்திருந்த காலத்தும் ஸ்ரீகாசி பஞ்சநதத்திலொரு இலிங்க ரூபமாய்ச்சிவபிரான்மறைந்திருந்தனரென்பதும பிரளயத்தினிறு தியில் சர்வப்பிரபஞ்சமு மொடுங்குமிடத்துக்காசிமட்டும் திரிசூ லத்தின் அக்கிராம்ஸத்தில் தேஜோரூபமாய்ப் பிரகாசிதது அத னுள் சிவனொருவனே முடிவில் நிலைத்திருந்துப் பிரகாசித்த லான் அவர்க்குச் சுடலையாடியெனவும் பெயர் வந்தமை காசி காண்டத்தான் காண்க. "காசி" யென்றுச் சரிப்பதால் அஞ்ஞா னத்தைப் போக்கி முத்திக்குக் காரணமாகிய திவ்யஞானத்தை அருளுகின்றது. காசி என்னுமிரண்டெழுத்துக்களை ஒருதரம் உச்சரிக்கின்றவன் சிவலோகத்துக் கருகனாகின்றானென பாத்மபு ராணத்தும், மூன்றுதரம் ஸமரிக்கின்றவன் பரோக்ஷஞானத்தை யடைகின்றானெனவும் மற்ற வேழுநாமங்களையும் ஜபிக்கின்றவ னுக்கு யமவாதனையணுகாதென்றும் ஸ்ரீஸ்காந்தத்திற் கூறப்பட் டுளது. 'இக்காசியினது திருநாமங்களை பக்திசிரத்தையோடு படிப்பவர், கேட்பவர், சொல்பவர் நாவுக்கு இன்பரசத்தைத் தருவனவாயும், செவிக்கு ஆனந்தத்தை விளைவிப்பதாயுமிருத்த லன்றியும், எல்லா க்ஷேத்திரமான்மியங்களையும் கேட்டதனாலாய

முழுப்பலனையுமடைவார்கள். பின்னும் காசியைக்குறித்து நடந்து செல்லும் கால்களே கால்களாகவும், அதன் நாமங்களை யுச்சரிக்கும், நாவேதிருநாக்காகவும், அக்கதைகளை கேட்கும் காதுகளே காதுகளாகவும், காசியை இன்புடன் நோக்கும் கண்களே கண்களாகுமென்றும் காசிரகசியத்தில் கூறியுளது. மேலும் நரகமனுபவிப்பவனும், மிகுந்த தீத்தொழிற்களால் யமவாதனையடைந் தனுபவிப்பவனும், காசியென்றுச் சரிப்பதால் அந்த யமவாதனையினின்றும் நீங்கி சற்கதியடையக்கூடுமென்று மதற்கோரிதிகாசம் காசிரகசியத்துள்ளவாறு:—மதுராபுரியில் மானுகியென்னும் பிராமணனது புத்திரன் கிரிஜனென்பவன் தர்மனென்னும் பிராமணனிடத்தில் வேதாத்தியயனம் செய்தும், தர்மவழியில் நில்லாது துஷ்டச்செய்கையால் கலிங்கதேசத்தை யடைந்து கொடியவியாதியால் இறக்குங்காலத்தில் முன்தான் கேட்ட காசிமகாத்மியத்தை ஞாபகப்படுத்திக் கொண்டமையால்' நரகயாதனையினின்றும் விடுபட்டு சற்கதியடைந்தானென்ற காதையையுங் கண்டுணர்க.

சிற்சில வீண்வாத நாவலர் ஸ்ரீகாசி சிவக்ஷேத்திரமென்றும், விஷ்ணுக்ஷேத்திரமென்றும் பயனொன்றுமிலாத குதர்க்கவாது செய்வர் "ஹரியுஞ்சிவனுமொன்று அறியாதவன் வாயில் மண்" என்று சாதாரண ஜனங்கள் சொல்லுவதும் பிரசித்தமல்லவா; அங்ஙனமாயினும், ஆகாதிருப்பினும் எங்ஙனமாயினும் ஸ்ரீகாசி திரிமூர்த்திகளுக்கும் உரித்தாய ஸ்தானமெனறுய்த்துணர்த்துவதும் இச்செய்யுளாலறிநது ஸமரஸபாவத்தைப் பெற்று ஸ்ரீகாசியை திரிமதஸ்தர்களு மினிதிலடைந்து சற்கதிபெற்றுய்வாராகவும். அகத்தியர் விந்தியத்தையடைந்த அத்தியாயத்தில்:—

மூவரிருப்பிடமாய் முகிலூர்திமுதற்றேவர்
மேவருதற்கரிதாயருண் முத்தியின்வீடாய்ப்
பாவமகற்றுறுகாசியின் வாழ்வுபடைத்தோர்கள்
யாவரவர்க்கரிதாய விழுப்பொருள்யாதேயே.

யுகாந்த-கற்பாந்த, காலமாதி முடிவுகளிலும் காசியொன்றுமே எஞ்சிநிற்றல்:—

வையகமேழுமிடிந்திடு காலையுமாயாதே
யையனெடுத்தொளிர்சூல நுதிக்குளமைந்தோங்கு
மெய்யுணர்வோருறை காசியைவிட்டொருநற்றுன
மெய்தமனத்தைவிடுக்குநர் பேதைமையென்னேயோ.

ஜீவரெல்லாம் பிறந்திறந்து படுந்துன்பத்தை வேரறுக்கும் வண்ணம் கர்மம் பக்தியாலெய்தும் ஞானமார்க்கத்தைக் கற்பித்தும்; அவற்றின் அருமைபெருமைகளை யறியாதசேதனராய்த்தம்

மனையில் மாய்ந்து பிறந்துழலுமவர்கள், பவக்கடலை யொழித்துய்யுமுளத்தாராய், நங்கருணாநிதியாகிய பரமன் ஸ்ரீ காசிக்ஷேத்திரத்தைப் படைத்தானென்பதும் சிருஷ்டித்தல், காப்பாற்றுதலன்றி அழித்தல்-ஸம்ஹரித்தலும் அருட்கிருபாகடாக்ஷத்தானெனும் துணிபெய்துக. முக்தியைநாடி காசிவாஸம் செய்தாலும் ஊழ்வினைப்பலத்தாலன்றி அப்பதவிகிட்டுதலரிது. எண்ணிறந்தகாலம் அகத்தியமாமுனிவர் காசிவாஸஞ்செய்தும் தேவர்களாலதைப் பிரிந்து பொதியஞ்சார்ந்தனர்; ஜன்மாந்தரபாக்யவயத்தினால் காசியையடைந்த மாத்திரத்தாலே சாதுசங்க சகவாசங்களால் சாதன சதுஷ்டயங்களைப்பெற்று சற்குருவினுபதேசத்தால் திடஞானத்தையடைந்து காசிமரணத்தாற் பின் முத்தியடைக. செத்தாரைச்சாவோர் சுமந்து செல்வது எங்குமுண்டு. ஆனால் காசியிலோ சாவாரைச்சாவோர் சுமப்பதுளது; ஸ்ரீகாசிமரணத்தை விரும்பியவர்கள் தமக்கு மரணம் சீக்கிரத்தில் நிச்சயமென்று தெரிந்தவுடன் தம்மை ஒரு கட்டிலில் வைக்கச்சொல்லி மணிகர்ணிகை கட்டத்திலுள்ள தத்தாத்ரேயக் கடவுளினது பாதபத்மங்களின்மேல் தருப்பையைப்போட்டு அதின்மேல் தங்கள் சிரஸை வைத்துக்கொண்டு நாவுணரும்போது கொஞ்சம் கங்கை யாமமிர்தத்தைப் பருகி சர்வேஸ்வரன் திருவடி நீழலையடைவரமேநகர். அவ்வளவுக்குச் சக்தியிலாத அனாதைகள் ஷை மணிகர்ணிகை கட்டத்திலும் அதற்குச் சமீபமான கங்காதீரங்களிலும் மரணத்தருவாயை விருப்புடன் வரித்து சாதாரண பூமியில் படுத்திருநது மாய்கின்றனர். அன்னோர்களுக்கு அம்மரணந்த காலத்தில் அன்னவாகாராதிகளும் கங்காமிருதமும் தருமத்துக் குதவும்படி தர்மாத்ம பிரபுக்கள் வேலைக்காரர்களை நியமித்து உதவிபுரிகின்றனர். இப்படி உயிர்மாயப் பிராயோபசேவஞ்செய்யும் மக்களது மாண்பும் எய்தும்பேறும்யார்க்குமியம்புதலரிதாகும். நாதனில்லாதுயிர் துறக்கும் பிணங்களைத் தகனமின்றி கங்கையிற் போடுவர். கங்காதீரத்துக் கெட்டியிருக்கும் பாகங்களிலிறக்குமவர்களை ஒற்றை மூங்கிலில் கீழ்நோக்கக்கட்டி இருவராய்ச் சுமந்து தகனஞ்செய்தாகிலும் தகனமில்லாமலேயாகிலும் கங்கையிற் போடுவார்கள்.

நம் திராவிட தேயத்தாரில் மற்ற வகுப்பாரைக்காட்டிலும் நாட்டுக்கோட்டையாரே அதிகமாய்க் காசிக்கு யாத்திரை செல்லுகின்றனர். காசியாத்திரை செல்லும் தானுட்டியஞகவிருக்கும் ஒவ்வொரு நாட்டுக்கோட்டை செட்டிப்பிள்ளையும் ஒருவருக்கு ஒரு வருஷத்துக்கு அன்னத்துக்குப் போதுமான வட்டி

யைத் தரக்கூடிய முதல் ரூபா 600 வைக்கவேண்டுமென்பது அவர்கள் ஜாதிக்கட்டு விதியாம். ஒருவரால் ஏகதேசத்தில் கூடாதபோது பலர் சேர்ந்தும் செய்யலாம். இவர்களின் தர்ம சிந்தனையையும் ஒற்றுமையையும் பாருங்கள்! இப்படி இவர்கள் ஒத்து தர்மஞ்செய்வதினால் பெரிய ராஜ ராஜாக்களின் தருமத்தைக் காட்டிலும் அதிகமான தருமத்தைச் செய்கிறார்கள். கையாலாகாத லோபிகளும் துஷ்பிரவர்த்தியுமுள்ள சிலதுராத்மாக்கள் அவர்கள் அதிகவட்டி வாங்குகிறார்களென்றும், மற்றும் பல அதர்மமான வியாபாரங்கள் செய்கின்றார்களென்றும், வீண் வாதம் செய்கின்றனர். அது பொருந்தாது. எத்தொழிலை எம் மாதிரி செய்தாலும் முடிவில் தர்மஞ் செய்வது மேன்மையுடைத் தாம். வட்டி முதலியவைவாங்குவதில் அவரவர்களின் இலாபத்தைக் கருதி அதிக வட்டிக்கு வாங்குவோரிடத்தில், தக்கலாபம் சம்பாதிக்கிறார்களேயன்றி ஒருவரையும் அதர்மமாகக் கட்டுப் படுத்தவில்லை. ஆனால் நாம் கேள்விப்படுகிறபடி, வாயில்லாஜீவப் பிராணிகளின் ஜீவஹிம்சைக் கேதுவான எவ்விதமான தொழிலும் அது சம்மந்தமான வியாபாரமும் தர்மஞ்செய்தல் காரணத்தால் மேம்பாட்டைப் பெற்றிருக்கும் நம்மவர்களுக்கடுத்த தன்று. யாதாமொரு குற்றத்தைச் செய்கிறவனைக் காட்டிலும் செய்விக்கிறவனுக்கும், அப்படிச்செய்ய சாதகம் செய்கிறவனுக்கும், அது விஷயமாய் எந்த விதத்திலாவது உதவி செய்கிறவனுக்குமே அதிக பாவம் சம்பவிக்கிறதென்றும், குற்றங்களுக் கெல்லாம் முதல்குற்றமாகிய ஜீவஹிம்சை, ஜீவவதை (பிராணிகளைச் கொல்லல்) எந்த சந்தர்ப்பத்திலும் எவ்வகையானுமிகழ்ந்து மறுக்கத்தக்கதென்று திருவள்ளுவநாயனாரும் மற்றும் பலரும் நீதிகூறியிருக்கின்றனர்.

(1) அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

(2) கொல்லாமை மேற்கொண்டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லாது யிருண்ணுங் கூற்று.

(3) தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிற் நீக்கும் வினை.

(4) நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

ஜீவஹிம்ஸையான கொலைத்தொழில் மிலேச்சர்-பஞ்சமர் முதலியோராகிய கீழ்ஜாதியாருக்குரியவையேயன்றி எவ்வள வேனும் கல்வியாலும், நாகரீகத்தாலும், செல்வத்தாலும், திருவருட் கடாக்ஷத்தினாலும் மற்றும் பல மேம்பட்ட குணாதி

களிலே தாவதொன்றை யுடையவர்களானாலும் அன்னோர்களுக்கு எவ்வளவு மடுத்ததன்றென்று, தங்கள் மேன்மை பொருந்திய ஜீவகாருண்ணிய மனதிற்கொண்டு மேலும் மேலும் ஜீவகாருண்ணியத்தை விருத்திசெய்து இவ்வுலகில் பெரும் கீர்த்தியும் பெற்று பரமகருணாநிதியாகிய சிவபெருமானது திருவருட்கிருபா கடாக்ஷத்தால் மோக்ஷத்வாரத்தை இனிதிற்றரிசிக்க வேதங்களாற் கோரப்படுகிறது.

பின்னும் சுருதிசம்மதமாய் வேதங்களிற்கூறிய விதிப்படி யாகஞ்செய்தபோது வபையையெடுப்பதற்காக ஆடுகளை அறுத்துத்தள்ளி பூமியில் இரத்த ஆறுவெள்ளங்கொண்டு கிடக்கும் பிராணிகளை குலம், சிஷ்டாசாரம், படிப்பு-சற்குண விசேஷங்கள் முதலியவற்றால் மேன்மைதங்கிய பிரம்ஹஸ்ரீ அப்பையதீக்ஷிதரவர்கள் கண்ணுற்ற மாத்திரத்தில் திகிலடைந்து அளவில்லா மனக்லேசமுற்று ஸ்மரணையற்று "வேதமே உன்னைநம்பினேன்" என்று சொல்லிக்கொண்டே அடியற்றமரம்போல் திடீரென்று பூமியில் விழுவாராயினர். உடனே சூழ்ந்திருந்தோரால் சைத்தியோபசாரங்கள் செய்யப்பெற்ற பின்னர், எழுந்து நின்று சர்வ ஜீவதயாபரராகிய கைலாசநாதரைத் தியானித்து தம்பாற்பெற்றுள்ள தீர்த்தத்தை பூமியில் உயிர்மாய்ந்து கிடக்கும் அஜங்களின்மேற் புரோக்ஷிக்கவும் மே-மேயென்று சந்தோஷத்தால் கத்திக்கொண்டு ஓடிப்போய் விட்டன. அப்போது தீக்ஷிதரவர்கள் சந்தோஷமடைந்து வேதத்திற் கூறியிருக்கும் "பசுபந்தனம்" என்பதின் பொருள் இந்த ஜீவப்பிராணியாகிய அஜம் ஆட்டைக் கொல்வதென்பதருத்தமல்ல. பசு என்றால் ஜீவன் = மனது, பந்தனம் என்றால் கட்டுப்படுத்துவது ஆகவே மனதைக் கட்டுப்படுத்தவேண்டுமென்பதேயல்லது மற்றது பொருந்தாதென்று பிரசங்கித்திருக்கிறார். இதுபோலவே மற்ற வாக்கியங்களுக்குமாகும். ஆறலவ்வாறுமனதைக் கட்டுப்படுத்துவதென்றால் சாமான்னியமாய்க் கூடாதாகையால் சுருதி சம்மதப்படி ஒரு யாகத்தைச்செய்த முடிவில் யாககர்த்தா-எஜமானன் ஆ! இவ்வளவு கிரியைகளும் ஜீவஹிம்சையும் த்ரவியவிரயமும் இந்த ஒருமாஷம் உளுந்துபரிமாணமுள்ள மாமிசத்துணிக்கையை யருந்துவதற்காகவா வென்று நினைத்தலும், கருமத்தை வெறுத்து கருமபரிபாகத்தின் முடிவாகிய ஞானத்தைப் பெறலும் அப்போது சுருதி, அதுவும் தேவையில்லை வாசனைபார்த்தாற் போதுமானதென்று இடங்கொடுக்கிறது. யாகாதிசமஸ்த கருமங்களும் ஞானத்தையடையும் சித்தாந்தத்துக்காக வென்பதை கைவல்யோபநிடதத்திற் கூறியவாறு :—

தினமுமண்ணுகர்பிள்ளை நோய்க்கிரங்கியே தீம்பண்டமெதிர்காட்டிக்
கனமருந்துகளொளித்து வைத்தழைக்கின்ற கருணையாந்தாய்போல
மனையறங்கள்செய்மகங்கள் செய்நன்றென்று மலர்ந்தவாசகஞ்சொல்லு
நினைவுவேறுகாண் சுவர்க்ககாமிகளந்த நிர்ணயந் தெரியாரே.

போகமாருயிர்கண்டதையுண்பதும் புணர்வதுமியல்பேகா
ஞகமங்களுஞ்சுபாவத்தை விதிக்குமோவத்தனை தெரியாதோ
காகமேகருத்திடுநெருப்பே சுடுகசந்திடுவேம்பேநீ
வேகவாயுவேயசையென வொருவரும் விதித்திடல்வேண்டாவே.

கள்ளுமூனுநீவிரும்பிளுன்மகங்கள் செய்காமத்தின்மனதானுற்
கொள்ளும்பெண்டொடுகலவிசெய் யெனிலிவன்குறையெலாந்தொ
டானென்றே, தள்ளும் வேதத்தின்சம்மதஞ் சகலமுந்தவிர்வதேகருத்
தாகும், விள்ளுமிவ்விதியென்னிற் பூருவநியமமாம்விதியன்றே.

மதுவிரைச்சிகளுண்ணென்ற சுருதிபின்மணந்து பாரெனிற்பாராய்
மிதுனவிச்சையும் புத்திரோற்பத்தியால் விரும்பென்றவிதிபாரர்
யிதையும்விட்டொழியதினைஷ்டிக வன்னிக் கிழச்சியற்றதும்பாரா
யதையறிந்துகன்மங்களாசைக ளொழிந்தானந்த மடைவாயே.

மேற்கூறியவற்றின் தாத்பரியம் வருமாறு:—பிரதிதினமும் மண்ணைப் புசிக்கின்ற குழந்தையின் வியாதியை நிவர்த்திக்கும் பொருட்டு மேலான ஔஷதங்களை ஒளித்து வைத்திருந்து எதிரில் தித்திப்பான பண்டங்களைக் காட்டிக்கொடுப்பதுபோல, யாகாதி இல்லறங்களைச்செய் என்று சொல்லும்படியான சுருதியின் கருத்து வேறு என்பதை சுவர்க்காபேக்ஷையுள்ளவர்கள் அறியமாட்டார்களென்றும்:--போகத்தைப் புசிக்கின்ற ஜீவர்கட்குக் கண்ணுற் கண்டதைத் தின்பதும் சேர்வதும் சுபாவமேயாகும்; வேதாகமங்களும் சுபாவத்தைக்கூறுமோ, அவ்வளவு தெரியாதா, காக்கையே நீ கறுத்திடுவாய், அக்கினியே நீ சுடுவாய் நிம்பமே நீகசந்திடுவாய் அதிவேகம் பொருந்திய காற்றே நீ சலிப்பாயென்று ஒருவரும் நியமிக்க வேண்டுவதில்லையென்றும்:—வேதம் இகவின்பத்தை நீக்கும்பொருட்டு பரவின்பத்தைக்கூறியதோடு நீக்கின பின்னரிலைதையும் நீக்கிப்பரமசுகமாகும் பொருட்டங்ஙனங் கூறினதென்பதும், வேதம் போக போக்கியமேபயனை கன்மத்தை விலக்கினதேயன்றி விதித்ததன்றென்பதுமாகவும்:-மதுவையும் மாமிசத்தையும் நீயுண்ணவிச்சித்தால் யாகங்களைச் செய்து புசிப்பாய், காமவேட்கையுண்டானல் விதிப்படி விவாகஞ் செய்யும் மனையாளோடு கலவிசெய்யென்றால், இந்தக் காமியான ஜீவனானவன் மற்றவைகளைத் தீண்டானென்று விலக்கும்படியான வேதத்தினுடைய சம்மதமானது, அனைத்தையும் நீக்குவதே அபிப்பிராயமாகும். கருமகாண்ட விதிகளனைத்தும் பூர்வபக்ஷமேயன்றி சித்தாந்தமல்லவென்பதை வற்புறுத்த:—

மதுமாம்ஸங்களைப்புசியென்றவேதமானது, பின்பு ஆக்கிராணஞ் செய்தாற்போது மென்பதைப்பார், மனைவியோடு புணர்ச்சியின பழும் மக்கட்பேறடைவதின் பொருட்டென்பதையும் அறி, இவைகளையும் விட்டொழித்த சந்நியாசிகளுக்கும் நைட்டிகப்பிர மசாரிகளுக்கும் இகழ்ச்சியில்லாதிருப்பதையும் உணர்; அக்க ருத்தினையாராய்ந்து கனமங்களின் ஆசைகளையொழித்து ஞான ததால் ஆனந்தமடையென்பதையும் தெரிந்து கொள்வாயாகவெ னவும், வேதங்கள் கர்மகாண்டத்திற் கூறும் வர்ணாசிரம தருமங் களும் அதனாலுண்டாகும் போகவின்பங்களனைததும் பின் துன் பங்களாக வருத்துதலைக் கண்டவற்றை விடுததுப் பரமசுகத் தைத் தேடவேண்டுமென்ப ததனபிபபிராய மாதலாலிவற்றை யொழித் தச்சுகத்தைத் தேடவேண்டுமமென்பதேயாம்.

மேறகூறிய வேதத்தின் பூர்வபக்ஷசித்தாந்த அபிப்பிராயங் களை அறிவதற்காரம்பிக்கு முன்னம் நானகுவேத, ஆறுசாஸ்தி ரங்களையுங்கற்று அவற்றினபடி சிஷ்டாசார முடையவனாயிருத் தல் வேண்டும். யாகாதி விசேஷகருமங்களின் அநதரங்க கருத் தையறியாமல் ஆயிரக்கணக்கான திரவியத்தை ஜீவஹிம்சையு டன் செலவழித்துச்செய்துவரும் கர்மபரிபாகிகளுக்கு சொல்லப் பட்டதேயன்றி; கேவலம வேதசாஸ்திரங்களைப படியாதவனா யும் கர்மசண்டாளனாயுமிருக்கிற அவிவேகிகளுக் கெவ்வளவும பயன்படாது. ஸ்திரீயிச்சையுண்டானால் விலைமாதரை ஜாதி மதாசாரங்களை யொழிததுப் புணருதலும், மதுமாமஸ இச்சை யுண்டானால் கடைகளிலும் ஷாப்புகளிலும் பாடில பாடிலாய் வாங்கியருந்துவதுமான அத்துணைத தடித்த நினைவுள்ளவர்கள் கெட்டுப்போகாமலிருக்கும்படி கர்மகாண்டவிதிகளை எவ்வளவும் வழுவாது அனுட்டிக்காவிட்டால், இகபரநிந்தைக்குட்பட்டு சர் வஜீவபரமகருணாநிதியாகிய சர்வேஸ்வரனாலும் அருவருககப் பட்ட மகாபாபியாய் விடுகிறான். யாகப்பசுவின் மேனியிலுள்ள ஓவ்வொரு ரோமத்திற்கும் ஓவ்வொரு பிராமணனுக்கு அனன மிடவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறபடி செயயச் சக்தி யேற்பட்டாலொழிய யாகத்தைச்செய்யஆரமபிககக்கூடாது. இப்படிக்கடினமாக விதித்தால், யாகஞ்செய்யும் கர்த்தாவுக்குத் தனக்குத்தானகவே புலப்பட்டு சித்தாநதத்தை யெயதுவானென் பது வேதத்தின முடிவான கருத்தாகும். ஆனால் "யதபாவமேத் தத்பவதி" என்றபடி "யாககர்த்தர்கள் வேதத்தின்பூர்வபக்ஷசித்தாந் தங்களை அறியாமலே அந்தக பாரம்பரியமாகவும், சிஷ்டாசாரமேன் பதை மட்டும் நம்பிச் செய்கிறவர்களுக்குப் பூரணமான சுவர்க்காதி போகங்கள் மட்டும் (முத்திக்குமிவர்களுககும வெகுதூரம்) கிடைப்

பதில் எவ்வளவும் சந்தேகமில்லை" சதுர்வேத சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து சிஷ்டாசாரமுள்ள கர்மபரிபாகிகளல்லாத ஏகதேசஞானத்தையடைந்த மற்றோர் எள்ளளவும் தங்கடங்கள் வருணாச்சிரமவழிகளை திவ்யஞான மடையும்வரை தவறுவரேல்ரௌரவாதி நரகத்துக்குப் பாத்தியஸ்தராய் எல்லையிலாக்காலம் துன்புறவேண்டுமென்பதிற் றடையில்லை. மேற்கூறிய திவ்யஞானத்தையடைகிற வரையில் கருமத்தை எள்ளளவும் தவற விடக்கூடா தென்பதையுணர்த்த:—

*தீரராய்ப்பிரமவித்தாய்த் தெளிந்தவர்தெளியுமுன்னம்*
*வாரமாயிருந்ததங்கள் வருணமாச்சிரமஞ்சொன்ன*
*பாரகாரியமானாலும் பலர்க்குபகாரமாக*
*நேரதாச்செய்வர்தீர்ந்த நிலைவிடாச்சீவன்முத்தர்.*

இதனால்:—தீரமுள்ளவர்களாய் பிரமவித்தாய்த் தெளிவுற்றவர்கள் அங்ஙனம் பரிபூர்ண நிலைமையடைகிற வரையில் முன்பு தங்களுக்குரிமையாயிருந்த தங்களுடைய வர்ணாச்சிரம தருமங்களைக் கர்மகாண்டத்திற் சொல்லியபடி வருத்தமான கருமங்களாயிருந்தாலும் லோகோபகாரமாக, முடிவான நிச்சயத்தை விட்டு நீங்காத ஜீவன்முத்தரும், கிரமமாக தங்கடங்கள் சிஷ்டாசார கருமங்களை எள்ளளவுந் தவிராது செய்து வருவர்:—ஸ்வரூபஞான முள்ள ஜீவன் முத்தருக்கு கருமத்தின் அவசியமென்ன? அவர்கள்கூட ஸ்வரூபத்திற் சேரும் வரையில் கருமங்களைச் செய்கிறார்களென்றால் மற்றோரைப்பற்றி என்ன சந்தேகம்? ஏதோ இரண்டொரு விஷயங்களை வாக்கால் மட்டுந்தெரிந்துகொண்டு அனுஷ்டானத்திலெவ்வளவுமில்லாத குதர்க்கவாதங்களால் ஞானிகளென்று தம்மைத்தாமே போற்றிக்கொள்ளும் அசேதனர்களுக்கு எட்டுணையுமீது பொருந்தாதென்க.

ஆகவே கருமபரிபாகிகளான பெரியோர், கர்மகாண்டத்திற் சொல்லிய விதிப்படியாகஞ் செய்வதால் ஏற்படும்ஜீவஹிம்ஸைகூட வெறுக்கப்பட்டதென்பதை மேற்கூறியவற்றால் நிரூபணஞ் செய்யப்பட்டபடியால் இயற்கனவே விவரித்திருக்கிறபடி ஹிந்துமதத்தின் பிரதமாங்கமாகிய "ஜீவஹிம்ஸா நிவர்த்தியும், ஜீவகாருண்யமும்" ஹிந்துவாயிருக்கிற ஒவ்வொருவனுக்கு முரியதென்பதைத் தெளிந்து பிராணிஹிம்ஸை முதலியவைகளுக்கு எவ்வளவுமிடங் கொடாது மனதை அவ்வழிப் படுத்தினாலொழிய மோக்ஷத்வார மிருக்குந்திசைகூட அன்னோரதிழிந்தமனதுக்கு மெட்டாதென்றவுண்மையே வேதத்தின் சித்தாந்தம். நிற்க, காசியில் க்ஷேத்திரவாஸமாகத், தங்குகிறவர்கள், துர்க்கைபூஜைமுதலியதேவிபூஜைகளைச் செய்யாதவர்களை

யும், யாத்திரை வாஸிகளின் திரவியத்தை முற்றிலும் அபகரித்துக் கொள்ளக்கூடிய இயல்புடைய சில அதம க்ஷேத்திர வாசிகளையும் தெரிந்து தக்கோரிடம் சேரவேண்டும். ஸ்ரீகாசியில் ஹனுமந்த கட்டத்தில் ஜாகைக்கானவை :— ஜயபுரம் கிருஷ்ணய்யர்மடம், சங்கராசாரியார்மடம், பைரவமடம், சிவமடம், க்ஷேமேஸ்வரகாட்டில் கணபதிஜோஸிமடம், ஸ்ரீங்கேரிஸ்வாமி மடம், கொச்சிராஜாசத்திரம், திருப்பனந்தாள்மடம், நாரதகாட்டில்தத்தாத்ரேயமடம்: இவைகள்தாம் நம்திராவிடதேசத்தாருக்கு எல்லாவிஷயங்களிலும் சௌகரியம். காசியில் நடு இராத்திரியிலிறப்பினும் தகனசஞ்சயனஞ்செய்து வீடுசேர்வர்; சந்நியாசிகள் மோக்ஷமடைந்தால் கருங்கற்பலகையாற் செய்த பெட்டியில் சிவப்ரதிமைக் கொப்பானமாய்வுற்ற உடலை அதனுள்வைத்து செய்யவேண்டிய மதாசார கருமங்களைச் செய்து அதைத் தோணியிலேற்றி திரிபதகையில் ஆழ்த்துவர். தகனஞ்செய்யக்கூடாத சிறு குழந்தையிறப்பின் அதனோடு ஒரு கருங்கல்லைக்கட்டி பாகீரதியில் விடுவர். ஸ்ரீகாசி மஹாஸ்மஸானமும் ருத்திரனுக்கு மிகப்பிரியமுமான ஆநந்தவனமுமா யிருக்கிறபடியால் அதில் இறக்கும் பிரேதங்களைத் தீண்டுதலால் ஆசௌசம் கிடையாது. அப்பிரேதங்கள் சிவப்பிரதிமைகளென்றும் பூஜிப்பதற் கேற்றவையென்றும் காசிரகஸியத்தில் சொல்லப்படுகிறது. சம்வர்த்ததேவன் (பிரஹஸ்பதியின் சகோதரன்) விசுவேஸரது பூஜை செய்துத் திரும்பிவருங்கால் எதிர்ப்பட்ட யாதாமொரு பிரேதத்தைப் பூஜைசெய்வதும் பிரதிதினமும் விஸ்வேசர் தரிசனத்தைப்போலவே சிவப்பிரதிமை பூஜைசெய்த பிறகு ஸ்நாநஞ்செய்வதில்லையாமென்ற இதிகாசம் காசிரகஸ்யத்திலுள்ளது. இப்போது மேற்சொன்னபடி பூஜைகள் மட்டும் செய்வோரைக் காணுவிடினும் மற்றப்படி இவிடங்களிற்போல இழிவாயும் ஆசௌசமாயும் பாவிக்கிறதில்லை. சில சமயங்களில் ஹைரோட்டில் சந்தடியால் சவமெடுத்துப்போவோரை நிர்ப்பந்தமாய்த் தீண்டவேண்டிவரும். அவர்கள் மற்ற சாமான்களைக் கொண்டுபோவது போல் சர்வசாதாரணமாய் எடுத்து வருகின்றனர். அவர்களை எவரும் தடைப்படுத்தக்கூடாது. மணிகர்னிகை கட்டமயானம் இராப்பகல் அறுபது நாழிகையும் ஓயாது எரிந்துகொண்டிருக்கும். ஹரிச்சந்திரமயானத்தில் இதில் பாதியிருக்கும். இப்போதும் வீரபாகு வம்ஸத்தைச் சேர்ந்தவர். சம்பள ஆட்களைக்கொண்டு மயானங்காக்கின்றனர். அனால் அவர்களின் செல்வமிகுதியால் அரசருக்கொப்பான பெரிய அரண்மனைகளில் கல்கத்தாவிலும் காசியிலும் பெரிய வர்த்தகக் கும்பெனிகள் தற்காலம் ஸ்தாபித்து மேன்மையுற்றிருக்கின்றனர்.

இவ்விடத்தில் சூத்திரரும் (சில சமயத்தில் பஞ்சமர் கூட) பார்ப்பாரும் (காசிச்சுதேசிப்பிராமணர்) வைதிகக்காரியங்களில் ஒருவரையொருவர் தீண்டிக்கொள்ளுகின்றனர். மேலும் சாதாரணமாய்ப் பார்த்த மாத்திரத்தில் இவர்களுக்குள் வித்தியாசந்தெரிவதில்லை. மேல்ஜாதி முதல் கீழ்ஜாதிவரையிலெல்லோருக்கும் ஒரேவித உடைதான்; அதாவது தலையில் தலைக்குட்டை அல்லது டொப்பி உடம்பில் ஒரு சட்டை. இடுப்பில் கன்னங்கரேலென்ற (பெரும்பான்மையும்) பஞ்சகஞ்சமுள்ள வேஷ்டி, காலில் ஒரு ஜோடு, இவைபிக்ஷாதிகாரி முதல் இலக்ஷாதிகாரிவரையில் சமமாயுள்ளது, இவிடத்தில் காய்கறிகளில் நிஷேதமில்லாமல் முள்ளங்கி, மொட்டக்கோஸ். சுரைக்காய் முதலியவைகளை சிரார்த்தங்களிலும் சேர்க்கிறார்கள். இவிடத்தில் திருஷ்டி தோஷமென்பது கொஞ்சமும் கிடையாது, ஸ்பரிசதோஷமும் வெகு சொற்பம். பிராமணர் அன்னமருந்தும்பொழுது சூத்திரர் பார்ப்பதினாலும் (சூத்திரருள் இடையர் சாதியாலுயர்வு பெற்றவர்.) இடையர் கொணர்ந்துவரும் கங்கா தீர்த்தத்தை பிராமணர் சிரார்த்தாதிகளுக்கு முபயோகிப்பதாலும் தோஷமில்லை. சந்திரமதியை விலைக்கேற்ற சவக் என்ற அரிச்சந்திர பஜாரும், காலகண்டையர் கிரகமுமிருக்கின்றன. லோகிதாஸனை சர்ப்பந்தீண்டின நாககுண்டமிருக்கிறது. அதில் இப்போது ஸ்நானஞ் செய்கிறவர்களுக்கு சர்ப்பந்தீண்டுவதால் விஷமேறாது. அரிச்சந்திர மயானத்தில் ஹரிச்சந்திரனும் சந்திரமதியுமிருக்கிறார்கள். காசிராஜர் இப்போது காசிப்பட்டணத்தில்லாமல் காசியின் எதிர்ப்பக்கத்திலுள்ள இராமநகரில் வசிக்கிறார். இவிடத்தில் ராஜனுக்குரிய அரண்மனை, யானை, ஒட்டகங்களுடனும் வசிக்கிறார் இவருக்குக் காசிபட்டணத்திலும், அரண்மனைகளும் அநேக கட்டிடங்களும் பஜார்களுமிருக்கின்றன. இப்போது இவருக்கு "மஹாராஜா" என்னும் பட்டம் அளிக்கப்பட்டிருக்கிறது. இவர் தம்மிருப்பிடத்தில் சில தருமங்களும் செய்து வருகிறார். ஷை இராமநகருக்கு ஒருமைல் வடக்காகவும் வருணை சங்கமத்துக்கெதிராகவுமுள்ள வியாஸ காசிக்குச்சென்று ஏகாதசியன்றையதினம் தரிசனம் செய்தல் விசேடம் ஆனால் அவிடத்திலிறப்போர் கார்த்தபமாய் ஜனிக்க வேண்டும் என்னும் சாபமுள்ளது, தரிசனம் செய்துவிட்டு இராத்தங்காமல் காசியை வந்து கூடாவிட்டால் ராமநகரையாவது சேரவேண்டும். காலணா அல்லது அரையணா கொடுத்தால் கங்கையின் அக்கரைக்குப் படகுகளில் கொண்டுபோய் விடுவர். கங்கையில் ஸ்டீமர்கள் படகுகள் முதலியவைகள் வியாபாரத்தின்பொருட்டு போய்க்கொண்டும் வந்து கொண்டுமிருக்கும்.

நான்கணு அல்லது எட்டணுவுக்கு ஒரு தனிப்படகு வாடகைக் கேற்று காசிப்பட்டணத்தின் கங்காதீரகாட்சிகளை யெல்லாம் சுற்றிப்பார்ப்பது மனதுக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுக்கும்.

நூற்றுக்கணக்கான படகுகளை இப்பட்டணத்துள்ளுறையும் பங்காளி முதலிய ஜாதியார்கள் கலியாணம் கார்த்திகை முதலிய சுபகாரியங்களில் நடந்தேறும் ஊருகோலமாக கங்கையின் காட்ஸ்களை மணமகன் மணமகளோடும் சேர்ந்து சுற்றி வருவர். அத்துடன் அவர்களைச் சேர்ந்த பந்துக்கள் ஸ்திரீ புருஷாள் சுமார் 50-60 பேருக்குக் குறையாமல் கும்மி கோலாட்டம் முதலியவைகளை விளையாடிக்கொண்டும் இந்துஸ்தானி பாட்டுகளைப்பாடிக்கொண்டும் போவதைப்பார்த்தால் ஆநந்தமாகவும் அபூர்வமாகவுமிருக்கும். அஸ்தமித்த சிறிது நேரத்துக்குள் அதாவது சுமார் 8-மணிக்குள்ளாக இம்மாதிரி அநேக விளக்குகளுடன் கூடிய படகுகளும், தோணிகளும் கூடிய கங்காகாட்ஸ்களுடன் சேர்ந்த காசிப்பட்டணத்தினழகை எதிர்க்கரையிலிருந்தாவது, அல்லது ரெயில்வே வாராவதியின் பேரிலிருந்தாவது பாராதகண்களை என்னென்று சொல்வது! கங்கையெடுப்பது பிரயாகையிலுள்ள திரிவேணியிலாயினும் அதற்குத் தேவையான பாத்திரங்களைக் காசியிலேயே வாங்குவது நயமாயும் மனதுக்கிசைந்த பல தினுசுகளுள்ளதாயுமிருக்கும் பிரயாகையிலும் பாத்திரங்கள் ஒருவாறு கிடைக்கும். எந்தக் காரணத்தினாலாவது பிரயாகைக்குப் போகக்கூடாமல் காசியிலிருந்தே திரும்பவேண்டியவர்களினுபயோகத்துக்காகவும், மற்றவைகளுக்காகவும் காசியிலுள்ள நாட்டுக்கோட்டையார் சத்திரத்தில் பிரயாகை சுத்த கங்கையை யெடுத்துவந்து வைத்திருக்கின்றனர். ஒருசேர் 80 ரூபாயெடை நாலணு; இப்படி கங்கையை விலைக்குவாங்குவது எவ்வகையாற் பொருந்தும்? செலவு செய்யக்கூடிய தனுட்டியனென்று தெரிந்தபோது கங்காபுத்திராள் அவர்கள் குமாஸ்தாக்கள், மற்றும் யாசகர்களுடைய உபத்திரவம் ஜாஸ்தி. இவைகளைத் தெரிந்துகொண்டு அவசியமான கிரியைகளை எல்லைக்குட்பட்டு செய்யாத பக்ஷத்தில் ஊருக்குத் திரும்பிவர ரயில்சார்ஜ் மீதிபிராது. அப்படிச் செலவு செய்துவிட்டு மறுபடியும் ஊரிலிருந்து பணத்தைத் தருவித்துக்கொள்ளமுடியாமல் வருந்துவாருமுண்டு. காசியில் குரங்குகளினுபத்திரவமும் மிகுதியே. அவைகளுடன் நாமெதிர்க்காவிட்டால் ஒன்றுஞ்செய்யாது. தின்னக்கூடியவைகளையும் துணி மணி முதலியவைகளையும மேல்மாடிகளில் மறந்து வைத்துவிட்டால் நம்முடையதன்று. இக்காசி க்ஷேத்திரத்தில்

பில்வாரண்யங்கள் ஜாஸ்தி; இக்கனிகள் இவிடம் உண்ணத் தகுந்த மதுரம்பொருந்திய வைகளாயிருக்கின்றன. தனாட்டியா ரல்லாத சாமான்னிய நிலைமையுள்ளவர்கள் காசியில் க்ஷேத்திராடனம் தீர்த்தசிரார்த்தம் விசுவேஸர் முதலிய தரிசனங்கள் காலவைரவ சமாராதனை இவைகட்கு இருபத்தைந்து ரூபாயில் செய்தால் சிறக்கத்தக்கதாயிருக்கும். அதமபக்ஷமாய் பத்து ரூபாயிலும் செய்யலாம், இவைகளில் ஒருவன எவ்வளவு செய்யக்கூடுமோ அவ்வளவுக்குக் குறையாமல குடும்பார்த்தமாய் பனாரிஸ் பட்டுகள், தாவணிகள், ரவிக்கைகள், கங்கையெடுப்பதற்கான செம்புகள் ருத்திராக்ஷங்கள் முதலியவை வாங்காவிட்டால் மனது சம்மதிக்காது. இவைகளைத்தவிர காசியில் தங்கள் காலக்ஷேப செலவுக்கும பஞ்சக்ரோஸ யாத்திரைக்கும் செலவுவேறே. ஹரிச்சந்த்ர பஜார் முதலிய பெரிய பஜார்களைப் பார்த்த மாத்திரத்தில் எதையும் கொள்ளவேண்டுமென்னும ஆசை எல்லோருக்கு முண்டாகும. காசியில் பார்க்கத்தகுந்தவை:—சௌக்பஜார் எனனும் ஹரிச்சந்திரபஜார், விஜயநகரம் ராஜாமுதலிய சிலராஜாக்களினுடைமனைகள, கபீர்தாஸ்முதலான பக்தசிரேஷ்டர்களின மடாலயஙகள, ஸிந்தியா மகாராஜா, நாட்டுக்கோட்டையார் அன்னதானசத்திரம, சௌக்பஜாரிலிருந்து மேற்காகப்போகும் விலைமாதரின தெரு சங்கீதம் முதலியவைகள், பனாரிஸகணம்டோன்மென்ட், இவிடமுள்ள கமலகடாபிஸ-டிஸ்டிரிக்ட்ஃகார்ட், பஞ்சாலை முதலிய யந்திரசாலைகள, ஷ கண்டோனமெண்ட ரெயிலவேஸ்டேஷன் கட்டிடம, விஜயநகரம் ராஜாமுதலிய சிலராஜாக்களுடைய சிஙகாரத்தோட்டஙகள-செனடரல் ஹிந்துகாலேஜ், ராயபூர்ஹௌஸ்ராட முதலியன

காசிப்பட்டணத்தின் கீழ்பூமியானது எத்தனையோதரம் மகமதிய அரசர்களாலும், புத்தமத அரசர்களாலும பட்டணத்தின் கட்டிடங்கள் இடிக்கப்பட்டு மறுபடியும மறுபடியும கட்டப்பட்டு இம்மாதிரியாக கீழ்நிலமானது வெகுசாய உயர்ந்துபோனது மாத்திரமல்ல; கீழ்நிலத்தின் நீரூற்றுக்கண்வாய்களும கருங்கல் காரைச்சுண்ணாம்பு செஙகலகள் முதலியவைகளாலடைபட்டுக் கிணறுகள் வெட்டப்படுவதற்குபயோகமற்றதாய் சாதாரண உபயோகங்கட்குக்கூட கஙகாநதியினின்ற கஙகா தீர்த்தம் எடுத்துக்கொண்டுவந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள்; கங்காநதியின நீர்மட்டமோ சாதாரண காலங்களில (பிரவாககாலங்கள தவிர) எப்போதும நூறுக்குமேல் இருபது படிக்கட்டுகளுக்குக் குறையாத ஆழத்திலிருக்கும். சரியான பலமுள்ள

யுவதிகளாயிருந்தாலொழியவொரு சிறிய செம்புஜலங்கூட எடுத்து வரமுடியாது, அசக்தர்களும் விருத்தாப்பியர்களும் ஸ்நானத்துக்குக்கூட இறங்கி ஏறமுடியாது. இப்பொழுதோ பெனாரிஸ் முனிசிபாலிட்டியார் ஹைறோட்கள்-சிறியகல்லிகள்-சந்துகள் வீடுகளின் மேல்மாடிகள்-அடுப்பறைகள் முதல் எங்குபார்த்தாலும் கங்கைமாநதியின் பிரவாகத்தை 'வாட்டர்பைப்' குழாய்கள் வைத்து பூர்வீகஜலகஷ்டத்தை நிவர்த்தித்து ஜலவசதியை வெகுவாய் விருத்தி செய்திருக்கிறார்கள். மற்றும் சென்னை முதலிய பட்டணங்களைப்போல் இதுவுமொரு பெரிய நகரமாதலால் காலை மாலைகளில் ஹைறோட்டுகளில் ஜலங்களைத் தெளிப்பது முதலான ஒரு பெரிய நல்ல முனிசிபாலிடியில் செய்யவேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் இந்த பனாரிஸ் முனிசிபாலிடியார் மிகவும் கவனித்துப் பல சௌகரியங்களை நாளடைவில் விருத்திசெய்து வருகிறார்கள். இயற்கனவே பிரஸ்தாபித்திருக்கிறபடி நகரத்தின் மலஜலதாரைகளை கங்காநதியில் விழுவதை முற்றிலும் தடுத்துவருமபடியான ஏற்பாட்டை முடிப்பதுதான் பாக்கியிலிருக்கிறது. இந்நகரத்துக்கு ஹெட்டாபீஸைத்தவிர விட்டி பெரிய போஸ்டாபீஸும், தந்தி ஆபீசுகளுடன் கூடிய ஒனபது ஸப்போஸ்டாபீஸ்களும், அதறகுச் சேர்ந்த பிராஞ்சாபீஸ்களும, பதினேழு போலீஸ்டேஷன்களு மிருக்கின்றன. இந்தியாவின எண்ணிறந்த பாகங்களான தேச தேசாதிகளினின்றும் வரககூடிய ஒவ்வொரு மூலை முடுக்கின் ஜனசமூகங்களையும இந்த ஒரு நகரில் பிரதிதினமும, விசுவேஸ்வரர் கிருபாகடாக்ஷத்தை யடையும் பொருட்டு வெகு ஆவலுடன தாங்கள் அருமபாடுபட்டுத் தேடிய பொருள்களைச் செலவழித்து வரும் பகதகோடிகளை ஆனந்தமாய்த் தரிசிக்கலாம.

நமமாரியர்களுக் குறைவிடமாயிருக்கிற நம்மிந்தியவதிக்கு ஹிருதயகமலம போல் நடுமையஸ்தானமாகிய இக்காசியின் வரலாறுகளையும மஹாத்மியங்களையு மொருவாறு விளககினோம். பூர்ணமாயெடுத்துரைகக ஆயிரம நாவினைப்படைத்த ஆதிசேடனுலு மிதாகவும, புல்லறிவுடையோனுகிய வென்னலசாத்தியத்தனு மசாததியமாதலால் மறறவைபவஙகளை நேரில் போய் தரிசிதது ஸ்ரீவிசுவேசரது கிருபாகடாக்ஷத்தை அடைவராகவும்; அவவிஸ்வேஸ்வரரது மஹிமைகளுககு முக்கிய காரணமாகிய கஙகையின மகிமையைச் சிறிது உரைப்பாம.

வருபெருநதவத்து நான்மறைக்கிழவர் யாவரு முளமகிழ்கூர
வருமவளாமெமைத்த விலஙகபூசனைசெய தனைபாடுவிளிதுவீற்றிருந்தார்
பொருவிலிக்காதை யுரைத்துமுள்ளார் கேட்டோரெழுதி னோருளமகிழ்பூத்
விரிகடலுலகமுழுவது மேதத வெளிதினில வீடுபெறலுறுவர். [ந்தார்



## கங்கை மாநதியின் பௌராணிக வரலாறும் மஹிமையும்.

ஆதியுகத்தில்யோகத்தான் முத்தியடையுமதன்பின்ன
ரோதுமுகத்திலருந்தவத்தான் முத்தியுளதாமோங்கரிய
சோதிஞானத்தான்முத்தி முகத்திற்றுன்னுமுயிர்
காதலோடுங்கலியுகத்திற் கங்கைபடியின்வீடடையும்.

கிருதயுகத்தில் யோகத்தாலும், திரேதாயுகத்தில் அருமையாகிய தவச்சித்திகளாலும், துவாபரயுகத்தில் ஞானத்தாலும் அடைந்து வந்த முத்தியானது இக்கலியுகத்தில் கங்காஸ்நாநபலவிசேஷத்தினாலடையப்படுகிறது. புரத்தல் அதாவது இரக்ஷிக்கும் தொழிலுக்கதிபனாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர், அழித்தல் அதாவது சம்ஹரிக்கும் தொழிலுக்கதிபதியாகிய முக்கண்ணபிரானை நோக்கி, கங்கைக்குச்சென்று பிரத்தியக்ஷத்தில் ஸ்நாநஞ்செய்யச் சக்தியற்றவர்களுக்கும் அதேபலனைக் கொடுக்கக்கூடிய தெவ்வழியென்று கேட்கும்போது, அக்கங்கையின் ஆயிர நாமங்களை யுரைப்பதாலும், எழுதுவதாலும், கேட்பதாலும், அந்நாமங்களை இல்லத்தில் வைத்துப் பூசிப்பதாலும், கங்கையில் பிரத்தியக்ஷத்தில் சென்று ஸ்நாநஞ்செய்த பலனை யடைகிறார்க

ளென்று இனிதுநவில, அத்திருநாமங்களைச் சொல்லியருளவேண்டுமென்று கேட்க, அடியிற்குறித்த ஆயிரநாமங்களையும் பரமகருணாநிதியாகிய சிவபிரான் உரைப்பாராயினர்.

அமுதோதகை, அச்சுதை, அனகை, அதுலை, அனந்தை, அபிராமை;
கமலை, கவுரி, கந்தவதி, கங்கை, காந்தை, கலியாணி;
உமை, ஆமளை, ஆநந்தவல்லி, ஏகை, உதாரை, ஓங்காரை;
விமலை, தாரை, பராநந்தை, விபூதி, தேஜை, அசாரை.

கருணை, அகோரை, பராசக்தி, காந்தி, துர்க்கை, நிராலம்பை;
வரதை, காமரூபை, திரிபதகை, அபயை, வசு, தாரை;
பரமேஸ்வரை, வல்லபை, ஸ்வரூபை, பானுமதி, சூலினி, விஜயை;
மிரதை, அனுதநாதை, தஸ்ரூபை, மாதா, விபாவை, வரியை.

சத்தி, வனிதை, சீலவதி, தாரு, ஆசாரா, குணநீதை;
பத்திரை, லீலாவதி, சாந்தை, பவானி, பாகீரதி, நிமலை;
முத்தி, மருண், மானினி, வேதமுதல், ஆரியை, காயத்திரி.
வேகவதி, அம்பிகை, இந்திரை, துதி, சந்தினி, ஜான்னவி;
போகவதி, கலாவதி, யோகினி, மாதவி, புண்ணியை, சுவர்க்கை.

பூர்வம் திரேதாயுகத்தில் அயோத்திமாநகரை யாண்ட சூரியவம்ச அரசனாகிய சகரமகாராஜன் அஸ்வமேதயாகம் செய்யும் பொருட்டு சர்வ லக்ஷணங்களுமமையப் பெற்ற அசுவமொன்றை வரித்து பூப்பிரதக்ஷிணமாக விட 'அஸ்வமேதயாகஞ்செய்தவி னுலிந்திரப்பட்டத்துக் கிடைஞ்சலாமாதலால்) அக்குதிரையை இந்திரன் பிடித்துப் பாதாளலோகத்தில் பகவதாம்ஸங்களுடன் ஸ்வரூபஞானத்தால் மெய்ம்மறந்து தவஞ்செய்து வரும் கபிலமகாமுனிவருக்குச் சமீபத்தில் கட்டிவிட்டுப் போயினன் ஸகரன் அஸ்வத்தை இப்பூவுலகமெங்குங்காணது கடைசியாகத் தமது அறுபதினாயிரம் புத்திரர்களையும் தேடிக்கொண்டு வரும்படி இட்ட கட்டளையை சிரமேற்கொண்டு, விண்ணுலகம், மண்ணுலகமிரண்டினுங்காணாது பாதளத்திற்புகுந்து தேடிப்பார்க்கையில், அக்கபில மகாமுனிவர் பக்கமிருத்தலைக்கண்டு, அம்மாமுனிவனுடைய தவத்தைப்பங்கம் செய்தபடியால் அப்முனிவன் தன்னுடைய தபஸ்ஸை பங்கம் செய்த தூர்த்தனெவனென்று கோபாக்கினியுடன் கண்களை விழித்துப் பார்க்கவும், எதிரிலிருந்த அவ்வறுபதினாயிரம் ஸகரபுத்திராளும் சாம்பலாய்ப்போய் விட்டனர்; அப்போது ஸகரமகாராஜன் தம் புதல்வரின் விருத்தாந்தத்தைத் தம் குலகுருவால் தெரிந்துகொண்டு மற்றொருத்தியின் குமாரனாகிய அஸமஞ்சனுடைய புதல்வனை அக்குதிரையைப் பிடித்து வரும்படி ஏவினன். (ஸகரமகாராஜனுக்கிரண்டு மனைவிகள், ஒருத்திக்கு அறுபதினாயிரம் பேரும் மற்றொருத்திக்கு முன் சொன்ன அஸமஞ்சனும் புத்திரர்களாகப் பிறந்தனர்.)

அவ்வாறே அம்சுமான் சென்று கபிலரை வணங்கிக் குதிரையைக்கொண்டு வரவும் ஸகரன் வேள்வியை முடித்துத்தன் பேரனாகிய ஷ அம்சுமானுக்குப் பட்டங்கட்டித்தான் சுவர்க்கம் புகுந்தனன். பிறகு அம்சுமான் வெகு காலம் ஆண்டுத் தனது புத்திரனாகிய திலீபனுக்கு முடி சூட்டித்தான் தவமியற்றும் பொருட்டு வனமேகினனே யொழிய, தங்குல பிதிரர்களைக் கரையேற்றவில்லை. பிறகு திலீப மஹாராஜன் வெகுகாலம் தர்மராஜ்ய பரிபாலனஞ் செய்தும்மக்கட் பேறுண்டாகாமையின் காரணத்தைத் தம் குலகுருவாகிய வசிஷ்ட முனிவரால்:— "நீ முன்னொருக்கால் தேவகாரியமாய்த் தேவலோகஞ் சென்றிருந்த காலத்தில் உன் திரும்புகால் மார்க்கத்தில் கற்பக மரநீழலிற் படுத்திருந்த காமதேனுவை வலம் வந்து பூசித்து வராதகாரணத்தால் அந்தக்காமதேனு தனது வமிசமான ஒரு பசுவையாவது பூசித்தாலல்லது உனக்கு மக்கட்பேறு உண்டாகாமலிருக்கக்கடவதென்று இட்ட சாபத்தை நிவர்த்தித்தால் உனக்கு புத்திர பாக்கியம் கிடைக்கு" மென்று திருவுளம் பற்றினதை அவ்வரசன் பூர்த்தி செய்து பிதிர் பக்தியுள்ள பகீரதனைப் பெற்றெடுத்து அவனுக்கரசீந்து தான் மாதவஞ்செய்யும் பொருட்டு ஆரண்யஞ் சென்றனன்.

பிறகு அப்பகீரத சக்கிரவர்த்தி கபில முனிவரின் சாபத்தால் சாம்பலாய்க் கிடக்கிறத் தமது மூதாதைகளை சற்கதியடைவிக்கும் பொருட்டு கோகர்ணத்தை யடைந்து தவஞ்செய்தனன். அத்தவத்துக்கு மகிழ்ந்து பிரமதேவன் பிரத்தியக்ஷமாகவும், சாகரர்கள் நற்கதியடைய தேவ கங்கை பூமிக்கு வர அருள்புரியவேண்டுமென்று பிரார்த்திக்க, அக்கங்கையின் வேகத்தைத் தாங்க இப்பூமியில் நெற்றிக்கண் படைத்த சிவனொருவனாலேயல்லாது பிறரால் கூடாதெனவும், பின்னும் சிவனையும் கங்கையையும் குறித்து வெகுகாலம் கடின தவம் செய்ய, மகேசுவரன் அத்தேவகங்கையைத் தாரணம் செய்வதாய் ஒற்றுக்கொள்ளவும், அம்மந்தாகினி தன்னைத் தாங்குவதாய்த் துணிந்த சம்புவும் பாதாளத்தில் அழுந்தும்படியான தனது பூர்ணவல்லமையுடனும் வர, பரமசிவன் அக்கங்கையைத் தனது சடைக்குள்ளொளித்தனன். பகீரதன், கங்கையைக் காணுமற்போகவே பெருமூச்செறிந்து திகைத்து நிற்க, அம்மாதேவன் பகீரதனுடைய தவத்துக்கு மகிழ்ந்து ஒரு துளியை விட நதியாக பிரவஹித்து அதிவேகமாய்ப் பகீரதனுடைய தேர்க்காலைப் பின் பற்றிச் செல்லும் போது மார்க்கத்தில் ஜன்னு மகாரிஷியின் யாகசாலையுடன் யாகத்தை அழிக்கவும், அம்முனிவன் அந்நதியை ஆசமனஞ் செய்துவிட்டனர், மறுபடியும் இராஜன் அம்மாமுனிவனைக்

குறித்துப் பிரார்த்திக்கவும் அந்தரிஷி தனது செவியால் வெளி விட்ட கங்கையை பாதாளதத்திலுள்ள அறுபதினாயிரம் ஸகர சாம்பலிற் றோய்தலும், அச்சாகரர்கள் சற்கதி பெற்று சுவர்க்கஞ் சார்ந்தனர். இவ்வாறு புராணோக்தத்தின்படி பகீரதன் கங்கை யைக்கொண்டு வந்தபடியால் பாகீரதி யென்றும், ஜன்னு மாரிஷி தன்செவிவழியாகவிட்டமையால் அவரது புத்திரியாக'ஜான்னவி' என்றும் காரணப் பெயர்களையைப் பெற்றதுடன், அளகநந்தை முதலிய இயற்கைப் பெயர்களுடனும் மேலே கூறியிருக்கிற ஆயி ரம் சிறப்பு நாமங்களுடனும் விளங்காநின்ற இக்கங்கைமா நதி யின் தற்காலம் பிரவஹிக்கும் மார்க்கம் தேசவளப்பம் முதலிய வைகளைக் கூறுகின்றோம்.

## கங்கைமா நதியின் த்ரிஸ்யாம்ஸம்.

கங்கைமாநதியானது ஹிமோத்கிரியின் தென்சாரலில் உற் பத்தியாகிறது. இந்நதியின் உற்பத்தியில் மனிதர் போகக்கூடிய (அதற்கப்புறம் சாதாரண மனிதர் போகக்கூடாத அவ்வளவு நெருங்கிய மஹாதாரண்ணியமாயும் புலிகள் முதலிய துஷ்டமிரு கங்களால் நிறைந்துள்ள அபாயஸ்தலமாயுமிருக்கிறது) கடைசி இடத்துக்கு கங்கோத்திரி=கங்கோற்பத்தியென்று சொல்லப்படு கிறது. இந்த கங்கோத்திரியிலிருந்து ஷை மஹாதாரண்ணியத் தின் வழியாய் ஆயுதங்கள் முதலிய உதவிகளால் அறுபதுமைலு க்கப்பாலிலிருக்கும் வாஸ்தவமான கங்கோற்பத்திக்கும் போகக் கூடும். அதறகப்பால் சூரியரஸ்மைகிடையாதபடியால் வெளிச்ச மென்பதேயில்லாததோடு முற்றிலும்பனி உறைந்த ப்ரதேசமா யிருக்கிறது, பனியாலுறைந்து கிடக்கும் ஒவ்வோர் சமயத்தில் இபபிரதேசத்தில்படும் சூரிய வெளிச்சத்தால் சுத்தஸ்படிகம் போலும், உயர்ந்த வெள்ளி போலும் பிரகாசித்தலின், அதையே பரமசிவனிருப்பிடமாகிய கைலாச பருவதமென்று சொலலப் படுகிறதும் எண்ணப்படுவதுமாயிருக்கிறது. இந்தப்ரதேசம் மேகமண்டலத்துக்கு மேற்பட்டிருப்பதால் மழைக்காகப்பயப் படவேண்டியதில்லை. வெயிலைக்கண்டால் இறந்த தாய், தகப்ப னைப் பார்த்தது போலிருக்கும்; மரஞ்செடிகளும் சுததமாய்க் கிடையாது, வாயுவும் பலமாயடிக்காது. விஷசம மந்தமான பாம் புமுதலிய பூச்சிகளாவது, தேள் வகையறுக்களாவது புலி முத லிய துஷ்டஜந்துக்களாவது கிடையாது-மிருத்திகைசம்மந்தமான பூமியேவெகு சொற்பமாகையால் ஜீவப்பிராணிகளென்பதேஇவி டம் கிடையாதென்றும் சொல்லலாம். ஆகவேவமஹாத்மாககள் முனிவர் முதலிய பெரியோர் வசிப்பதற் கேற்றவிடமாயிருக்கிற

படியாலிவ்விடங்களில் அநேக பெரியவாளிருப்பதாகவும் தெரிகிறது-சற்குருவின் அனுமதியின் பேரிலும் கிருபா கடாக்ஷத்தின் பேரிலும் இவ்விடங்களுக்குப்போகிற மகான்களுக்கு அவ்விடங்களிலிருக்கப்பட்ட சாதுக்கள் இப்படிப்புதிதாய் வந்து சேருபவர்களுக்குச் சிறிதுகாலம் வரையில் அவர்களால் கூடிய உபகாரங்களைச் செய்கிறார்களென்றும், அவ்விடங்களில் குகைகளாக உள்ளஜாகை, தவத்திருக்கவிடம், மரவுரி, பசியாற்ற காய், கிழங்கு, பச்சிலைவகையறுக்கள் முதலாய சாதனங்களைக் காட்டிக்கொடுத்துதவிபுரிகிறார்களென்றும் சொல்லப்படுகிறது.

சாதாரணமாய்ப் போகக்கூடிய கங்கோற்பத்தி யென்று சொல்லப்பட்ட இடத்தில் கங்கையானது கோமுகத்தைப்போலும் தோற்றமுடையதோர் குகையினின்றும் பிரதானமான தாரை ஒன்றும், மற்றது ஆறுமாக வெளிப்பட்டு பிரவஹித்து வருகின்றது. கங்கோற்பத்தியினின்று 170 மைல் தூரத்திலுள்ள தேவப்பிரயாகை யெனனுமிடத்தில் அளகநந்தையென்று மற்றோர் நதிவந்து கூடி, விசேஷ பிரவாகமுடையதாய் இத்தேவப்பிரயாகையிலிருந்து முப்பது மைல் தூரத்திலுள்ள ஹரித்துவாரத்துக்குச் செல்லுகிறது. இந்த ஹரித்துவாரம் வரையில் மலையிலிருக்கிறது. இங்கிருந்து கங்காநதியானது படகுகள் ஸ்டீமர்கள் போகக்கூடிய ஆழமும் விஸ்தாரமுமுள்ளதாயிருக்கிறது. இவ்விடமிருந்து கங்காசாகரமென்னும் கங்கை சமுத்திரத்துடன் சங்கமமாகுமிடம் 1400 மைலிருக்கிறது; கங்கோற்பத்தியிலிருந்து ஹரித்துவாரம் வரையிலுள்ள 200 மைலும் நதி தக்ஷிணவாஹினியாயும், அங்கிருந்து பிரயாகைவரையில் தென்கிழக்குத்திசையாகவும், அங்கிருந்து நேர்கிழக்காய்த் திரும்பி காசிக்குச் சமீபத்தில் சுமார் 40 மைல் உத்தரவாகினியாயும், அங்கிருந்து மணி ஹரிகாட் வரையில் நேர்கிழக்காயும், அங்கிருந்து நேராய்த் தெற்காய்த் திரும்பி சமுத்திர சங்கமத்துக்கு 200 மைல் தூரத்தில் பத்மா, பாகீரதி எனனும் பெயர்களோடு கூடிய இரண்டு பெரிய கிளைகளாயப் பிரிந்தும், மற்றும் ஓராயிரம் முகத்துவாரங்களுடனும் கல்கத்தாவுக்குத் தெற்கிலும் கிழக்கிலும் சுமார் 80 மைல் தூரத்திலுள்ள வங்காளக்குடாக்கடலில் சமுத்திர சங்கமமாகிறது. இவ்விரண்டு கிளைகளில் மேற்குப்பக்கத்தில் பிரிந்தோடும் பாகீரதிக்கு, கல்கத்தாவுக்கு சுமார் 40 மைல் வடக்கேயிருந்து சமுத்திர சங்கமம் வரையில் ஹுக்லி நதியென்று சொல்லப்படுகிறது. கீழ்ப்பக்கத்தில் பிரிந்தோடுகிற மேல்சொன்ன பத்மா வென்றழைக்கப்பட்ட கங்கையானது பிரமபுத்திர நதியின் மேற்குக் கிளையாகிய (கங்கையைப்போலவே பிரமபுத்திர

நதியும் சமுத்திர சங்கமத்துக்கு சுமார் 200 மைலில் மெக்னு கொம்னெய் என்னும் இரண்டு பெரிய பிரிவுகளாய்ப்பிரிந்து, சங்கமமாகிறது; கொமெனெய் என்னும் நதியுடன் கோலண்டு என்னுமிடத்தில் கூடி அங்கிருந்து இரண்டு நதிகளுமொன்றாய்ச் சேர்ந்தோடி சமுத்திர சங்கமமாகிறது.

கங்காநதியின் மொத்த நீளம் 1600 மைல்; அதனுடைய தெனகரை அல்லது வலதுபக்கத்தில சாமபல் நதி வந்து கூடுகிற யமுனையும், ஸோண பத்திரையும், கர்மநாசாவும், வடகரை அல்லது இடது பக்கத்தில ராமகங்கை, கோமதி, கண்டகி, கௌஸிகை, என்னும் உபநதிகளும்வந்து சேருகின்றன. மேலே சொன்ன உபநதிகளென்று சொல்லப்பட்டவை கங்கைக்குச் சமானமுள்ளவைகளாயும சில பெரியதாயுமிருக்கும்! இவைகளைத் தவிர கணக்கில்லாத எத்தனையோ சிற்றாறுகளும் உபநதிகளும கங்கையில சங்கமமாகின்றன. இம்மாநதியின்கரையிலுள்ள முக்கிய பட்டணங்களாவன :--தேவப்பிரயாகை, ஹரித்துவாரம், பெரகபாத, கானபூர, அலஹபாதமெனனும பிரயாகை, மிர்ஜாபூர், ஸ்ரீ காசி, பாடலீபுரம, மாஙகீர், மணிஹாரிகாட்: ராஜ்மெஹால, கோலண்டோ, மூர்ஷிடாபாத, தாமுக்தியாகாட், கலகததா கஙகாசாகரம். மேமல சொலலியிருக்கிறபடி கங்கை ஸகஸ்ர முகங்களுடன் சங்கமமாகிறதால் மததியிலுள்ள பூமிகள சிறு சிறு தீவுகளாயிருக்கின்றன. இததீவுகள் பெருமபாலும் புலி முதலிய துஷட மிருகஙகளால நிறைநதும், தரை சாகுபடிககு லாயக்கிலலாத சதுபபுநிலமாயுமிருக்கிறது. அத்தீவுகளில பெரிதானது கங்காசாகரமென்னும க்ஷேத்திரமே. இது ஒனறுதான வசிப்பதறகு ஏகதேசவசதியுள்ளது. கஙகாநதி மிகவும அகலமான இடஙகளில மூனறரை மைலுள்ளதாயும, ஆழமான இடங்களில ஜாதியடி 40 (கோடைகாலததில) உளளதாயுமிருக்கிறது. இந்நதி ஸடீமாகள செல்ல லாயக்குள்ளதாயிருப்பதால ஏராளமான வியாபாரம், வர்த்தகம், ஏறறுமதி, இறககுமதி, வெகு ஜாஸதியாய் நடப்பதாலும இநதியாவின மறற நதிகளைப்பார்க்கிலும அதிக உபயோகமுள்ளதாயிருக்கிறது. ஆடி, ஆவணி, புரட்டாசி மாதங்களில இநநதியின் பிரவாஹததால் ஏறககுறைய சமுத்திரததிலிருநது 200 மைல வரையிலுள்ள கீழ்வஙகாள தேசததின தாழ்ந்த பூமியானது முழுகடிக்கபபடுகிறது. கங்காநதி பாயும இநதகஙகாதீர ப்ரதேசததின செழிப்பைப போனற சாரமுள்ள இதர நதிதீரப்பிரதேசஙகள் இவ்வுலகததில் வெகு சொறபம. ஙகாவிரிநதியைப்போல குறைந்தது சராசரியில பதது பஙகு அதிக செழிப்புள்ளதும, சிறுசில

விடங்களில் நூறுபங்கு வரையிலுள்ளதாயுமிருக்கிறது. கங்கா நதியானது சில சமயங்களில் சமுத்திரத்தினின்றும் பதினேந்தடி உயரம் பொங்கி; மணிக்கு 20 மைல் வேகத்துடனும், சுமார் 120 மைல் வரையில் நதியை எதிர்த்தும் ஓடுகிறது. கல்கத்தாவில் இந்த ஓட்டத்தினுடைய அலைகளின் உயரம் அநேகமாய் ஏழெட்டடியிருக்கும், இத்துணைய சிறப்பமையப்பெற்ற கங்கா நதியையுடைய வங்காளதேசத்தி ஜனசமூகமும், கங்காமிருத மஹிமையினாலே மற்ற நகிதீரவாசிகளைக்காட்டிலும் பதின்மடங்கதிகமாய் யுக்தி, புத்தி, வீரியம், சௌரியம், செல்வம் முதலியவைகளில் மேம்பட்டிருப்பதினாற்றான், நம் ராஜகங்கிரமும் காருண்யமும் பொருந்திய பிரிடிஷ் கவர்ண்மெண்டாரும், இந்நதி முக்கியமாய் பாயப்பெற்ற ஷை வங்காளதேசத்தையும் அதற்குப் பிரதானமான கல்கத்தாநகரையும் ஹிமஸ்ஸேது பரியந்தமுள்ள நம்மிந்தியாவுக்குத் தலைமை நகராய்ச் செய்துகொண்டிருக்கிறார்கள். புண்ணியத்துக்கு முக்கிய காரணம் பரோபகாரமானபடியினாலேயும் அக்குணமுற்றிலும் இக்கங்கைமாநதிக்கு எவ்வளவும் குறைவின்றிப் பொருந்தியிருத்தலாலுமே மற்றெல்லா நதிகளிலும் விசேஷ மாண்புடைய புண்ணியநதியாய் விளங்காநிற்கின்றதும் சுவானுபவமாயிருக்கிறது.







ஸ்ரீ காசிகங்கை சிவகெங்கையே.

முற்கூறிய ஆயிர நாமங்களைப் பெற்றதும் ஆயிர முகங்களை யுடையதும், விண், மண், பாதாளமென்னும் மூன்று லோகங்களில் பிரவஹிப்பதுமான ஸ்ரீ காசியிலோடும் கங்கை சிவகங்கையே யல்லது விஷ்ணு கங்கையன்றென்பதை அடியிற்குறித்த ஸ்ரீ ஸ்காந்தத்தின் நியாயத்தால் காண்க. மைநாகபர்வதத்தை மாமியாகவும், மேனையைத் தாரமாகவுமடைந்த ஹிமவான், முக்கண் படைத்த பரம கருணாநிதியாகிய பரமசிவனை மாப்பிள்ளையாகப் பெறும்படி மிக்கவரிதாய தவஞ்செய்து இரண்டு புத்திரிகளைப் பெற்றெடுத்தனன். இவ்விருவரில் ஜியேஷ்ட புத்திரிக்குக் குடிலா சக்தியென்றும். இளையவளுக்கு உமாசக்தி யென்றும் பெயர். உமையவள் தவஞ்செய்து சிவபிரானைப் பதியாக அடையுமுன்னர். தாரகாசுரன் முதலிய அசுரர்களால் பீடிக்கப்பட்ட இந்திராதி தேவர்கள் குமாரக்கடவுளை உற்பவித்து, அவ்வசுரர்களைச் சம்ஹரிக்கும் பொருட்டு இமவானிடம் சென்று சிவ வீரியத்தைத் தரித்ததற்குத் தவமஹிமையால் யோக்கியதை பெற்ற குடிலாசத்தியைச் சிவபிரானுக்களிப்ப, சிவபிரானை வரனாக வரித்து வாக்குத்தத்தஞ்செய்து கொடுக்கப்பெற்று, சத்தியலோகாதிபனை பிரமனுடைய ஆசீர்வாதத்துக்குக் கொண்டுபோயினர். த்ரிகால வர்த்தமானங்களை யறிந்த நான்முகன் இக்குடிலை சிவ வீரியத்தை நிஜரூபமாகவும் தீர்த்த ரூபமாகவும் முன்னால்

தரிக்கவேண்டியவளாக விருக்கின்றாளென்பதைத் தெரிந்து, அச் சிவ வீரியத்தை ஏற்க இவளிப்போது அருகளல்லரென்றனர்; அப்போது குடிலைமகாக்கிலேசத்தையும் கோபத்தையுமடைந்து, விஷ்ணுவாசீர்வாதம் பெற்று நான் அதைத் தரிக்கின்றேனென வே சதுர்முகன் கோபங்கொண்டு, என் வாக்கை அலக்ஷியஞ் செய்து மறுத்தமையால் நீ தீர்த்த ரூபமாகக்கடவையென்று சபித்தனர். அப்போது அக்குடிலாசத்தி தீர்த்த ரூபத்தையடைந்து சத்தியலோகம் முழுவதும் வியாபித்து மற்ற உலகங்களுக்கும் வெளிப்பட்டமையின், பிரமதேவன், திவ்ய மந்திரங்களால் கட்டுப்படுத்தி அதைத் தனது லோகத்துள்ளிருக்கும்படி செய்தனன். பிறகு சிவபிரான் உமாசத்தியைத் திருமணஞ் செய்தனர். அப்பால் பிரமாதி தேவர்கள் குமரேசருற்பத்தியை நாடி மஹேசுவரனைப் பிரார்த்திக்கவே அவர் தமது நெற்றிக்கண்ணினின்றும் ஒருவராலும் தாங்கமுடியாத தேஜோமயமான சிவ வீரியத்தை உற்பவித்துவிடவே, தேவர்கள், அக்கினி தேவனை அதைத்தாங்கி கங்கையிற் சேர்க்கும்படி அநுமதித்தனர். அக்கினி தேவனால் அத்திவ்ய தேஜஸ்ஸைத்தரிக்கமுடியாமல் தனது சுயதேஜஸ்ஸையும் இழந்து, அச்சத்திய வுலகத்துள்ள அக்குடிலை கங்கையின் கண் சிவவீரியத்தைப்பெய்து, ஹே-குடிலே! நீ இச்சிவவீரியத்தைத் தரித்தால் உதிக்கின்ற புத்திரன் உனக்குரியவனுவானெனவே அகமகிழ்ந்து தரித்து கருப்பவதியாய், ஐயாயிரவருடத்துக்குமேல் பிரமாவிடஞ் சென்றனள். அப்போது பிரமனுடைய ஆக்ஞையின்படி உதயாசலத்தில் சிவசம்மந்தமாய் நூறு யோசனை விஸ்தீரணமுடைய சரவணப் பொய்கையில் இக்கருப்பத்தை வைக்கவே, அவ்விடத்தில் பதினாயிர வருடத்துக்குமேல் அச்சரவணவாவியில் சுப்பிரமணியக்கடவுளையுற்பவித்து மறுபடியும் அக்குடிலாகங்கை சத்தியவுலகத்தைச் சார்ந்தனள். பிறகு சுப்பிரமணியக்கடவுள் தாரகாதிவசுரர்களை மாய்த்து பிரம்ஹேந்திராதி தேவர்களிடுக்கண்களையகற்றித் தேவர்சேனாதிபதியெனப்பெயர் பெற்று விளங்குவாராயினர். இக்குடிலை கங்கையையல்ல, சத்தியவுலகத்து கங்கையைத் தான், முன் சொன்ன பகீரதன் இறுதியில் கோகர்ணத்தையடைந்து சிவபிரானைக் குறித்து கடினதவஞ்செய்து சத்தியலோகத்தினின்றும் பரமசிவனது சிரசிலேற்கச்செய்து கபில முனிவரின் சாபத்தால் பாதாளத்தில் சாம்பலான தன் பிதாமஹர்களை இக்கங்கையை அழைத்துக்கொண்டு போய் சற்கதியடைவிக்கச் செய்தனன். ஆகவே கங்கைக்குத் திரிபதகையென்றது காரணப் பெயராயிற்று.

கிற்க சிலபுராணங்களில் விஷ்ணுபாதாங்குட்டத்தில் உதித்ததென்பதும், ஷி குடில கங்கையே பிரமதேவன் திரிவிக்கிரம அவதாரகாலத்தில் பிரம்மாண்டத்தின் ஏழாவதாவரணமாகிய ஜலரூபாவரணம் பேதிக்கப்பட்டு வியாப்தமான கங்கையை பிரமன் கமண்டலத்திலேற்றிப் போற்றி வைத்திருந்தனரேயன்றி, அக்கங்கையை திரிவிக்கிரமாவதார காலத்திலும் உபயோகிக்கவில்லை. திரிவிக்கிரமாவதார மூர்த்தியினது பாதாங்குட்டங்களை பிரக்ஷாளனஞ் செய்தது முன்சொன்ன குடிலகங்கையையேயன்றி மற்றதல்ல, 'அக்குடிலை கங்கை பிரக்ஷாளனஞ் செய்ய உபயோகப்படுத்தப்பட்ட பின்பு அம்மூர்த்தியின் அங்குட்ட நுனிவழியால் சுவர்க்கலோகம் புகுந்து தேவர்களுக்கு ஸ்நானத்துக்குபயோகப்படலாயிற்றேயொழிய அக்கங்கை பாதளத்தில் புகுந்து ஸாகரானைச்சற்கதியடைவிக்கவில்லை; பிறகு மேருவில் விழுந்ததென்பதும் அக்காலத்தில் துருவன் அதைத் தரித்து கிழக்கு, மேற்கு இரண்டு திசைகளிலும் பரவச்செய்தனனென்பதும் வாயுபுராணவசனத்தாலும், கேதாரகண்டவசனத்தாலும் நிர்ணயிக்கப்பட்டிருப்பதைக் காண்க. பின்னும் அக்குடில கங்கையானது புஷ்கரத்தில் கோரூபந்தரித்து பாதலஞ்சென்று, திரிமூர்த்திகளின் பெயரால் மூன்று தீர்த்தங்களாயினவென்றும் புட்கரமான்மியத்திற் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறே விஷ்ணுபதியென்னும் பெயரையும் அக்காலத்து அடைந்தது அக்குடிலை கங்கையேயன்றி இச்சிவகங்கையன்றென்பதும், அவ்விஷ்ணுபதியை மஹேஸ்வரன் தரிக்கவில்லையென்பதும், பகீரதப்பிரயத்தனத்தால் சத்தியலோகத்தினின்றும் வந்த கங்கையையே தரித்தனரென்பதும், அப்படி பூமிக்குவரும்போது தனது ஸூக்ஷ்மரூபமான ஏகதேசவோரமிசத்தைமட்டும் சத்தியலோகத்தில் வைத்துவிட்டு மற்ற தன்னுடைய உக்கிரமானவேகத்தாலும், சிவபிரானையன்றி ஏனையோராலதைத் தரிக்கமுடியாதன்றென்பதையும், சத்தியவுலகத்தினின்று சிவசிரசில் விழுந்தமையானும், முன் அக்குடில கங்கையை விஷ்ணுபக்தனை துருவன் தரித்திருப்பதால், அதே கங்கையாயிருக்கும்பக்ஷத்தில் இச்சிவனைக் குறித்து இவ்வளவு கஷ்டப்பட்டு தவஞ்செய்ய வேண்டிய ஆவஸியமின்றென்பதும், பிரமனைக் கேட்குங்கால் சிவனையன்றி மற்றோரால் கங்காதாரணஞ்செய்தல் கூடாதென்றதும், கங்கையுமதே மாதிரி இயம்பினதும் பயனற்றதாய்ப் போய்விடுமென்பதற்குமுள்ள நியாயங்களால், ஸ்ரீ காசியில் வியாபித்திருக்கும் கங்கையானது,மேலே பிரஸ்தாபிக்கப்பட்ட விஷ்ணுபதி கங்கையன்றென்பதும் தெற்றென உணர்த்துவதை பாத்மோத்தர புராணம், கேதாரகண்டவசனங்களாலும் உணர்க.

பின்னும் ஸ்ரீமத் ராமாயணத்தில் சத்தியலோகத்தினின்றும் வந்தஹைமவதி கங்கையானது, சிவனது திருச்சடையில் வீழ்ந்து வெளிப்படச் சக்தியின்றிப் பகீரதனால் பின்னும் சிவபிரான் பிரார்த்திக்கப்பட்டு பகீரதன் பின் பாதாளம் சென்று, சாகரரீளைச்சற்கதி புகுவித்ததென்பதையுமறிக. இவ்வாறு சாதாரணரும் எளிதிலறியக் கூடுமாதலின், பாகவத முதலியவற்றில் விஷ்ணு கங்கையைச் சிவன் தரித்து மங்களமுடையவரானாரென்பது, பின்னால்சிவபிரான் தரிக்கும் ஹைமவதின் ஓரம்சமே விஷ்ணுபாதகங்கை என்னுங்கருத்தால் ஸ்துதிபரமாய்க்கூறியதென்பதை அறியாது, குதர்க்கஞ் செய்வதும் வெகுவசன விரோதமென்பது ஸ்ரீமத் அப்பயதீக்ஷிதரவர்களும் பரிகாசஞ்செய்தமை பிரமதர்க்கஸத்வ வியாக்கியானத்திற்காண்க. பின்னும் அசிவனில் சிவனாகவேண்டும், சிவன் சிவனாரென்றதும் பொருந்தாது. "அறிவுக்குமறிவு செய்யுமறிவு வேறுண்டென்றெண்ணும், அறிவற்றகுதர்க்க மூடர்களவஸ்தைக் கனமாய்த்தீரும்" என்று கைவல்லிய நூலார் கூறியிருப்பதையுங் கண்டுதெளிக.



## கங்காமான்மியம் (காசிகாண்டம்)

அன்பின் மலர்தூய்ச்சிவலிங்க மருச்சித்தோர்க ளமரரெல்லா
மின்பமெய்தவழிபட் டமலனெய்துதல் போலடைந்தவர்தந்
துன்பமகற்றும் புனற்கங்கை தோய்ந்தோர் கடவுணதியனைத்து
நன்குபடியும் பேறனைத்து மொழியாதினிது நண்ணுவரால்.

கடவுட்கங்கைநதிப்படிவான் செல்லவொருவன் கருதுமுன்
னிடர்கூர்பாவமவனை யொழிந்தியாண்டு செல்வோமெனக்கருதும்
விடயமதனின்மனம்போகாதடக்கி ஞானவெறுவெளியி
லடையு மவருங் காசிநகரடைவார் பெறும்பேறடையாரால்.

கும்பமொருகைதனிலேந்தி யொருகைகுளிர்பூம்புனல்சொரிய
வம்பொற்கரமொன்றருள்வரத மபயமொருகையாகவமைத்
தும்பர்மதியமொருகோடியொளிர்வ தென்ன வொளிபரப்பும்
பம்புதிரைவான் புனற்கங்கைதன்னை யுளத்திற்பாவித்தே.

அருளினேடுமெருக்கியமே முதல்வழிபாடினிதாற்றித்
தெருளாலென்னை நான்முகனைத் திருமாறன்னையிமவானை
மருளிறவத்துப்பகீரதனை மலயச்சாந்தால்வாலரியால்
விரகினமைத்துக்கெழுமலர்தூய் விருப்பினேடும்பணிந்தேத்தி.

கன்னிவாழைக் கவிழ்தாற்றுக் கனியொட்பயறுசெழுந்துவரை
யுன்னமறைமேயாற்மகிழ்வெய்த வியந்தூல்கிமீ ஞமை
யின்னந்தவளை நீர்க்காக்கை குரண்டமுதல்வனிகளர்செம்
பொன்னின்மாவில் வெள்ளிதனிலமைத துங் கங்கையிடைப்போக்கி.

இன்னவாறுமகிழ்சிறப்பப் பூசைபுரிந் தோரெழுபிறப்பு
முன்னவரிய கொடும்பாவமனைத்து நீங்கிமுதக்குறைவாற்
றன்னையுணர்ந்து முழுதுலகந்தானு யுறைநதவத்தோனுந்
துன்னவரிய பேரின்பத்துறைவாய்ப்படிந்தி ளைத்திடுவார்.

வெய்யகொடும்பாதகம் புரிந்துவிளைந்தோ ரென்புகங்கையிடைப்
பெய்யினவர்தீவினை யொருவிப்பெறுதற் கரியவான்சேர்ந்
துய்யுந்தன்மை யுரைத்தியெனவுலகம் பூத்ததிருவுந்தி
யையன்றெழுது கேட்டிடலுமாமன றுயர்த் தோனறைகுவனல்.

எரிகட்புகுவாய்ப் புலிப்போத்தாலிறந்த மறையோனி டக்காலை
விரிமென சிறைய கழுகொன்றுகவ்வி விசும்பினேகுங்காற்
றிருகுசினத்திமனுடம் வேறொரு தீவாய்க் கழுகுபறித்திடலும்
பெருகுதிரைவான புனற்கங்கைபபேரியாறதனில் வீழ்ந்ததுவே.

உய்க்குங்காலையவனிடக்காலதனை யொழுகுபசுங்குருதி
கக்குந தீவாய்க்கழுகு புனற்கங்கையாற்றுள வீழ்ததியதால்
புக்குமகிதுகணமவனைப பொன்செய விமானத்தி னேற்றி
நக்கபசும்பொன் சுடர்பரப்புநாகலோகந்தனில் விடுததார்.

அனையகடவுட்பெயராற்றங் கரையினுஞென்றலங்கரித்துப்
புனலினேடுமுளமகிழ்ந்து புனிதமறையோர்க்கினி தளிப்பின்
வினையினீங்கியப்பசுவின் மயிரொன்றொன்றினுக்குக்
கனைவண்டிமிர் பூந்தருநீழலிற் கற்பகாலமினிதிருப்பார்.

மூவுலகத்தும் கீர்த்தி பெற்ற இக்கங்கையில் சமஸ்த நதிகளும மூர்த்திகளும் வந்தடைந்திருப்பதால், இக்கங்கை யொன்றில ஸ்நானஞ்செய்வதால் சமஸ்த தீர்த்தங்களில ஸ்நானஞ்செய்த பலனையும், சர்வ மூர்த்திகளையும் தரிசித்த பலனுங்கிடைக்கிறது. கங்கையினின்றும் வேறு தீர்த்தங்களை நாவாலெடுத்துரைப்பவன் ரௌரவாதி நரகங்களையடைகிறானென்றும், அன்னிய தீர்த்தாதிகளை மனதால் ஸ்மரிக்கின் பாவியாகிறானென்றும், பௌடியம், ஸ்காந்தம் முதலிய புராணங்கள் கூறுகின்றன. என்ன

கொடும் பாவங்களைச் செய்தவனாயிருந்தாலும் அவனுடம்பின் ஓரெலும் பேனும் கங்கையில் சேர்வதால் அப்பாவங்களினின் றும்உடனே விடுவிக்கப்பட்டு சுவர்க்கத்தையடைகின்றான். இதற் கோரிதிகாசம் மேற் செய்யுளிற் காண்க. பின்னும் கங்கா ஸ்நா நத்திற்கென்று மனப்பூர்வமாய் சிறிதடிகள் எடுத்து வைத்துப் பின் வேறு நிமித்தங்களால் தடைப்படினுமவர்க்கும், கங்கா ஸ்நான பலன் கிடைக்கும். இக்கங்கா ஸ்நாநத்துக்கு ஸ்வரூப ஞானத்தைப் பெற்றவர்களும், விருப்பிறேடுமேகி முத்திபெறு வார்களாகையால் விசுவேசுவரர் தரிசனத்தினும் விசேடமுடை யது; இந்த ஞானிகள் விஸ்வேசர் தரிசனத்துக்குப் போகவேண் டிய தவசியமின்று. கங்கா ஸ்நானஞ் செய்யுமுன் வேறு தீர்த்தத் தில் ஸ்நாநத்தால் சரீர சுத்தி செய்து கொண்டு பூர்ணகும்பத் தையேந்தி கங்கையின் ஆயிர நாமங்களையும் விருப்புடன் கோஷி த்துக்கொண்டு போய் கங்கா தீரத்திலுட்கார்ந்தமர்ந்து, கங்கை யைமனதில் பாவித்து அருக்கியமாசபனாதிகளுடன் கூடிய வழி பாடுகள் செய்து, பின் பரமசிவன், சதுர்முகன; திருமால், இம வான், பகீரதன் இவர்களையும் பணிந்தேத்தி, வாழை முதலிய பழங்களையும்,பயறு, துவரைகடலைமுதலிய தானியங்களையும்அக மன விருப்புடனீந்து, மீன், ஆமை, அன்னபக்ஷி, நீர்க்காக்கை கொக்கு, முதலியவைகளினுருவங்களைச் செம்பொன், வெள்ளி அல்லது மாவினுற் செய்து கங்கையில் விடுத்து ஸ்நாநத்தை முறைப்படியொருக்கால் செய்த புண்ணியவானின்எழுபிறவி யிலுண்டான பாவங்களுமுடனே நீங்கி மிக்கமேலான பதவியை யடைகினறுனெனலாமேயன்றி, அப்பலனை இன்னின்னவென் றுவரையறுத்துரைக்க வாதிசேடனாலுமியம்புதலரிதாகும்.





## மணிகர்ணிகா மான்மியம்.

ஸ்ரீகாசிக்குப் பகீரதனுற் கங்கை வருவதற்கு முன்னமேயே ஸ்ரீமகாவிஷ்ணு தம் சக்கிரத்தால் ஒரு மடுவையுண்டாக்கி அதில் தம வியர்வை நீரைப்பூரித்து, இவ்வாவியின் கரையினின்றும் செய்த தவத்துக்கு விஸ்வேஸ்வரர் சந்தோஷமடைந்து சிரக்கம்பஞ்செய்தபோது காதிலணியப்பட்டிருந்த குண்டலத்தின்நாகரத்தினம் நழுவி விழுந்தமையாலிப்பெயர் காரணமாயிற்று. பின்னும் விஷ்ணுவின் சக்கரத்தால் வெட்டப்பட்ட படியால் சக்கரதீர்த்தமென்றும், அவரது திருமேனி வியர்வையாலுண்டான படியால் பிரமத்திரவமென்னும் பெயரினையடைந்ததும் காசிகாண்டத்தால் கூறப்பட்டுளது. இம்மணிகர்ணிகா மடுவில் கங்கைவந்து சேர்ந்தபிறகு அதிக மஹிமையையடைந்து முப்பத்து முக்கோடி தேவர்களும இதில் மாத்தியான்ன ஸ்நாநத்துக்கு வருவாராயினர். தவிரவும் காசியிலுள்ள மற்ற சமஸ்த தீர்த்தங்களும இதனிடத்தில் ஸ்நாநஞ்செய்யும் விசேஷத்தையுமடைந்து மற்றெல்லா கட்டங்களினும இம்மணிகர்ணிகாகாட் விசேஷ மஹிமையுடையதாயிருக்கிறது.

களங்கனியனைய மேனிகண்ண நின்றவத்தென் சென்னி
துலங்கலுங் குலழயிற்றாழ்ந்தசூடாமணி விழுந்தவாற்றால்
வளங்கெழுமிந்த வாவிக்கொளிர்மணி கன்னிகைப்பேர்
விளங்குவாவிதனிறதோய்ந்தோர் பெறலரும்வீடு சேர்வார்.

நால்வகைத்தோற்றத்துள்ள வுயிரெலாநலங்கொள்வாவிப்
பாலுயிருலப்பின் மீளாப்பதத்தினிற் சேருமியாருங்
காலவனபாசமறுததங்குதூய துறப்பட்டதன்மை
மாலறவுணர்ந்து மென்னேகாசியில மருவல் செய்யார்

யோசனை நூற்றுக்கப்பாலுரையுனரேனுமிந்தக்
காசியைநினைந்து வீயிற்கறபகத்தருவினீழற்
றேசொடு மமர்ந்து பின்னராசறாயப்புவியிற் சேர்ந்து
மாசிலிந்நகரின்மேவி மருவருமவீடுசேர்வார.

உருவரும்பொருளுமாக்கை யிளமையுமொருங்குநோக்கி
யரிவையர்மயக்கி னுள்ளமகிழ்ந்துவெவ்வழல்கட்கூற்றி
னெருமைமேயறணிநதகண்டையொலி செவிக்கிசைத்தென்னு
மருவருங்காசிசேரார் மக்களுட்பதடியாவார்.



# பஞ்சநதிமான்மியம்.

மணிகர்ணிகா காட்டுக்குத் தெற்கிலுள்ள பஞ்சகங்கா காட்டில் பஞ்சநதிகளாகிய, ஆதியில் தர்மநதியும் தூதபாவையுஞ் சேர்ந்து ஒன்றாய், அதனோடு கிரணை, கங்கை, யமுனை, சரஸ்வதியென்னும் நான்கும் சேர்ந்து பஞ்சநதியாயிற்று. இத்தீர்த்தத்திற்குரித்தாய விசேஷபலன் பாஞ்சபூதபௌதிகமான சரீரத்தைப்போக்கி தேஜோமயமான திவ்யசரீரத்தைக் கொடுக்கின்றது.

விரிபுனற்றருமநதமுயர்தூதபாவை சொல்விந்து நற்றீர்த்த
மருவியபஞ்சநதமென முன்னையுகமுதல்வரன்முறை மொழிங்கும்
பொருவறு நாமமிந்த மதனிற்படிந்துளோர் பூதமோரைந்தி
னுருவுடையாக்கை யெடுத்திடரெய்தா முத்திவீடுறைந்தினிதிருப்பார்.

இதன் பூர்வவிருத்தாந்தம்:—பூர்வத்தில் வேதசிரஸ்ஸென்ற இருஷியின் நற்புத்திரி பிதாவினனுமதிப்படி, தனக்குரிய நாயகனையடைய நெடுங்காலந்தவம் புரிந்தமையால், எல்லாப் பாவத்தையும் போக்கத்தக்க யோக்கியதை பெற்றவளாய்த் தூதபாவையெனும் பெயரினைப்பெற்றாள். அப்போது யமதருமராஜனவளைக் காந்தருவவிவாகம் முடிக்கக் கோரினபோது பிதாவினனுமதியின்றி உன்னோடு சேரமாட்டேனென்று கல்மனதோடுங்கூடி மறுத்தமையால் அத்தருமனவளையுங் கல்லாகச் சபிக்கவே, அவளும் "நீ சஞ்சலமுடையோனுதல் பற்றி ஜலரூபமடைவை" யென்றுசபித்தாள். பிறகு பிதாவினிடம் நடந்த விருத்தாந்தத்தைச்சொல்ல, நீவரயோக்கியமுள்ளவனை அங்கிகாரஞ் செய்யாதபடியால், சந்திரகாந்தச் சிலையுருவையடைந்து அத்தன்ம நதியோடுஞ்சேரென்று ஆக்ஞாபித்தபடி சேர்ந்தொன்றாயிருந்தனள். அதனோடு சூரியனுடைய தபசினாலவனது வியர்வையாலுண்டான கிரணையென்னும் நதியுஞ் சேர்ந்து, அவிடத்தில் கங்கை, யமுனை, சரஸ்வதியென்னும் மூன்று நதிகளுங்கூட பஞ்சநதியாயிற்றென்று மேற்காசிகாண்டச் செய்யுளாற் கூறப்பட்டது. இது கிருதயுகம், திரேதாயுகம், துவா

பரயுகம், கலியுகமிவற்றில் முறையே தர்மநதி, தூதபாவை, பிந்து தீர்த்தம், பஞ்சநதமென்னும் பெயர் பெறுவதாயிற்று.



## காசிப்பிரயாகை மான்மியம்.

காசிப்பிரயாகை மான்மியம் :—இக்காசிப்பிரயாகை என்று சொல்லப்பட்டது மேற்கூறிய பஞ்சகங்கா காட்டுக்குத் தெற்கிலுள்ள தசாஸ்வமேத காட்டிலுள்ளது. தசாஸ்வமேத காட்டின் விருத்தாந்தம் மற்றோரிடத்தில் சொல்லப்பட்டிருக்க, அந்த காட்டிலுள்ள சூலடங்கேஸ்வரர் சமீபத்தில் கங்கை, யமுனை, சரஸ்வதியென்னு மிம்மூன்றில் கங்கை உத்தரவாகினியாயும், யமுனை பூர்வவாஹினியாயும், சரஸ்வதி அந்தர்வாஹினியாயும் வருவதால் இதற்கு காசிப்பிரயாகை என்றும், சாக்ஷாத், (அலஹபாத்) பிரயாகையினும் மிக்க விசேஷமுடையதென்றும் (விஸ்வேஸ்வரர் சந்நிதியும் சேர்ந்திருப்பதால்) சொல்லப்படுகிறது. மணிகர்ணிகையிற்போலவே இதிலும் வபனம், சிரார்த்தம், தர்ப்பணம், தானாதிகளும் செய்தல் விசேஷமுடைத்து. இந்த மூன்றினுள் பிராதக்காலத்தில் பஞ்சநதத்திலும், தசாஸ்வமேதத்திலும், மத்தியானத்தில் மணிகர்ணிகையிலும் ஸ்நாநஞ்செய்தல் மற்றெல்லா தீர்த்தங்களின் பூர்ண பலனையும் அடைவார்கள் என்று ஸ்காந்தம், காசி காண்டம், பிரம்ஹ கைவர்த்தமிவைகளிற்கூறுகின்றன. பஞ்சநதத்தில் கார்த்திகைமாதத்திலும், காசிப்பிரயாகையில் மாகமாதத்திலும் விசேஷம், மேற்கூறிய மூன்று கட்டங்களுடன், அஸிஸங்கமகாட், வருணஸங்கமகாட் ஆகிய இவ்வைந்தும்தான், காசிகாட் அறுபத்திநான்கிலும் அதிக விசேஷமுடையவை.



## ஞானவாபிமான்மியம்.

ஞானவாபிமான்மியம் :— மேற்குறித்த கங்காஸ்நாந கட்டங்களைத்தவிர விஸ்வேஸ்வரர் சந்நிதானத்திலிருக்கும் ஞானவாபியில் ஸ்நாநஞ்செய்பவர்களுக்கு விசேஷ திடஞானத்தை அளிக்கும் மஹிமை பெற்றதாயிருக்கின்றது. இதன் விருத்தாந்தம் :— ஈசானருத்திரர் இங்கு தவஞ்செய்தகாலத்து சூலாயுதத்தாலொரு வாபியுண்டாக்கி அந்தத் தீர்த்தத்தை விசுவநாதருக்குக் காட்டி, அதன் தீர்த்தத்திலிருந்து தவம்புரியவே விஸ்வேஸர் சந்தோஷமடைந்து, பிரசன்னராய் வரமளித்த காலத்தில், இவ்வாபியில் ஸ்நாநஞ்செய்பவர்களுக்கு பரமஞானத்தைத்

தந்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்க அவ்வாறு கொடுத்தவரத்தினாலதற்கு அப்பெயர் காரணப்பெயராயிற்றெனவும், இஃதன்றி திரிவிஷ்டேஸ்வரர், மஹாலிங்கம், கிருத்திவாசமிவைகளுக்குச் சமீபத்து முறையேயுள்ளவிரஜா, மஹாகூபம், கிருத்திவாஸ தீர்த்தங்களும் விசேஷமுள்ளவை.



## ஆதியான்மிகக் காசிவாஸி இலக்ஷணங்கள்.

இதன் முன் 48-வது பக்கத்தில் பிரஸ்தாபித்திருக்கிற, கங்காதீரக்காசியாகிய ஆதி பௌதிகக் காசிக்குச் செல்லவேண்டியதனாவசியமாக, நந்தேகத்தின் புருவமத்தியின்கணுளதாய ஆதியான்மிகக் காசிவாஸியிலக்ஷணங்களைக் கைவல் யோபநிடதப்படி யிதனடியிற்குருசிஷ்யக்கிரமமாகக் கூறுவாம்.—

அழிவிலாத தற்பதந்தனை மைந்தனே யகமுகத்தவர் சேர்வார்
வழி நடப்பவர் பராமுகமாயினுன் மலர்ந்த கண்ணிருந்தாலுங்
குழியில் வீழ்வர் காணப்படி வெளிமுகங்கொண்டு காமிகளானோர்
பழிதரும் பிறவிக்கடலிலுழலுவார் பரகதியடையாரே.

அகமுகமின்றிப் பகிர்முகமாகச் செல்லுதலே கன்மங்களிற் செல்லுதற்கேதுவென்னலும், சிவச்செயலிவை ஜீவச்செயலிவையெனத்தெளியுனிமித்தம், ஜீவன் பகிர்முகமாதலின் அஃது ஈசன் செய்விக்குஞ் செயலேயன்றிச் சீவர்களென் செய்வார்கள்?

சிறந்த நன்மையுந் தீமையுமீசனுர் செய்விக்குஞ்செயலன்றோ
பிறந்த சீவர்களென்செய்வாரவர்கள் மேற்பிழை சொலும் வகையேதோ
துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதினூற் பொருண் மார்க்க
மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்தி காண்மைந்தனேயதுகேளாய்

திகழ்ந்தவீசனர் சிருட்டியுஞ்சீவனர் சிருட்டியும் வெவ்வேறே
ஜகந்தனிற்பொதுவீசனர் சிருட்டிகள் சராசரப்பொருளெல்லா
மகந்தையாமபிமானங்கள் கோபங்களாசைகளிவை யெல்லா
நிகழ்ந்தசீவனர் சிருட்டிகளாகுங்கா ணிமலனர் செயலன்றே.

இவ்வீரேழு லோகங்களிலும், அண்டபிண்ட பிர்ம்ஹாண்டங்களிலுமுள்ள சராசரப்பொருள்களை மாத்திரந்தான் பஞ்சபூத பௌதிகங்களால் ஈஸ்வரன் சிருஷ்டித் திருக்கிறரேயன்றி, அகந்தையாகிய அபிமானங்கள், த்வேஷங்கள், ஆசைகள் முதலானவைகளெல்லாம் அந்த சர்வேஸ்வரனை சிவனுடைய சிருஷ்டி அல்ல; பின்னும்.

மூவராம்பரன் சிருட்டிகளுயிர்க்கெலா முத்திசாதனமாகும்
சீவனாதுசிருட்டி கடங்களைச்செனிப்பிக்கும் பிணியாகுந்
தாவராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் ஜனனங்க ணசியாவாங்
கோவமாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிறவிகள்போமே.

ஈஸ்வர சிருஷ்டியான பஞ்சபூத பௌதிக முதலிய தத்துவங்கள் முத்திக்குச் சாதகமும், ஜீவசிருஷ்டியான காமக்குரோதாதிகள் பவபாசக்கடலுக் கேதுவாமென்பதையும் பகுத்துக் கூறினதாம்; பின்னும்,

ஈசர்காரியம் பிரளயத்தொழியவு மெவர்பவ மொழிந்தார்க
டேசகால தேகாதிகளிருக்கவுஞ் சீவகாரியமோக
நாசமாகியவ் விவேகத்தினுயிரொடு ஞானமுத்தர்களானர்
பாசமோகங்கள் பசுக்களின் செயலன்றி பசுபதிசெயலன்றே.

அதாவது ஈஸ்வர சிருஷ்டியிருக்க, ஜீவசிருஷ்டி நசிக்கினப்போதே வீடடைதலாற் காமமாதிகள் ஜீவச்செயலேயன்றி, சிவச்செயலன்றென்ப; பின்னும்,

அச்சுவத்தமென்றொரு மரமதிலிரண்டரும் பறவைகள்வாழு
நச்சுமங்கொருபறவை யம்மரக்கனிநன்று நன்றெனத்தின்னு
மெச்சுமங்கொருபறவைதின்ன வியங்கிப்பொருளாக
வைச்சுமாமதைச்சிவனை யீசனை வகுத்தவா றறிவாயே.

அச்சுவத்தமென்பது தலைகீழான மாயாவிருக்ஷமெனவும், மாயையில் வாழ்கின்ற ஜீவேஸ்வர தார தம்மியமு மிஃதெனப் பகுத்துக்கூறினதாம்; பின்னும்,

இந்தச்சீவனல் வருமறுபகையெலாமிவன் செயலல்லாம
லந்தத்தேவனல் வருமென்ற மூடர்களதோகதியடைவார்க
ளிந்தச்சீவனல் வருமறுபகையெலாமிவன் செயலல்லாம
லந்தத்தேவனலன்றெனும் விவேகியே யமலவீடடைவாரே.

இதன்கருத்து:—காமமாதிகளை ஈஸ்வர சிருட்டியெனக்கருதாமற் சீவசிருட்டியெனக் கொண்டவற்றை விசாரத்தாற் கெடுக்கின் முத்தி யுண்டாமென்பதாம்.

முன்பீஸ்வர சிருட்டிப்பொது வென்றமையாலவரும்பொது வாகவேண்டுமே, யங்ஙனமாயிற் சீவர்களிடத்திற் பக்ஷபாதம் வருவானேனென்ற வினுவிற் குத்தரம்:—

நலமெய்யையனே யெல்லவர்க்குந் தெய்வநாயகன்பொதுவானுற்
சிலரைவாழ்வித்துஞ்சிலரொடு கோபித்துஞ்செய்வதேனென்றுயேற்
குலவுமைந்தரைத்தந்தை போற்சிட்டரைக்குளிர்ந்து துட்டரைக்காய்வன்
கலகணல்வழி வரச்செயுந்தண்டமுங்கருணை யென்றறிவாயே.

கருத்து:—ஜீவர்கள் சுகப்படும்பொருட்டு வருத்தின், அஃதும் கருணையேயன்றி பக்ஷபாதமன்றென்பதாம்; அங்ஙனமாயின் ஈசன்யாவரையும்மென் இரக்ஷிக்கவில்லை யெனவரும் சங்கைக்குத்தரம்:—

மனைவிலங்கறுமைந்தனே கற்பகமரங் கனல் புனன்மூன்றுந்
தனையடைந்தவர்வறுமையுஞ் சிதமுந்தாக முந்தவிர்த்தாரு
மனையவீசனுமடைந்தவர்க்கருள் செய்வாரகன்றவர்க்கருள்செய்யா
ரினையகுற்றங்க ளெவா குற்றமாகு மென்றெண்ணி நீ யறிவாயே.

கற்பகவிருக்ஷம் முதலியவற்றைச் சார்ந்தவர்க்குத் துன்பம் நீங்கி யின்பமுண்டாவதுபோல, ஈசனைச் சார்ந்தவர்களுக்குப்பவத்துன்பம் நீங்கி, வீட்டின்பமுண்டாவதுண்மையென வறிந்தும், அவரைச்சார முயலாதது ஜீவன் குற்றமே யென்றறிக; மேலும்,

ஒன்றுகேண் மகனேபுமான் முயற்சியாலுரைத்த மானிடர்க்கீச
னனறுசெய்யலே காட்டிய நூனவழிநடந்து நல்லவர் பின்னே
சென்றுதுட்டவாதனை விட்டுவிவேகியாய்ச் செனித்தமாயையைத் தள்ளி
நின்றுஞானத்தையடைந்தவர் பவங்கள்போம் நிச்சயமிதுதானே.

ஜீவன்றனது முயற்சியாலீஸ்வ ரானுக்கிரகம் பெற்று, அவர் வாக்கியமான வேதாந்தமுடிவைச் சற்குருமுகமாக விசாரித்ததனல், விவேகமுண்டாய் அஞ்ஞானம் நீங்கி ஞானமுதயமாகிற் பவநீங்கு மென்பதாம்; அங்ஙனமாகவும் எதினலிந்த ஞானமுதிக்கு மெனின்:—

இந்தஞானந்தான் வருவதெப்படி யெனிலிடைவிடா விசாரத்தால்
வந்தடைந்திடும் விசாரந்தா னேதெனின் மனுதியாஞ்சரீரத்தால்
விந்தநானெவன் சித்தேது சடமெது விரண்டுமொன்ருக்கூடும்
பந்தமேது வீடேதென வுசாவுதல் விசாரமென்றறிவாயே.

சிற்சடவிலக்கணங்களைப் பகுத்தறியும் விசாரமே ஞானமுதித்தற்கு மூலமென்பதாம்; அந்த ஞானத்திற்கு மூலகாரணமாகிய நானகுவேத மஹாவாக்கியங்களையு மிங்கெடுத்துக் கூறுவானெருடங்கி; அம்மஹா வாக்கியங்களைக்கற்கு மாண்பினைப் பெறு மதிகாரியினிலக்ஷணங்களைக் கூறுவாம்.

நித்திய வநித்தியங்க ணிண்ணயர்தெரி விவேக
மத்தியவிகபரங்கள் வருபோகங்களி னிராசை
சத்தியமுரைக்கவேண்டுஞ்சமாது யென்றாறுகூட்ட
முத்தியைவிரும்பு மிச்சை மொழிவர் சாதனம்நான்கே.

சமந்தமம் விடல்சகித்தல் சமாதானஞ் சிரத்தையாறுஞ்
சமமகக்கரணதண்டந் தமம்புறக்கரணதண்ட
மமர்மனை விவகாரங்க ளருகலை விடலென்றாகு
மமர்செயுஞ் சுகதுக்காதி யனுபவிப்பது சகித்தல்.

சிரவணப்பொருளைத்தானே சித்தஞ்சிந்திக்குமாறு
சரசமாய்வைக்குமத்தைச் சமாதானமென்பார்மேலோர்
பரமசற்குரு நூலன்பு பற்றலே சிரத்தையாகும
வரம்குசமாது யறுவகையாஞ் சொற்பொருளீதாமே.

இம்மூன்று செய்யுட்களால் அநித்திய வஸ்துக்களிவையெனக்கண்டு, நித்தியவஸ்துவை யடைவதற்கேதுவான குணங்களையேசாதன சதுஷ்டயங்களாகக் கூறினதாம; மேலும், அச்சாதனங்களின்னியமையாமையையும, அதனாலுண்டாகும் பயனிஃதெனவுமீண்டு கூறப்படுகின்றது.

சாதனமின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
யாதலா லிநான்கு மடைந்தவர்க் கறிவுண்டாகு
நூதன விவேகி யுள்ளி னுழையாது நுழையுமாகிற்
பூதஜன்மங்கள்கோடி புனிதனும் புருடனுமே.

மேற்கூறிய சாதன சதுஷ்டயங்களைத்தன் முயற்சியாற் பெற்று, பின் சற்குருவின் கிருபாகடாக்ஷத்தால் அடியிற்கூறும சதுர்வேத மஹாவாக்கியங்களைச் சிரவண, படந, மனனந்தகள் செய்யும் முறைமையில் (அதாவது பக்தி, யோகாப்பியாஸ முதலானவைகளால்)ஸ்வானுபவத்தைப்பெறறுமேற்கூறிய ஆதியான் மிகக்காசியைற் (ஞானக்காசி) றரிசித்து அவ்விழியே முத்தியைப் பெறுதல் முறைமையாகுமென விளக்கினர் மேலோர்.

நானென்ற பிரமமான நானே நானறியே னென்று
னுனென்பதேது பின்னை நம்முடைய புந்தியெனனிற்
றூனது மயக்கந்தன்னிற் சாகுமோசாவ தாகி
னுன்ன நிறைந்திருந்த ஞானமா நானேநானே.

இருக்குவேத மகாவாக்கியப்படி ‘ஞானமேபிரம’ மென்பார், நானென்ற பிரமமென்றார், நானென்பது ஞானமாகிய சித்தையெனவும் பிரமமென்ப தானந்த மெனவுங்கொள்க; அதாவது கூடஸதனே பிரம்ஹம்.

நிறைந்தவா றெவ்வாறு நிலைதெரிந்தில னென்றாயே
லறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லானந்த மதுவேயாகும்
குறைந்ததுக் கானந்தந் தான் குவலயந் தன்னி லில்லை
நிறைந்ததே விந்தவான்மா ஆநந்தமு மவ்வறிவு தானே.

ஜுர்வேத மஹாவாக்கியப்படி அஹம் பிர்ம்ஹாஸ்மி, ...ார் நிறைந்ததே யிந்தவான்மா நிதானமு மிவ்வறிவுதானே கூறினர்.

...ந்த துண்டானு லன்றோ பிறகு சாவது தானுண்டாம்
...ந்ததே யில்லையென்னும் பிரம்ம மாவதுவு நானே
...ந்ததுநா னன்றுஙிற் பிரமமென் றந்நானே
...தது மிறந் தந்தப் பிரம்மமா நானே நானே.

...மவேத மஹாவாக்யப்படி தத்வமஸி "அது நீயானு" யென்பா ப்ரம்ஹம் நானேயெனுர், ப்ரம்ஹமெனபது அது வென்றும், ஆநந்தம் நான் என்பதும, நீ யெனனும் வித்தையும் ஆமென்று மைக்கியமா மெனக்கொள்க.

மன...து லெண்ணித்தானே வந்ததிவ் வுலகமாகு
நிலைத்திடி லனேகமாக நிற்ப துவ்வறிவி லன்றோ
வ...த்தையுங் கடந்தப்பாலு மந்தமற் றறிவிலன்றோ
...ளைத் தனி விசாரித்திட்டா லேகமாய் நிறைந்தோனுனே,

அதர்வணவேத மகாவாககியப்படி "அயமாத்மாபிரமஹ" மொரயார் ஏகமாய் நிறைந்தோனுனேயென்றுர்.

மேற்கூறியவாறு, காசிமான்மிய, கங்காமான்மியத்துடன் சம்மந்தப்பட்ட ஜீவேஸ்வரபேதம், ஜீவன் முத்தரிலக்ஷணங்கள், ...தியாமிக (ஞானக்காசி) ஆதி பௌதிககாசி (கங்காதீரக் ...ாசி) முதலானவைகளை ஒருவாறு எடுத்துரைக்கப்பட்டதனி, இராமேசுவர முதலான மறறக்ஷேத்திரங்களைப் பற்றி இயைந் தமட்டி லடைவினிவினிது நவில்வாம்.









## மூன்றாவது அத்தியாயம்.

பூபிரதக்ஷிணயதோக்த பாரதகண்ட யாத்ராக்கிரமமும்,
அவைகளின் க்ஷேத்திர தீர்த்த, மூர்த்திவிவரங்களும்,
மஜிலிகள் முதலிய பிரயாண சௌகரியங்களும்.

(1) அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வ
பூரியார் கண்ணுமுள.

(2) தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற்றேரி
னருளாதான் செய்யு மறம்.

(3) பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(4) சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

இத்திருக்குறள்களால் "புண்யஸ்தலத்தீர்த்தயாத்திரையே முத்திவழிக்கு வுற்ற நன்மார்க்க"மெனற்றெளிந்து, மகுடந்தரிந்த விஷயத்தை சூதமாமுனிவர் நைமிசாரண்ய ருஷிகளுக்கு பூர்வத்தில் அர்ஜ்ஜுனனுக்கு வியாசபகவானுரைத்தவாறுதிருவாய் மலர்ந்தருளியதை இதனடியில் இனிது நவில்வாம்.

தனிமுகக்கடவுளாகிய ஆதிவிநாயகரைத் தியானித்துத் துதித்துத் தங்களிருப்பிடத்தைவிட்டு முதலதிகாரத்தில் சொல்லியிருக்கிற விதிகளை யனுசரித்துப் புறப்பட்டு, முதலில் இராமேஸ்வரத்துக்குச்சென்று ஸ்ரீராமநாதஸ்வாமி, ஸேதுமாதவஸ்வாமி யிவர்கள் அனுமதியும் அனுக்கிரஹமும் பெற்று சேதுஸ்நாநம்செய்து சேதுவில் சமுத்திரராஜனுடைய பிருதிவியாம்சமாகிய மிருத்திகையை (காசிகங்கையில் பிறகு கலப்பதற்காக) கிரஹித்துக்கொண்டு யதோக்த பூபிரதக்ஷிண ஸ்ரீ காசியாத்திரை மஹாசங்கல்பம் செய்துகொண்டும் அவிடத்தில் செய்யவேண்டிய விதிபூர்வக வைதிகக்கிரியைகளைச்செய்து முடித்து, மறுபடியும் ஸ்ரீ ராமநாதர், ஸேதுமாதவர் விடைபெற்று அங்கிருந்து பூபிரதக்ஷிணமாக ஆரம்பம்செய்து இருப்புப் பாதைவழியாய் மதுரை, திருநெல்வேலிக்குச்சென்று, அங்கிருந்து ரோட்மார்க்கமாய் (தபால்வண்டிகளும் நாட்டு வண்டிகளும் தேவையானவை சௌகரியமாய்க் கிடைக்கும்) கன்னியாகுமாரி மார்க்கமாய் அநந்தசயனம் சென்று அங்கிருந்து சமுத்திரக் கால்வாய்வழியாக நாவாய்கள் அல்லது படகுகள் மூலமாயாவது, கரைமார்க்கமாயாவது ஜனார்த்தனம், கொல்லம், ஆலப்பிழை, வைக்கம்மார்க்கமாய்க் கொச்சிக்கும், அங்கிருந்து இருப்புப்பாதைவழியாய் ஷொரனூர், கள்ளிக்கோட்டையிலிருந்து மங்களூருக்கும், அங்கிருந்து சமுத்திரத்தில் படகுகள் அல்லது ஸ்டீமர் மூலமாயாவது அல்லது கரைமார்க்கமாயாவது உடுப்பி, கோகர்னம், கார்வார்வழியாய் மார்மகோவாவுக்குச் சென்று, அங்கிருந்து இருப்புப்பாதையால் லோண்டா, பெல்காம், கோலாபூர், புனவழியாய் பம்பாய்க்கும்; அங்கிருந்து சமுத்திரத்தில் ஸ்டீமர் மூலமாயாவது அல்லது இருப்புப்பாதையாலாவது சூரத், அங்கலேஷ்வர், பரோடா, ஆமதபாத், வீரம்காம், வட்வான், ராஜ்காட், ஜம்நகர்வழியாய் பேடிபந்தர் என்னும் ரெயில்வே டெர்மினஸ் துறைமுகத்திலிறங்கி அங்கிருந்து ஸ்டீமரிலாவது கரைமார்க்கமாயாவது ஸ்ரீமத் த்வாரகாபுரிக்குச் செல்லல்வேண்டும். இதுவரையில் மேலசமுத்திரக்கரையோரமாய் வடக்கு நோக்கிவந்தோம்.

இனி இங்கிருந்து வந்தவழியாய் முன்சொன்ன வீரம்காம் ரெயில்வே ஜங்ஷனுக்குச்சென்று ஆமதபாத்துக்குச் செல்லாமல் வடகிழக்குத்திசையாகத் திரும்பி மேஸனாஜங்ஷன், பாலன்பூர் ஜங்ஷன், மார்வார் ஜங்ஷன், அஜ்மீர், புலிரா, ஸங்கனர், பண்டிகூ, பர்ட்பூர் ஜங்ஷன்களின் வழியாய் ஸ்ரீமதுராவுக்குச் செல்லவேண்டும்.

அங்கிருந்து வடமேற்காகத் திரும்பி இருப்புப்பாதையால் டில்லியின்வழியாய் குருக்ஷேத்திரத்துக்குப் போகவேண்டும். இக்குருக்ஷேத்திரபூமியே நம்மாரியாவர்த்தத்துக்கு முக்கிய எல்லையாதலானும், இதற்கு மேற்கில் ஸிந்துநதியைத்தவிர பிரஸித்த புண்ய க்ஷேத்திரங்களாவது மூர்த்திகளாவதில்லையாமாதலானும் இக்குருக்ஷேத்திரத்தை பூபிரதக்ஷிண யாத்திரையின் வடமேற்குக்கோடி எல்லையாகவைத்து, அங்கிருந்து நேர்கிழக்காய் ஸஹரன்பூர், லக்கஸர் ஜங்ஷன்களின் வழியாய் ஹரித்வாரத்துக்குச்சென்று சுத்தகங்கையை எடுத்துக்கொண்டு அங்கிருந்து தென்கிழக்காய்த்திரும்பி மொரடபாத், பாரிஸி, ஷாஜிஹான்பூர், லக்நௌ ஜங்ஷன்கள் வழியாய் ஸ்ரீமத் அயோத்திக்குச் செல்லவேண்டும்.

அங்கிருந்து நேர்தெற்காக பிரயாகைக்குப்போய், சற்றுத் தென்கிழக்குத்திசையிலுள்ள ஸ்ரீமத் கயாவுக்கு முதலிற்சென்று பிதிர்கடன்களைத்தீர்த்துக்கொண்டு பிறகு ஸ்ரீ காசியைச் சேரல் வேண்டும்.

ஸ்ரீ காசியைவிட்டுப் புறப்பட்டு தென்கிழக்காய்த்திரும்பி ஸோணபத்திரா, ஸ்ரீமத்கயா, கோமா, அஸன்ஸோல் ஜங்ஷன்கள்வழியாய் கல்கத்தாவுக்கும் அங்கிருந்து இருப்புப்பாதையால் டயமண்ட்ஹார்பர்வழியாய் ஸ்ரீ கங்காஸாகரத்துக்கும் போகவேண்டும். இதுதான் கிழக்கெல்லை.

இங்கிருந்து மறுபடியும் கல்கத்தாவுக்கு வந்து நேர் தென்மேற்குத்திசையாய்த்திரும்பி கார்க்பூர், வைதரணீ, பிராம்ஹணீ, மஹாநதி, கூர்டாஜங்ஷன்வழியாய் ஸ்ரீ ஜகந்நாதத்துக்கு வரவேண்டும்.

மறுபடியும் அங்கிருந்து அதேதிசையாய் சத்தர்பூர், பர்ஹம்பூர், விஜயநகரம், விசாகப்பட்டணம்வழியாய் இராஜமஹேந்திரத்திலோடுகிற கோதாவரிக்கும் அங்கிருந்து பெஜவாடாவிலுள்ள கிருஷ்ணைவுக்கும், அங்கிருந்து நெல்லூரிலுள்ள உத்தரபினாகினிக்கும் வந்து நமது சென்னப்பட்டணம் சேரவேண்டும்.

சென்னப்பட்டணத்திலிருந்து அவரவர்களது இருப்பிடம் சென்று சொந்த கிரஹத்துக்குள் எஜமானன் மட்டும் போகாமல் வேறு ஜாகையிலிறங்கி அவிடத்தில் கங்காபூஜை செய்து (கங்காபூஜைமட்டும் செய்யவேண்டுமேயன்றி, இப்போது கங்கையை எடுத்து பந்துமித்திராதிகளுக்காவது தானுவது உபயோகிக்கக்கூடாது; ஸ்ரீராமநாத சுவாமிக்கு அபிஷேகஞ்செய்து

திரும்பி வீடுவந்த பிறகு ஸ்ரீசேதுமாதவ காலபைரவ சமாராதனே செய்யும்போது பந்துமித்ராதிகளுக்கு கங்கையை விதிப்படி அளிக்கவேண்டும்) இராமேஸ்வரம் சென்று ஸ்ரீஇராமநாதஸ்வாமிக்கு அபிஷேகஞ்செய்து அவிடத்து ஸேதுமாதவஸ்வாமியினிடம் ஸ்ரீகாசியாத்திரை யதோக்தமாய் செய்யப்பட்ட தென்பதையும், அந்த மஹாயாத்திரையில் மனோவாக்குக் காயங்களாலும் அஞ்ஞானகிருதமாய் செய்திருக்கக்கூடிய குற்றங்களேயும் மன்னித்துப் பூர்ணபலனேக் கொடுக்கும்படி பிரார்த்தித்து, அங்கு விடைபெற்று, இராமனுதசுவாமி சந்நிதானத்திலுள்ள இராமேஸ்வரதீர்த்தமாகிய சர்வதீர்த்தம், கோடி தீர்த்தங்களே யெடுத்துக் கொண்டுத்தன் சொந்த ஊருக்குத் திரும்பிவரவேண்டும். இப்போது தன் சொந்த வீட்டுக்குள் சென்று மற்றப்படி யதோக்த வைதிகக்கிரியைகளேச் செய்து பந்துமித்திராதிகட்கு கங்காஸ்நானம், ஆசமனியம், மார்ஜ்ஜனம் முதலியவைகளுக்குக் கங்கையையளித்து ஸேதுமாதவ காலபைரவ சமாராதனே செய்து வேதமோதிய அந்தணரது மஹதாசீர்வாதங்களேப் பெறல்வேண்டும்.

மேற்சொல்லிய அந்தந்த க்ஷேத்திர தீர்த்தங்களிற் செய்ய வேண்டிய முறைகளேயும், மற்றும் அவைகளின் பிரயாண சௌகரியங்கள் முதலியவைகளேயும் இதனடியிற் காண்க. அவ்வப்போது இத்துடன் இதற்காகவென்று சேர்க்கப்பட்டிருக்கும் பூகோளபடத்தையும் பார்வையிட்டுக் கொள்ளுதல் செவ்வனே விளங்குவதாகும்.

இவ்வாறு யதோக்தமாய் ஸ்ரீகங்கா யாத்திரை செய்த புண்யபுருஷர்களும், அவர்களே மனோவாக்குக் காயங்களால் பூஜிக்கிறவர்களும், அவர்கள் செய்த யாத்திரைகளின் விருத்தாந்தங்களேப் பக்திச் சிரத்தையுடன் கேட்கிறவர்களும், இகலோகத்தில் புத்திரமித்திர பௌத்ராதிகளுடன் பேருங்கீர்த்தியும் பெற்று தர்மார்த்த காமியங்களே யதேச்சையாய் அனுபவித்து இறுதியில் திவ்யஞ்யானத்தைப் பெற்று மோக்ஷசாம்பிராச்சியத்தையும் பெறுவர்.

முன்னோர் மொழிந்த யாத்ராவிதி, நவின்றோர் கேட்டோர்
மன்று ஞானஞ்சிவபூஜை தானந்தவமந்திரம் யோக
மின்னயாவுந் தருபலன்களௌிதி னெய்தி மறைநான்கும்
பன்னவரிதாய்ச் சிறந்தோங்கும் பரமனடியிற்சேர்குவரால்.

மேற்கூறியவாறு "யாத்ராக்ரமம்" சொல்லப்பட்ட போதிலும், அந்தப்படி யதோக்தமாய் செய்தாலொழிய பூர்ணபலன் கிடைக்காதென்பதல்ல. ஒவ்வொரு யாத்திரையிலும், யாத்திரை

யின் உட்பிரிவிலும், ஜாஸ்தியாய் செய்வதற்குச் சக்தியிருக்கும் போது, பொருள், தேகசிரமம் முதலியவற்றால் குறைத்துச் செய்யக் கூடாதேயொழிய, சக்திக்கியன்ற மட்டில் மனச்சாக்ஷிக்கு விரோதமின்றி செய்யும் ஒரு யாத்திரையின் மிகவுங்குறைந்த அளவுக்கும், அதன் மிகவும் ஜாஸ்தியான பலன் அதாவது யதோக்த சம்பூர்ணபலன் கிடைக்கிறதென்பது தர்மசூக்ஷ்மாபிப்பிராயம். இதை விவரிக்கும்போது அடியிற்கண்ட பல படித்தரங்களுக்கும் மேலே கூறியிருக்கிற தர்மரகஸியத்தைத் தெரிந்து செயின் பரிபூரணபலன் ஒரே சமமாய் எல்லாவற்றிற்குந் தப்பாமல் (வியாஸௌவாச) சித்திக்கின்றது.

1. மேற்சொல்லியவாறு யதோக்தமாய் பூபிரதக்ஷிண யாத்திரை செய்தல்.

2. ஸ்ரீகாசிக்கு மட்டும் எவ்வழியிலாவது போய்ச் சேர்ந்து யாத்திரை செய்தல்.

3. ஸ்ரீகாசியை ஒருவன் தன் முயற்சியின் எவ்வழியாலும் அடையக்கூடாத விடத்து, மரணத்தருவாயில் ஸ்ரீகாசியை மனப்பூர்வமாய் நினைந்து உச்சரித்தல்.

இம்மூன்று படித்தரங்களுக் கிடையே கணக்கிட்டறியக் கூடாத அந்தஸ்துகள் மறைந்து கிடப்பதை உற்று நோக்கின் செவ்வனே புலப்படும். மேலும் 84 லக்ஷம் ஜீவராசிகளுள்ளும் மேலான மானிட ஜன்மம் நமக்குக் கிடைத்திருக்கிற தென்பதையும், அப்படிக் கிடைத்திருப்பதின் நற்பயன் ஆத்மஞ்யானத்தைப்பெறவேண்டு மென்பதையும், அவ்வாத்மஞ்யானத்தைப் பெறுவதற்கு புண்ய ஸ்தலதீர்த்த யாத்திரையே ஏற்ற மேலான மார்க்கமென்பதையும் தெரிந்துகொண்டு, இம்மானிடஜன்மம் நீர்மேற்குமிழியான படியாலும், இப்பிறவிதப்பினலினி எப்பிறவிவாய்க்குமோ வென்பதையு மோர்ந்து, நாளைச் செய்வோமென்று நிறுத்தி வைக்காமல் இடம், பொருள், ஏவல் முதலிய உபகரணங்களைத் தன் முழுவல்லமையாற் கூடுமான சீக்கிர காலத்தில் அமைத்துக்கொண்டு ஸ்ரீகங்காயாத்திரையை ஒருவன் தன் ஆயுளின் சிரேஷ்டமான காலத்தில் செய்து முடித்து பரும கருணாநிதியாகிய ஸ்ரீகாசிவிஸ்வேஸ்வரரது கிருபாகடாக்ஷத்தினால் இம்மையில் புத்திர, மித்திராதிகளுடன் பேருங்கீர்த்தியுடன் அஷ்டைஸ்வரிய போக பாக்கியங்களையும் பெறுவராக.

இனி மேற்கூறிய யாத்ராக் கிரமப்படி விவரிக்குமிடத்து இராமேஸ்வரந் தொடங்கிச் செல்வோமாக.













# இராமேசுவரம்.

ஸ்ரீ ராமரால் முதல் முதல் பிரதிஷ்டைசெய்து பூஜித்த இலிங்கமாதலால் இராமேஸ்வரமென காரணப்பெயர்வாய்ந்தது. அதாவது ஸ்ரீராமர் ராவண வதஞ்செய்த பிரம்ஹ ஹத்தியாதி தோஷத்தை நிவர்த்தித்துக்கொள்ளுமாறு சிவபிரானை இலிங்க ரூபத்தில் பிரதிஷ்டைசெய்து பூஜை செய்த இடம். இக்ஷேத் திரத்துக்குப் போகிறவர்கள் மண்டபம் ஸ்டேஷனிலிறங்கி மத்தியில் 4 மைல் தூரமுள்ள பாம்பன் கால்வாயைச் சிறிய ஸ்டீமர் அல்லது படகால் தாண்டி மறுபடியும் பாம்பனில் ரெயிலேறி இராமேஸ்வரம் ஸ்டேஷனி லிறங்கவேண்டும். ஸ்டேஷனிலிருந்து கோயில் ஒருமைலிருக்கிறது. இவிட மிக்ஷேத்திரத்தில் பிரம்ஹ ஹத்தியாதி பைசாச தோஷங்கள், ராகுதோஷ முதலிய

சமஸ்தமும் நிவர்த்தியாகி நாகப்ரதிஷ்டை முதலியவை செய்வதால் மக்கட்பேறு முதலியஸந்தான ஸௌபாக்கியங்களை அடைகிறார்களென்பது சத்தியம், சத்தியம். ஸ்ரீ ராமநாதஸ்வாமி பூஜைக்கு முந்தியே சுப்பிரமணியக் கடவுளாலு மகஸ்தியமா முனிவராலும் பூஜிக்கப்பெற்றிருக்கிற குஹேஸ்வரர், அகஸ்தீஸ்வர லிங்கங்களுக்குப் பூஜைகள் செய்யப்படுகின்றன. இவிடத்துள்ள கந்தமாதன பர்வதத்துக்கு சுப்பிரமணிய ரதைத் தாங்கினபடியால் காரணப்பெயராயிற்று. சென்னப்பட்டணத்திலிருந்து இராமேஸ்வரத்திற்கு ரயில் சார்ஜ் ரூ 5—2—0 இராமேஸ்வரத்திலிருந்து சேதுஸ்நான கட்டத்திற்கு 20மைலிருக்கிறது. இவிடமும் ரெயிலிருக்கிறது. இவிடத்திலும் நம் நாட்டுக்கோட்டையார் தர்மான்ன சத்திரம் எல்லாச்சாதியாருக்கும் சாப்பாடு முதலிய தருமங்கள் மிகவும் சிரத்தையாகவும் பிரபலமாகவும் நடத்துகிறார்கள். இதைத்தவிர சேதுஸ்நான கட்டத்திற்கு 4மைல் வடக்கே முகுந்தராயர் தர்மான்ன சத்திரமும், இராமேஸ்வரம் டவுனில் தஞ்சாவூர் முதலிய ராஜாக்களின் சத்திரங்கள் ஆறுமிருக்கின்றன. ரெயில்வே ஸ்டேஷனில் பண்டாக்கள் (வைதீக கருமங்களை நடத்திவைக்கும் பிராமணர்கள்) எப்போதும் தயாராயிருப்பார்கள். மற்றப்படி கடைகண்ணிகள், ஜலசௌக்கியம் முதலியவைகளுக்கு எவ்வளவும் குறைவில்லை. இவிடத்தில் பிரம்ஹஸ்ரீ கி-வெங்கிடாஜலதீக்ஷிதர் வகையறு, கோடூரி சுப்பிரமணியசாஸ்திரியள் வகையறு, பக்ஷி லெக்ஷ்மண சாஸ்திரியள், அனந்தசயனம் மகாராஜா கட்டளை அண்ணுசாமிசாஸ்திரியள், கங்காதர பண்டா முதலானவர்கள் பிரசித்தமான க்ஷேத்திர வாஸிகள். விசேஷ தருமசிந்தையுடையவர்கள். சில க்ஷேத்திர வாஸிகளைப்போல் அல்லாது யாத்திரைக்காரர்களை அன்புடனேற்று சௌகரியம்போல் நடத்தி வைக்கிறார்கள். இராமேஸ்வரத்துக்கு வருவதற்கு முன்னால் ஆதிஸேது என்றும் நௌபாஷாண மென்றும் பெயர் பெறும் தேவிபட்டணத்துக்குச் (இராமநாதபுரத்திலிருந்து 8 மைல்) சென்று சமுத்திர ஸ்நானம் சுவாமி தரிசனம் செய்துகொண்டு வருவது யதோக்தமாகும். திரும்புகாலில் இராமநாதபுரத்திலிருந்து தெற்கே ஏழுமைலிலிருக்கிற மாணிக்கவாசகசுவாமிகளால் பாடல்பெற்ற திவ்ய க்ஷேத்திரமாகிய உத்தரகோசமங்கைக்கும் அங்கிருந்து 8மைலிலிருக்கிற (ஸ்ரீராமர் ஸேதுபந்தனத்துக்காக தர்ப்பையில் படுத்து விரதமிருந்தவிடம்) தர்ப்பசயனத்துக்குஞ் சென்று சுவாமிதரிசனஞ் செய்யவேண்டியது முறைமையாகும். தர்ப்பசயனத்தில் பலவித வர்ண ஓலைகளாலான மஞ்சட்பெட்டி

கள் முதலியவையும் இராமேஸ்வரத்தில் பலவித சோழிகளும் நயமாய்க் கிடைக்கும். இவ்வளவு தூரம்தான் ரெயிலில்வரவேண்டியது அவசியம். பாம்பன் வரையில் டிக்கெட்டு பெற்று ரெயில் மார்க்கமாய்ப் பிரயாணஞ்செய்து அங்கிருந்து (இராமேஸ்வரம் தீவு ஆரம்பமாகிறது) மகாப்ரசித்தி பெற்ற புண்ணியஸ்தலங்களாகிய இராமேஸ்வரத்துக்கும் அங்கிருந்து தனுஷ்கோடி யென்ற சேது ஸ்நான கெட்டத்துக்குமாவது '(கால்நடையாய் முடியாவிட்டால் நாட்டுவண்டிகள் முதலியவை சுலபமாய்க்கிடைக்கும்) பாம்பனுக்கும் இராமேசுவரத்துக்கும் 8மைல், இராமேசுவரத்துக்கும் தனுஷ்கோடிக்கும் 20மைல், ஆ இந்த28மைலர்வது பாதசாரியாய்ச்சென்று யாத்திரைசெய்வது விசேஷபலனைக் கொடுக்கும்; மத்தியில்தங்குவதற்கு சௌகரியமான மஜிலிகளும் விசேஷ தருமங்களுமுண்டு. இது சமுத்திர மத்தியிலுள்ள ஓர் புண்ணிய தீவானபடியால் கீழ் பூமி எல்லாம் மணற்சாரியாயும் காடுகள் நிறைந்தும் சமுத்திரத்தின் பேரிரைச்சலாலும் அழகாலும் வெகு ரமணீயகரமாயிருக்கும். இராமேசுவர சிவாலயத்தில் ஸேது மாதவரென்னும் விஷ்ணுவாலயமும் மாதவதீர்த்தமும் சேர்ந்திருக்கிறது. இராமேஸ்வர ஆலயத்தை வெகுவாய்விருத்தி செய்தவர் பாஸ்கர ஸேதுபதியாகிய இராமநாதபுரம் மகாராஜா. இப்புண்ணியவானின் பக்தி சிரத்தையை எழுதிமுடியாது. இவருடைய உருவம் பர்வத வர்த்தனீ யம்மன் சந்நிதியிலும் மற்ற இடங்களிலும் வைக்கப்பட்டிருக்கிறது.

இவ்விடத்தில் காசியைப்போலல்லாது பிரதி நித்தியம் ஆறு கால பூஜைகளும பிரம்மோற்சவம் முதலான உற்சவங்களும் வெகு ஒழுங்காயும் சிரத்தையாயும் விமரிசையாயும் நடத்தபபடுகின்றன. இப்பிரசித்த தேவாலயத்திலிப்போது நாட்டுக்கோட்டையாரும் சம்மந்தப்பட்டு இன்னுமதிக விமரிசை செய்யப்பட்டு வருகின்றன.

ஷை ஷட்காலபூஜை விவரம்:—1. உஷக்காலம்:—திருவநந்தல், பொரி, தாம்பூலம், ஸ்படிகலிங்காபிஷகம், நைவேத்தியம், 2. விளாபூஜை:—சுத்தசம்பா தோசை, அநந்தசயனம் ராஜா கட்டளை. 3. காலசந்தி:—புதுக்கோட்டை மகாராஜா கட்டளை கோயிலில் சேர்க்கப்பட்டது. 4, உச்சிகாலம்,—சம்பா, பொங்கல், சர்க்கரைப்பொங்கல், வடை, பால்பாயஸம். 5. சாயரட்சை:—புளியோதரை, கோயிலார் விசாரணையில் பச்சையப்ப முதலி கட்டளையில் சேர்க்கப்பட்டது. நாட்டுக்கோட்டையார் பால்கங்கை அபிஷேகம். 6. அர்த்த ஜாமத்துக்கு:—மிளகு

சம்பா, பள்ளியறைக்கு, பால், பொரி, தாம்பூலம், குறிப்பு:—காலசந்தியிலும், சாயரக்ஷையிலும், நித்தியோற்சவமுண்டு.

பிரம்மோற்சவ விவரம்:—மாகமாதத்து கிருஷ்ணபக்ஷ சஷ்டியில் த்வஜாரோகணஞ்செய்து மஹாசிவராத்திரிக்கு தீர்த்தங்கொடுப்பது. முதல் திருவிழா.—பகல் வெள்ளிசப்பரம், இரவும் அதுவே. இரண்டாம் திருவிழா—பகல் வெள்ளிச்சப்பரம், இரவு கற்பகவிருக்ஷம், காமதேனு, பெருச்சாளி மயில், சப்ரம் இவைகளில் பஞ்சமூர்த்தி புறப்பாடு, 3-ம் திருவிழா:—பகல் கந்தமாதன பர்வதத்துக்குப் போதல், இரா பூதவாகனம், ஸிம்ஹ வாஹனம், 4-ம் திருவிழா—பகல் சப்ரம், இரவு, இராவணன் தாமரை. 5-ம் திருவிழா:—பகல் சப்ரம் இரவு யானை, பல்லக்கு. 6-ம் திருவிழா:—பகல் சப்ரம் இரவு விருஷபவாஹனம், 7-ம் திருவிழா:—பகல் சப்ரம், இரவு சப்ரம், பின் சபாநாதர் புறப்பாடு. 8-ம் திருவிழா:—பகல் சபாநாதர், இரவு குதிரை, கிளி வாஹனங்கள். 9-ம் திருவிழா:—பகல் இரதோற்சவம், இராத்திரி சண்டாளாபிஷேகம். மஹாசிவராத்திரி விசேஷம். 10-ம் திருவிழா:—தீர்த்தம் ஸ்ரீஇராமநாதர் சந்நிதியிலிருக்கின்ற சமுத்திர ஸ்நானகெட்டமாகிய அக்னிதீர்த்தத்தில் கொடுக்கப்படுகிறது. சாயந்திரம் வசந்தோற்சவம், ராத்திரி பிக்ஷாடனம் அவரோஹணம் 11-ம் திருவிழா,—இராத்திரி சண்டோற்சவம்.

ஆடிப்பூர உற்சவம் வெகு விமரிசையாய் பஞ்சமூர்த்தி புறப்பாடுடன் இராமதீர்த்தக்கரையில் நடக்கிறது., இவைகளைத் தவிர மற்றப்படிக்குள்ள மாசிமகம், உத்தராயன தக்ஷிணாயன புண்ணிய காலங்கள், மஹாளய அமாவாசை முதலிய விசேஷ காலங்களில் சுவாமி புறப்பாடும் தீர்த்தமுமுண்டு.

இராமேசுவரத்திலுள்ள முக்கிய தீர்த்தங்கள்.—இருபத்திரண்டும், உபதீர்த்தங்கள் இருபத்தெட்டுமுள்ளன. இவைகளின் விருத்தாந்தங்கள், பெயரைப் பார்த்த மாத்திரத்தாலே விளங்கக்கூடியதே அவைகளை இங்கெழுதின் விரியுமாதலால் ஆவஸியகமுள்ளவர்கள் ஸேதுபுராணத்தால் தெரிந்துகொள்ளலாம்.

1. சக்ரதீர்த்தம்,—நவபாஷாண மென்னும் தேவிப்பட்டணத்தில் பெருமாள் கோவிலுக் கெதிரிலுள்ளது. (சமுத்திரம் இந்ததீர்த்தமாகிய சமுத்திரம் சீதாபிராட்டியார் ஸ்நானஞ் செய்த காலத்து அலைகளடங்கினதா லதுமுதலப்படியே யிருக்கிறது.

2. பேதாள தீர்த்தம்:—தில்லை நாச்சியம்மன் கோவிலுக்குத் தெற்கு, வெற்றிலை மண்டபத்துக்கு மேற்கில் ஆறுமைலிலிருக்கிறது.
3. பாபவிநாசம்:—வெற்றிலை மண்டபத்துக்கு வடக்கில் சமீபம்
4. சீதாகுண்டம்:—தங்கச்சி மண்டபத்துக்கு வடக்கில் கால் மைல்.
5. மங்களதீர்த்தம்:—தங்கச்சிமண்டபத்துக்குக் கிழக்குசாலையில் கால்மைல்
6. அமிருதவாபிதீர்த்தம்:—ஏகாந்த இராமஸ்வாமிகோயிலில்.
7. பிரம்ஹதீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்கு வடக்கு அரை மைல்.
8. ஹனுமந்ததீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்கு வடக்கு கால் மைல்.
9. அகஸ்தியதீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்கிழக்குகால்மைல்
10. இராமதீர்த்தம்:—இராமேஸ்வரத்திற்கு மேற்கு கால்மைல்.
11. இலக்ஷ்மணதீர்த்தம்:—இராமேஸ்வரத்திற்கு மேற்கு ஒரு மைல்.
12. ஜடாயுதீர்த்தம்:—இராமேஸ்வரத்திற்குத் தெற்கு மூன்று மைல்.
13. மகாலக்ஷ்மிதீர்த்தம்:— கிழக்கோபுரவாசலில் ஹனுமார் கோவில் சந்நிதிக்குத் தெற்கு.
14. அக்கினி தீர்த்தம்:—இராமேஸ்வர இராமனுதராலயத்துக்குச் சமீபம், கிழக்கு சமுத்திரம்.
15. சக்ரதீர்த்தம்:—இராமநாதராலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்துள்.
16. சிவகங்கை:—இராமநாதராலயத்துக்குள் ஸ்வாமி அம்மன் கோயில்களுக்கு மத்தியில்.
17. சங்கதீர்த்தம்:—இராமநாதராலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்துள்.
18. யமுனாதீர்த்தம், 19-கயாதீர்த்தம், 20-கவாதீர்த்தம். இம்மூன்றும் ஷை ஆலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்திலிருக்கின்றன.
21. சர்வதீர்த்தம்:—இராமனுதசுவாமி சந்நிதியில் கோயிலுக்குள்.

22. தனுஷ்கோடி:-பிரசித்தம் இராமேசுவரத்திலிருந்து தென் கிழக்காக இருபது மைல்.

## உபதீர்த்தங்கள்.

1. பைரவதீர்த்தம்:— பாம்பன் சமுத் திரம்.
2. கபிதீர்த்தம்:—பாம்பனில் திருக்குளம்.
3. இரணவிமோசன தீர்த்தம்:—ஏகாந்த இராமசுவாமிகோயிலுக்கு வடக்கு.
4. தனுசு தீர்த்தம்:— அதாவது வில்லூன்றி தீர்த்தம்—தங்கச்சிமடத்துக்கு ஒருமைல் சமுத்திர சுத்தஜலம்.
5. சுக்ரீவதீர்த்தம்:—கந்தமாதன பர்வதத்தின் பிரதக்ஷிணத்தில்.
6. அங்கதீர்த்தம்:—7-ஜாம்புவதீர்த்தம் இவ்விரண்டும் ஷை கந்தமாதன பிரதக்ஷிணத்தில் கந்தமாதன பர்வதசிகரத்தில் ஸ்ரீராமர் பாதங்கள் தெரிசன விசேஷம்.
8. தர்மதீர்த்தம்:—9-பீமதீர்த்தம்-10-அர்ஜுனதீர்த்தம்.
11. நகுல தீர்த்தம்:—12-ஸஹதேவ தீர்த்தம்-13-த்ரௌபதா தீர்த்தம்-14-தேவதீர்த்தம் 15 இலங்கைமகாகாளிதீர்த்தம் இவைகளும் ஷை கந்தமாதன பர்வதபிரதக்ஷிணத்தி லமர்ந்திருக்கின்றன.
16. மாதவதீர்த்தம்:—பெரியகோயில் மேலக்கோபுர வாசலினருகில்.
17. நளதீர்த்தம்:—18-நீலதீர்த்தம்-19-கவாக்ஷதீர்த்தம்.
20. கவேதீர்த்தம்:—21-கந்தமாதனதீர்த்தம்-இவ்வைந்தும்சேதுமாதவர் சந்நிதியிலிருக்கின்றன.
22. பிரம்ஹஹத்தியாவிமோசனதீர்த்தம், 23-சூரிய புஷ்கரணீ தீர்த்தம்-24-சந்திரபுஷ்கரணீ தீர்த்தம். இம்மூன்று தீர்த்தங்களும் பெரியகோவிலின் இரண்டாம் ப்ராகாரத்திலமைக்கப் பெற்றிருக்கின்றன.
25. காயத்ரீதீர்த்தம்:—26-சாவித்ரீதீர்த்தம்-27-சரஸ்வதீ தீர்த்தம் இம்மூன்றும், கீழகோபுரம் ராஜாசத்திரத்திற்குப்பின்னுள்ளன.
28. நாகதீர்த்தம்:—தர்மகர்த்தா மடத்தில்.

மற்றப்படி க்ஷேத்திரதீர்த்தவிதிகள் முதலத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கிறபடி க்ஷேத்திராடனம், தீர்த்தசிரார்த்தம்,

தர்ப்பணம், வபனம் முதலியவை அவரவர் சக்திக்குத்தக்கபடி ஐந்துரூபாய் முதல் செய்யலாம், நிற்க, மேற்கூறிய முக்கிய தீர்த்தங்களுக்குச் செலுத்தவேண்டியவும் ஸ்ரீ இராமநாதராலயத்தில் யாத்திரைவாஸிகள் நடத்தும்படியான உபயங்களுக்குச் செலுத்தவேண்டிய கட்டண விகிதங்களும் அடியிற்காண்க. இக்கட்டணங்களில் சரிபாதி சர்க்காருக்குச் சேருகிறது.

கோடிதீர்த்த அபிஷேகக்குடம் ஒன்றுக்குக் காலணா;தேங்காய் உடைத்து நைவேத்தியம்செய்ய காய் ஒன்றுக்கு ஒருஅணா, அஷ்டோத்ர அர்ச்சனை ஒன்றுக்கு ஐந்தணா, சகஸ்ரநாம அர்ச்சனை ஒன்றுக்கு ஒரு ரூபாய், பாயஸநைவேத்தியத்துக்கு ஒரு ரூபாய், வடை பாயஸ நைவேத்தியத்துக்கு இரண்டு ரூபாய், கங்காபிஷேகம் தீர்த்தச்செம்பு ஒன்றுக்கு ஒன்றே முக்கால்ரூபாய் உபயாபிஷேகம் நைவேத்தியமுள்பட ஐந்தரை ரூபாய், தங்கப் பல்லக்கு உற்சவத்திற்குப் பதினேழரை ரூபாய், பஞ்சாமிருதாபிஷேகத்துக்குப் பத்தொன்பதேமுக்கால் ரூபாய், பஞ்சமூர்த்திகள் அபிஷேகத்துக்கும் உற்சவத்துக்கும் நூற்றைம்பதுரூபாய், சங்காபிஷேகத்துக்கு முந்நூற்றைம்பது ரூபாய், மஹாபிஷேகத்துக்கு ஐந்நூறு ரூபாய்.

ஸ்ரீகாசியில் இந்த நிர்ப்பந்தங்களொன்றுமில்லை;எந்ததீர்த்தத்தில் யாரெப்படி எவ்வளவெடுத்தாலும் கேள்விமுறையில்லை. ஸ்ரீவிசுவேவஸர் முதலானசந்நிதிகளிலும் யாதொரு நிர்ப்பந்தமும் கிடையாது. பரமஏழையாகிய ஒருவனும் மஹாராஜனான மற்றொருவனும் ஒரேவிதமாய்ப் பாவிக்கப்பட்டு இவ்விருவரும் தங்கள் சொந்தக்கையினாலேயே அபிஷேகாதி அர்ச்சனை தீபாராதனைகளுடன் நைவேத்தியாதிகளும் செய்யலாம். கங்காபுத்திராள்முதலானவர்களுக்குக் கொடுப்பது நிர்ப்பந்தமல்ல; அவரவரிஷ்டம். காசியாத்திரையில் பிரயாகையில் கங்கையை யெடுத்துவருவது போலவே இவ்விடத்திலும் சர்வதீர்த்தம் கோடிதீர்த்த மிவைகளை யெடுத்துவந்து இல்லத்தில் பூஜைசெய்து அத்தீர்த்தங்களை பந்துமித்திராதிகளுக்கீந்து பிராமணசமாராதனையுஞ் செய்து யாத்திரையை சம்பூர்ணஞ் செய்யவேண்டியதும் யுக்தவிதியாம்,



## 2. மதுரை.

இராமேசுவரத்திலிருந்து வடமேற்கில் 101-மைல்; ரயில் சார்ஜ் ரூ 1—5—0 வைகையாற்றங்கரையிலுள்ளது. விஸ்தீரணம் முதலியவற்றில் சென்னபட்டணத்துக்கு அடுத்தது, த்வாதசாந்தஸ்தலம். இக்கோயிலின் அழகுக்கு நிகர் இவ்விந்தியாவிலெங்குமில்லை. இவிடம் மீனாக்ஷிசந்நிதானம் உலகப்பிரஸித்திபெற்றது. இவிடம் நடந்தேறும் சைத்ரோற்சவ முதலியவைகளின் காக்ஷி வேறெங்கும் பார்ப்பதரிது. ரெயில்வேஸ்டேஷனுக்கெதிரில் தங்குவதற்குவசதியான சத்திரமும், நேர்த்தியான ஹோடல்களும் ஊருக்குள் சில தர்ம அன்னசத்திரங்களுமுண்டு.

## 3. திருநெல்வேலி.

மதுரையிலிருந்து நேர்தெற்காக 99-மைல், ரெயில்சார்ஜ் ரூ 1—1—0: தாமிரபரணி தீரத்திலுள்ள செழிப்பான பெரியபட்டணம். அழகான பெரியகோயிலையுடைய சுயம்புசிவஸ்தலம், நதிதீரத்தில் நாட்டுக்கோட்டையாரது வசதியான தன்மான்னசத்திரமும் டவுனுக்குள் ஜாகாமுதலிய சௌகரியங்களும் நேர்த்தியான ஹோடல்களுமுண்டு. இவிடமிருந்து நேர்மேற்காக 108-மைலில் இருப்புபபாதைவழியாக கொல்லத்துக்கு ஒருலைன் செல்லுகிறது. சார்ஜ் ரூ 1—4—0 குத்தாலம், பாபநாசத்துக்கு இவிடமிருந்து போய்த் திரும்பிவரலாம்.

## 4. கன்னியாகுமாரி.

திருநெல்வேலியிலிருந்து நேர்தெற்காக ரஸ்தாமார்க்கமாய் 53-மைல். இருப்புப்பாதைகிடையாது. மாடு, குதிரை தபால்வண்டிகள் கிடைக்கும். மத்தியில் மஜிலிகள் செய்ய நான்கைந்து தர்மான்னசத்திரங்களுண்டு. இக்ஷேத்திரந்தான் நம்பரதகண்டத்துக்குத் தென்கோடிமுனை, இவிடம் அம்மன் சந்நிதியும், சமுத்திரஸ்நாநமும் விசேஷம், இவிடமிருந்து தர்மராஜ்யமாகிய திருவாங்கூர் சமஸ்தானம் ஆரம்பித்துவிட்டபடியால், இனி கொச்சி போகிறவரையில் எல்லாவித சௌகரியங்களுமுண்டு இருப்புப்பாதைமட்டும் கிடையாது, நல்ல ரோட்களும், சமுத்திரகால்வாயும் உண்டு இவ்விடங்களெல்லாம் பாஷை மலையாளம்.





## 5. அநந்தசயனம்.

கன்னியாகுமாரியிலிருந்து வடமேற்கில் சாலைமார்க்கமாய் 55-மைலில் மேலசமுத்திர தீரத்திலுள்ள விஷ்ணுக்ஷேத்திரம்; இவிடம் தர்மமஹாராஜா வசிக்கிறார், விசேஷ அன்னதானம் வகையறா தர்மங்கள் காலத்தையனுசரித்து நடந்தேறிவருகிறது. இவிடத்தில் ஆறுவருஷத்துக்கொருமுறை சம்பவிக்கும் இலக்ஷதீபம் வெகு விசேஷம். அநந்தபத்மநாபர், ஸ்ரீஹரிலக்ஷ்மி நாச்சியார், பூதேவி, கனகசபை, ஏமகூடவிமானம், மச்சதீர்த்தம். பூர்வதிக்கை நோக்கிச்சயனித்திருக்கும் அநந்த பத்மநாபசுவாமி தன் வலது கையை ஒரு சிவலிங்கத்தின் மேல் நீட்டியும், பிரமதேவனை நாபிகமலத்தில் கொண்டவராகியும், ஆதிசேஷன் மேல் சயனித்து மிருக்கின்றனர். இங்கு நரசிம்ஹஸ்வாமியும் கிருஷ்ணஸ்வாமியுமிருக்கின்றனர். இந்நகரில் ஒற்றைக்கால் மண்டப தேவாலயமும், உமாபதீஸ்வரர் ஆலயமும், அனந்த தீர்த்தம், அக்னி தீர்த்தம், சக்கரதீர்த்தம், சங்குமுகதீர்த்த முதலியன விருக்கின்றன. பிரமதேவன் கோரியவண்ணம் இரணியனைச் சம்ஹரித்து நரசிம்ஹசுவாமி வசிக்குந்தலம். அகத்தியர், மலயபர்வதம், மயிக்கிராவருணி, மகேந்திரபர்வதம், திரிகூடபர்வதம், தாம்பிரபர்ணி முதலியோருக்குக் காட்சி கொடுத்து அவரவர்களபீஷ்டங்களை நிறைவேற்றிய ஸ்தலம். உருத்திரனுக்கும், சந்திரனுக்கும், இந்திரனுக்கும் பிரத்தியக்ஷமான ஸ்தலம்; துளுவகுலத்திலவதரித்த திவாகரன் என்னும் யதீஸ்வரன் பூசித்தமுத்தியடைந்த ஸ்தலம், அநந்த பத்மநாபஸ்வாமி நியமனத்தின்படி இந்த யதீஸ்வரர் சந்ததியாரால் தான் இப்போதும் இவ்வாலய பூசை நடந்தேறி வருகின்றது.

### அநந்தபத்மநாபவிரதம்.

பூர்வம் திரேதாயுகத்தில் கவுண்டின்னியரென்னும் பிராமணனுடைய பாரியாளாகியசுசீலையென்பவள் அநந்தபத்மநாப விரதத்தையனுஷ்டித்து சகல ஐஸ்வரியங்களையுமடைந்து, பிறகு தன் புருஷனுக்கினையால் அதனைக்கைக் கொள்ளாது விடுத்து, அதனல் சகல கெடுதிகளையும் அனுபவித்து மறுபடியும் பத்மநாபஸ்வாமி ஆக்கினையாலதை யநுசரிக்க எல்லா நன்மைகளையுமடைந்தனர்.

விரதக்கிரமம்:—புரட்டாசி மாதப்பூர்வபக்ஷ சதுர்த்தசிதிதியில் ஒரு நதிக்கரையில் மெழுகி சுத்தஞ்செய்த மண்டலாகாரமான பூமியில் நான்கு புறத்தும் பஞ்சவர்ணங்கொண்ட மாக்கோலமிட்டு அதற்குத் தென் பக்கத்தில் சுத்த தீர்த்தமுள்ள கலசம் வைத்து அதன் நடுவில் அநந்த பத்மநாப சுவாமியை ஆவாகனஞ்செய்து, சமுத்திரமத்தியில் ஸ்வேத தீபத்தில் ஏழு சிரசுகளுடனும், வெண்மையுஞ் சிவப்பும் பொருந்திய கண்களுடனும், சங்கு, சக்கரம், கதை, தாமரைமலர் இவற்றை நான்கு புஜங்களிலும் தரித்துக்கொண்டு அநந்த பத்மநாப சுவாமி அங்கிருப்பதாத் தியானஞ்செய்து, அனந்த புட்பங்களாலருச்சித்து சோடச உபசாரங்கள் செய்து, பதினன்குவகை பலகாரங்களும், சித்திரான்னங்களும் நிவேதித்து, ஒரு கயிற்றில் பதினன்கு முடிபோட்டு அதை குங்குமத்தில் நனைத்து அங்கு வைத்து, இருபத்தெட்டுதிசரம் சமர்ப்பித்து, தூபதீபங்காட்டி சகலவரங்களும் கொடுக்கும் மூர்த்தியே யென்று துதித்து, காணிக்கை முதலிய கொடுத்து அக்கயிற்றை வலக்கரத்தில் தரிப்பதாம். இந்த விரதத்தை யனுஷ்டித்துப் பேறுபெற்றவர்கள் அகஸ்தியர், சகரராஜன், திலீப சக்கிரவர்த்தி, பரதமஹாராஜன், அரிச்சந்திரமஹாராஜன், ஜனகமஹாராஜன், கவுண்டின்னிய முனி முதலியோர்களாம்.

## 6. ஜனார்த்தனம்:

அநந்தசயனத்திற்கு சுமார் 25-மைல் வடக்கிலுள்ள தக்ஷிணகயையென்று சொல்லப்படுகிற இக்ஷேத்திரத்துக்கு சமுத்திரக்கால்வாயில் நாவாய்களிற் செல்வது சௌகரியம். இவிடம் ஜனார்த்தனன், சக்கரபாணி முதலிய பதின்மூன்று தீர்த்தங்களுள, இராவணாதி யிராக்ஷதர்களைவதைத்ததால் ஸ்ரீராமருக்கு நேரிட்ட பிரமஹத்தி தோஷம் போகும்படி பிரமதேவன் யாகஞ்செய்த ஸ்தலம். பாதருக்குத்தான் வருவதாகச்சொன்ன காலந்தப்பிப் போகிறதென ஸ்ரீ ராமர் பிரமதேவன் செய்த யாகத்துக்கு வராது இலங்கையிலிருந்து அயோத்திக்கு நேராகச் சென்றமையால், யாகத்துக்கு வந்திருந்த தேவர்கள், முனிவர், இருடிகள் முதல் யாவரும் ஸ்ரீ ராமபட்டாபிஷேக மஹோற்சவத்தைப் பார்க்க அயோத்திக்குப் போயினராதலால், யாகசாலையின் காமதேனுவாலுண்டாக்கின பர்வதாகாரமான அன்ன பதார்த்தங்களைப் புசிக்க யாருமில்லை யெனப்பிரமதேவன் சிந்திக்க, மஹாவிஷ்ணு ஜனார்த்தனனென ஒரு பாலகனாகி வந்து, அவற்றைப் புசித்து பிரமதேவனுக்குக் காக்ஷி கொடுத்த ஸ்தலம். பாகீரதி

பூசித்துப் பேறுபெற்றஸ்தலம். அக்னி தேவன் பூசித்து பிரம தேவன் செய்த யாகத்திலுண்டான பஸ்மம் தரித்தவர் கங்கை முதலிய புண்ய நதிகளில் ஸ்நாநம் செய்த பலன் பெற வரம் பெற்ற ஸ்தலம். சாபத்தால் மானிட வுருவங்கொண்டு தவஞ் செய்திருந்த நவப்பிரமாக்கள் அஸ்வத்த விருக்ஷமாக விருந்த மஹா விஷ்ணுவுக்குப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து கதி பெற்ற ஸ்தலம்.

சுப்பிரயஸ்ஸு என்னு மரசன் பிரம ஹத்தியினால் பீடிக் கப்பட்டு ஹிமஸ்ஸேது பரியந்தம் அநேக ஸ்தலவாசஞ்செய்து அகத்தியரனுக்ரஹத்தால் இத்தலமடைந்து சகல தீர்த்தங்களி லும ஸ்நாநஞ்செய்து தவஞ்செய்யுங்கால், ஓர் நாள் சமுத்திரத் தில் சஞ்சரிக்க, மஹா உன்னதமான அலையின் மத்தியில் பூர்வம பிரமதேவனுக்குச் சேவைதந்தருளிய ஜனார்த்தனர் அர்ச்சாவ தாரகராய்ப்பிரகாசிக்க, சுப்பிரயஸ்ஸு அதி வேகமாயோடி அதை ப்பற்றி யாலிங்கனஞ் செய்து கொண்டு வருகையில், சகலதேவர் கள், முனிவர்களு மங்குவந்து விசுவ கர்மாவினால் நிர்மிக்கப்பட்ட ஒரு விதமான மத்தியில் தேவ குருவால் பிரதிஷ்டை செய்வித்து த்தனக்குற்ற ஹத்தி நீங்கித்தன்னிராச்சியஞ் சேர்ந்து சகல ஐஸ் வரியமு மனுபவித்து முடிவில் விஷ்ணுபதவி யடைந்தனன. விசுவாமித்திரர் பூசித்து பிராமணத்துவமடைந்த தலம். வசிஷ் டர் ஆராதித்து புத்திரசோகம் போக்கிக்கொண்ட ஸ்தலம். இந்த சந்நிதிக்கெதிரில் க்ஷீராப்தியில் ஆலிலைமேல் விஷ்ணு மூர்த்தி சயனித்திருந்த பாவனையாக ஒரு கோயிலும், அதற் குப்பின்புறம் ஒரு சிவஸ்தலமுமிருக்கின்றன. இவிடமிருந்து வடக்கில் சுமார் 100 - மைலிலுள்ளகொச்சிக்கு, முன்சொன் ன நாவாய்வழியாக மத்தியிலுள்ள வைக்கம், ஆலப்பிழை, அம்பலப்பிழை முதலிய ஸ்தலங்களை தரிசித்துக்கொண்டு செ ன்று ரெயிலேறி அங்கிருந்து சமுத்திரக்கரையோரமாகவே சுமார் 220-மைல் இருப்புப்பாதைமார்க்கமாய் ஷோரனூர், கள் ளிக்கோட்டைவழியாய் மங்களூர் துறைமுகத்துக்குப் போக வேண்டும். இப்பட்டணத்தோடு இருப்புப்பாதை முடிந்துவிடு கிறது. இது ஒரு அழகிய பெரியஜில்லாபட்டணம். கோயில், குளம் முதலிய சௌகுரியங்களுண்டு. இனி இவிடமிருந்து வடக்கே சுமார் 200-மைலிலுள்ள மார்மகோவா துறைமுகம் போகிறவரையில் இருப்புப்பாதை கிடையாது, ஸ்டீமர்மார்க்க மாய் மிகவும் சௌகுரியமாய் மத்தியில் தங்கித்தங்கிச்செல்ல லாம், கரைமார்க்கமாயும் போகலாம். இவிடமெல்லாம் பாஷை

கன்னடம். மங்களூரிலிருந்து சுமார் 40 மைலிலுள்ள உடுப்பி க்ஷேத்திரத்துக்குச் செல்வோமாக.

## 7. உடுப்பி.

இது ஸ்ரீ கிருஷ்ணதேவருக்குரிய பிரபலஸ்தலம். மத்வமதஸ்தர்களுக்கு முக்ய ஆசாரியஸ்தானம், ஆசாரசீலமுள்ள ஒவ்வொரு மத்துவனும் இவ்வுடுப்பி யாத்திரைக்குச்சென்று முத்திராதாரணம் செய்துகொள்ளாமலிரார். அநந்த சயனத்திறம்போலவே இவிடத்திலும் காலவரையறையின்றிப் பிராமணருக்கு இறைமாய் அன்னமளிக்கும் ஊட்டுப்பிறை உண்டு, இது துளுவமத்திய தேசம், அதாவது முக்யபாஷை துளுவம், கன்னடமுமுண்டு.

## 8 ஸ்ரீ கோகர்னம்.

உடுப்பியிலிருந்து வடக்கில் சுமார் 55 மைலிலுள்ள பச்சிமகாசியாகிய இத்திவ்ய சிவக்ஷேத்திரத்தில் இலிங்கரூபமாய் எழுந்தருளியிருக்கும் சர்வ ஜீவகாருண்யரான பரமசிவனது திருஉருவம் (கோ=பசு, கர்னம்=காது) பசுமாட்டின் காதைப்போன்றது. இம்மஹாலிங்கம் ஸ்ரீ காசிவிஸ்வநாதரைப்போலவே பூமிமட்டத்துக்குக்கீழ் மிகவும் சிறிபரூபத்துடனும் மேன்மை தங்கிய ஆவுடையார் சூழப்பெற்றதாயுமிருக்கிறது. இவ்விடத்திற்றுன் இராவணேஸ்வரன் மகத்தான தவமியற்றிப் பரமசிவனிடம் மேலான வரங்கள்பெற்றதும், கங்காதாரணத்துக்காகப்பகீரதன் அருந்தவமியற்றிப் பரமசிவனைச் சத்தியவுலக கங்கையை யேற்கும்படி வரமடைந்ததுமிக்தலமே இவர்கள் தவம்புரிந்த பருவதம் கோகர்னேஸ்வரருக்குத் தெற்கில் சமீபத்திலிருக்கிறது. இக்கோயில் கூடியவரையில் பெரிதாயும், பிரம்மோற்சவம் முதலியவைகளும் ஷட்காலபூஜாக்கிரமங்களுடனேயுங்கூடி நம்சோளதேச ஏற்பாட்டைப்போல் நடக்கிறது. கோகர்னேஸ்வரருக்கு சுமார் ஒரு பர்லாங்குக்கு மேற்கில் உயர்ந்த அலைகளோடுங்கூடிய சமுத்திரம் கோஷித்துக்கொண்டிருக்கிறது. அமாவாசை முதலிய பருவகாலங்களில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் சமுத்திர ஸ்நாநத்துக்கு வருகிறுர்கள். தவிரவும் ஊருக்குள்ளிருக்கும் புஷ்கரணிதீர்த்தமும், காயத்ரீ நதியும் சாதாரண காலங்களில் ஸ்நானம்செய்யத் தகுந்தவைகள். தர்மான்ன சத்திரமும் தர்மசாலைகளுமிருக்கின்றன.

இம்மஹா சிவக்ஷேத்திரமாகிய பச்சிமகாசியை (கோகர்ன ஸ்தல புராணம் பார்க்க) தர்மாத்மாக்களான நம் நாட்டுக்கோட்டையாரைக் கவனிக்கச்செய்ய அருள்புரிவராக. கோயிலைச்சுற்றி

தேரோடும் வீதிகளும், கடைத்தெருக்களும், தாலூகா முதலிய கச்சேரிகளுங் கூடிய இச்சிறுபட்டணம் தென்னஞ்சோலை முதலியவைகளும், நெல்முதலிய தானியவகைகளும் விளையப்பெற்றதாய் வெகு செழிப்பான பூமியாயிருக்கிறது. மாக மாததத்தில் வரும் மஹா சிவராத்திரிக்கு இவிடத்தில் பிரம்மோற்சவம். இத திவ்யக்ஷேத்திரத்துக்கு பம்பாய், குஜராத்தி, முதலிய வெகு தூரதேசங்களிலிருந்தும் யாத்திரை 12 மாதங்களிலும் வந்து கொண்டிருக்கிறார்கள்.

இச்சீவன் முத்திக்ஷேத்திரத்திலெழுந்தருளியிருக்கும் பரமசிவனுக்கு மஹா பலேஸ்வரரென்றுஞ் சொலலுவர். பரமசிவனெழுந்தருளியிருக்கின்ற கைலையங்கிரியை இலங்காதிபதி தன்னாற் கூடியவரை முயன்று பிடுங்கப்பார்த்தும் அசைக்கக்கூடாதபடியால் உமாபதிக்கு இப்பெயர் காரணமாயிற்று.

இவிடமிருந்து வடக்கே சுமார் 130 மைலிலுள்ள மார்மகோவாவுக்கு ஸ்டீமர்வழியாய்ச்சென்று, அங்கிருந்து வடக்குத் திசையில் சுமார் 250 மைலிலிருக்கிற பம்பாய்க்கு, ரத்னகிரி துறைமுகத்தின் வழியாய் ஸ்டீமரிலாவது, அல்லது இருப்புப் பாதையால் லோண்டா ஜங்ஷன், மிருஜ் ஜங்ஷன், ஸதாரா, புனா, கலியாண் ஜங்ஷன்களின்வழியாய் பமபாய்கருச்செல்லவேண்டும்.

பம்பாயிலிருந்து ஸ்ரீமததுவாரகைக்கு ஸ்டீமர்மார்க்கமாய்ச் சென்றால் நேர் வடமேற்குத் திசையாய் 280 மைல், ரெயில் மார்க்கமானால் சுமார் 550 மைலாகிறது. ஸ்டீமர் சார்ஜும் ரயில் சார்ஜின் தாரணேமே. ஸ்டீமரில் அசுத்தப்படாம லுட்காருவதற்குப் போதுமான இடம் வசதி உண்டு. பம்பாயிலிருந்து த்வாரகைக்கு ஒரு இரவுக்குள் சேர்ந்துவிடுகிறது. இருப்புப் பாதையைப் போலவே எல்லாவித செளகரியங்களும் உண்டு. பம்பாயிலுள்ள சில பிரபுக்கள் த்வாரகைக்கு இனும் டிக்கட்டுகள் கொடுகிறார்கள். ஸடீமர் மார்க்கமாய்ப்போனால் மத்தியிலுள்ள போபெற்ற புராதன "சோமநாத" என்னும் சிவக்ஷேதரம பார்க்கத் தகுந்தது.

இருப்புப்பாதையானால் பம்பாயிலிருந்து நேர் வடக்காய் சூரத்து, அங்கலேஷ்வர், பரோடா மார்க்கமாய் ஆமதபாததுக்குச் சென்று அஙகிருந்து தென்மேற்காய்த் திரும்பி வீரம்காம், வாட்வான், வங்கனர், ராஜ்காட்ஜங்ஷன்களின்வழியாய் பேடிபநதர் துறைமுகத்திலிறங்கி அங்கிருநது ஸ்டீமரிலாவது, கரைமார்க்கமாயாவது 52மைலிலுள்ள ஸ்ரீமத்துவாரகையைச்சேரவேண்டும்.

இந்த மார்க்கத்தில் குறிப்பிட்ட அங்கலேஷ்வரில் சப்தநதியிலொன்றாகிய நருமதாநதி ஓடுகிறது. பரோடாவில் பண்டித பாமரர்களை ஆதரிக்கும் இராஜா வசிக்கிறார். இவிடங்களெல்லாம் பாஷை மஹாராஷ்டிரம், குஜராத்தி, ஷை வாட்வான் ஜங்ஷனுக்கு அடுத்த மியூலி ஸ்டேஷனிலிருந்து ஸ்ரீமத் நாதத்துவாரத்துக்குச் செல்லல்வேண்டும்.

## 9. ஸ்ரீமத்வாரகை.

சப்தபுரிகளிலொன்றாகிய இது, பம்பாய்க்கு வடமேற்கில் குஜராத்தி தேசத்தில் கதியவார் என்னும் த்வீபகல்பத்தின் மேற்குமுனையில் கோமதியென்னும் சிற்றாற்றின் பேரிலிருக்கிறது. இக்ஷேத்திரம் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் சங்கு சக்கிரமென்றும், இதை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அரசாண்டதாகவும் சொல்லப்பட்டிருககிறது. இதன் மற்ற சரித்திரங்களை ஸ்ரீமத் பாகவதத்தில் விரிவாய்ப் பார்க்கலாம். தத்காலம் க்ஷேத்திர விசேஷத்தைத் தவிரவேறில்லை. வியாபாரம், வர்த்தகம், கச்சேரிகள் முதலியவையில்லாத சாதாரண ஊராயிருக்கிறது. வாஸத்துக்கு சௌகுரியமானதல்ல. த்ரிராத்திரம் வஸிப்பதே சிரமமாயிருக்கும். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கோயிலில் நம் திராவிடதேசத்து ஸ்ரீ வைஷ்ணவர் அர்ச்சகர்களாயிருக்கிறார்கள். பெருமாள் சந்நிதியில்கிடைக்கும் பிரசாதத்தைத் தவிரமற்ற சௌகுரியம்கம்மி.

நாமிப்போது பூபிரதக்ஷிணமாக செய்து கொண்டுவரும் மஹாயாத்திராக் கிரமத்தில் இந்த த்வாரகையை வடமேற்கு எல்லையாக வைத்து, இங்கிருந்து ஸ்ரீகிருஷ்ணாவதார ஸ்தலமாகிய ஸ்ரீமதுராவுக்குச் செல்லும் மார்க்கம் அடியில்வருமாறு:—முன் சொன்ன பேடிபந்தர் ஸ்டேஷனில் ரயிலேறி ஜடல்சர், ராஜ்காட் வங்கனர், வட்வான், வீரம்காம் ஜங்ஷன்களின் வழியாய் ஆமதபாத்துக்குச் செல்லாமல் மேஸனா, பலன்பூர் ஜங்ஷன்களின் வழியாய் மார்வாருக்குச் சென்று, அங்கிருந்து ஆஜ்மீருக்குப்போய் அங்கிருந்து புலேரா ஜங்ஷன் வழியாய் ஜயப்பூருக்குச் சென்று அங்கிருந்து ஸங்கனர், பண்டிகூப், பர்ட்பூர் ஜங்ஷன்களின் வழியாய் ஸ்ரீமதுராவுக்குச் செல்லவேண்டும். பேடிபந்தரிலிருந்து ஸ்ரீமதுராவுக்கு சுமார் 700 மைல், ரெயில் சார்ஜ் ரூ 9—10—0.

இம்மார்க்க மத்தியில் ஆஜ்மீர் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கில் ஏழுமைலிலுள்ள "புஷ்கரம்" என்னும் பிரபல க்ஷேத்திரம் தரிசிக்கத் தகுந்தது.





# 10. ஸ்ரீமதுரா.

மதுரா:—யமுனாநதியின் தென்கரையிலுள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவான் திரு அவதாரஸ்தலமாகிய இம்மாநகர் ப்ரயாகையிலிரு ந்து 305 மைல் தூரத்திலுள்ளதும், நேர்மேற்காகாமல் சற்று வடமேற்குத் திசையாய் கான்பூர், டூண்ட்லா ஜங்ஷன் வழியாய் ஆக்ராவுக்குச் சென்று அங்கிருந்து இதற்குச் செல்வதும் நேர் மார்க்கமாகும். இது மிகவும் பிரசித்திபெற்ற ஸப்தபுரிகளில் ஒன்றாகிய முத்தியருள் க்ஷேத்திரமல்லாமலும் அநேக கோயில் களும், அழகிய பெரிய கட்டிடங்களுமுள்ள வெகு புராதன நகரம்; இது ஒரு பெரிய ஜில்லா; இதில் ஒரு பட்டாளமிருக் கிறது. நமக்கு உயிர்க்குச்சமான முக்கியமுள்ள அநேககோயில் களையும் மத சம்மந்தமான கட்டிடங்களையும் மிலேச்ச கொடுங் கோலரசர்கள் (மகம்மது கஜனி- அவுரங்கஜீப்- லோடி முதலா னோர்) கருவறுத்து இடித்துத் தள்ளிப் பாழாக்கிவிட்டார்கள். நம் காருண்ய பிரிடிஷ் கவர்ண்மெண்டார் காலத்துக்குப்பிறகு சமீப காலங்களில் பம்பாய் குஜராத்திதேசத்துப் பிரபுக்கள் இப் போதைய கோயில் குளங்கள் முதலியவைகளை இலக்ஷக்கணக் கான பொருள்செலவழித்துக் கட்டியிருக்கிறார்கள்; மிலேச்சர் கள் முதலான இதர மதஸ்தர்கள் நமக்கும் நம்கோயில் குளங் களுக்கும் என்ன கெடுதிகள்செய்தாலும், அவைகளின் மஹிமை மட்டும் முன்னிலும் அதிகமாய் விருத்தியாகிறதென்பதை இனி

யாவது நம் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் கவனிப்பாராக. இந்நக ரில் யாத்திரைக்காரர்களின் சௌகுரியார்த்தமாய்ப் பல பொதுச் சாலைகளும், சத்திரங்களும் தர்மங்களுமுண்டு. இவிடத்து இராதா கிருஷ்ணனென்னும் ஒரு தனுட்டியன் இக்ஷேத்திரத்துக்கு யாத் திரை வரும் ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவருக்கும் ஐந்து ரூபாய் இனுமளித்து வரும்படி ஏற்பாடு செய்திருக்கிறார். ஸ்ரீ வைஷ் ணவர்களுக்கு எத்தனை காலமிருந்தாலும் கோயில்களில் இனும் பிரசாதம் குறைவின்றி யளிக்கபபடுகிறது.

பெரியாழ்வார் முதலியோரது மங்களசாஸனப்படி :—

செல்வமுயிருடம்பு சேரவுரித்தாக்கி
வல்வினையினீங்குமினே மாந்தர்காள் -தொல்லை
வடமதுரையான்கழலேவாய்த்த தஞ்சமென்று
திடமதுரைசெய்தான்பிறத்து.

தேவாசுர யுத்தத்தில் மகாவிஷ்ணு அசுரர்களை யுத்தகளத் திற் றோர்க்கடிக்க அவர்களெல்லாம் பூமியிற் கொடுங்கோலரச ராய்ப் பிறந்து கொடுங்கோன் செலுத்திய காரணத்தால் தருமங் குறைந்து அதர்மமேமேலிடவே பூபாரந்தாங்காமல் பூமிதேவியான வள் பிரம்மா விடஞ்சென்று முறையிடலும் சதுர்முகன் திருமா லிடம் விக்ஞாபனஞ்செய்யலு மாங்குபிறந்த அசரீரிவாக்கதனை புணர்ந்து பிரம்மா தேவர்களைப்பார்த்து ஸ்ரீமந்நாராயணன் வசு தேவருக்குத் திருக்குமாரனுய்ப் பிறந்து பூபாரத்தை யொழிப் பான். தேவஸ்திரீகளும் நீங்களும் திருமாலுக்குத் திருவிளை யாட்டளிக்க கோபஸ்திரீகளாகவும் யாதவர்களாகவும் அவதரி யுங்கள். ஆதிசேஷன் பகவானுக்கு ஜியேஷ்டனுயும், மகா மாயை ஒரு ஸ்திரீயாகவும் அவதரித்து தருமத்தை நிலைநாட்டு வார்களென்று சொல்லி உத்தரவு கொடுத்தனுப்பிவிட்டார். அவ்வாறுகவும் இம்மதுராபுரியில் உக்கிரசேன மகாராஜனுக்குக் குமாரனுகிய கம்ஸன் தன் சகோதரியாகிய தேவகியை வசுதேவ ருக்குத் திருமணஞ்செய்வித்து ஊர்வலம் வருங்காலையில் அசரீரி வாக்காக ஹே கம்ஸா ! இவ்வளவு சந்தோஷமாய்க் கலியாணஞ் செய்து வைக்கிறுயே, இந்தத் தேவகியினது அஷ்டம கர்ப்பத் திற் பிறக்கும் குழந்தையால் நீ மரணத்தை யடைவாயெனவும், கம்ஸமகாராஜன் திடுக்கிட்டு மனம் வருந்தி அந்தக்ஷணமே அத் தேவகியினது கூந்தலைப்பற்றி அவளை வாளால்வெட்ட ஓங்கவும், வசுதேவர் வந்து கையைப் பிடித்துக்கொண்டு ஹே கம்ஸா இவள் பெரியவளாய் கர்ப்பந்தரிக்கும் பக்குவகால மடைந்து பிறகு இவள் எட்டாவதுகர்ப்பத்தாலல்லவோ நீ சாவாய், அவள் பெறும் குழந்தைகளை யெல்லாம் உன்னிடம் கொடுத்துவிடு கிறேன். நீ அவைகளை உன்னிஷ்டப்படி செய்துகொள். இப்

போழ்ந இவளை விட்டுவிடென்று வேண்டிக்கொண்டதை கம்ஸன் ஏற்று இவளைக் கொலைசெய்யவேண்டிய அவசியமில்லை யென்று மணமக்களிருவரையும் அவர் கிரஹத்துக்கு விட்டேகினான்.

பிறகு தேவகியார் பக்குவமடைந்து கர்ப்பந்தரித்து பெற்ற சிசுவை வாக்குத்தத்தப்படி கம்ஸனிடம் வசுதேவன் கொண்டு போய்க்கொடுக்கவும் கம்ஸன் இரக்கமுற்று எட்டாவதுகர்ப்பத் தாலல்லவோ என் உயிர்மாயும், இவ்வழகிய சிசுவைக்கொல்வதில் யாதுபயனென்று சிசுவைத்திருப்பிக்கொடுத்துவிட்டான். பிறகு நாரதமாமுனிவன் கம்ஸனிடம்வந்து ஏமூடா! ஒவ்வொன்றும் எட்டாவதுபிள்ளையேயாகும், தேவகிகர்ப்பத்தால்நீ முடிவதில்சிறிதும் சந்தேஹமில்லை; நீபூர்வஜன்மத்தில் காலநேமியென்ற அசுரன், உன்னைச் சேர்ந்த மற்றவர்களும் இப்பூமியில் பிறந்திருக்கிறார்கள், இப்பிறப்பிலும் உங்களைமாய்க்கதேவகிநந்தனனாய் அவதரிக்கப்போகிறான். சிலதேவர்களும் யாதவர்களாய் அவதரித்திருக்கின்றனர் என்று சொல்லிப்போயினர்; இவ்வாறு சொன்னவுடனே மறுபடியும் அக்குழந்தையைக் கொண்டுவரச் செய்து அக்குழந்தையை உயிர்க்கொலைபுரிந்து தேவகிவசுதேவரையும் விலங்கிலிட்டு சிறையிலடைத்து அவர்பெறும் குழந்தைகளை யெல்லாம் கொலைசெய்து வந்ததுமல்லாமல் ஜராசந்தன், பிரயம்பன், பகன், சாணூரன், த்ருணாவர்த்தன், முதலியோரைத் தனக்கு உற்றவராகச் செய்துகொண்டு யாதவர்களைக் கருவறுக்கும்படி விரோதித்துக் கொண்டிருந்தான். அந்தக்காலத்தில் யாதவர்களெல்லாம் திக்குவிதிக்குகளிலும் பறந்தோடி உயிர்வாழ்ந்திருந்தனர். தேவகியினது ஆறு குழந்தைகளையுங் கொன்றபின் ஏழாவது கருப்பந்தரிக்கவே அக்கருப்பத்தை ஆகருஷித்துவசுதேவனது மற்றோர் மனைவியாகிய ரோகிணிதேவியினது கருப்பத்தில் மாயோன் வைக்கவே தேவகியினது கருப்பங்குலைந்ததென்று கம்ஸன் சந்தோஷமடைவதற்குள்ளாக, அஷ்டம கர்ப்பத்தையடைதலும் மிகவும வருந்தி கம்ஸன் காவலாளர் முதல் ஏவலாளர்களையும் வெகு கண்டிப்பான உத்திரவுகளுடன் அமர்த்தி சிசுவைப் பிறந்தவக்ஷணமே தன்னிடம் கொண்டுவந்து கொடுக்கும்படி ஆக்யாபித்திருந்த காலத்தில், சிம்ஹமாதத்தில் கிருஷ்ண பக்ஷாஷ்டமியில் உரோகிணி நக்ஷத்திரத்தில் விருஷப லக்கினத்தில் சந்திரோதய சமயத்தில் காளமேக முதித்தாற் போல் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி சங்கு சக்கர கதாதாரியாயும், நீலமேகஸ்யாமள மூர்த்தியாயும் சதுர்ப்புஜங்களுடனேயும், கிரீட கேயூர குண்டலங்க ளுடனேயும் கௌஸ்துப மணிமார்புடனேயும், பீதாம்பரதரனாயும்தேவகிதேவருக்குப் பிரசன்னமாதலும் அத்தரிசன பலத்தால் அவரிருவரும் திவ்யஞானத்தை

யடைந்து பரந்தாமனைத் துதித்து பிரமதேவனும் பெறற்கரிய பேற்றை அடியேங்கள் பெற்றோம். இங்ஙனம் பெற எத்தவம் புரிந்தோமோ வென்று மறுபடியும் துதிசெய்து நிற்றலும் லக்ஷ்மீகாந்தன், "நீங்களிருவரு முன்னமேயே எம்மைக் குறித்து புரிந்த அரியதவத்துக்கு மெச்சி பிரசன்னமாய் வேண்டிய பேற்றை கேண்மினென்ற காலத்தில், நீங்கள் யோகமாயையினால் மூடப்பட்டு மோக்ஷத்தை விரும்பாமல் உங்கட்குப் புதல்வனாய் மூன்றுதரம் அவதரிக்க வேண்டுமென்று கோரியபடி வரத்தை யீந்து நீங்கள் பிரச்சினியாகவும், சுதபசாகவும் பிறந்தபோது உமதுவயிற்றில் நாம்பிரச்சினிக்ருப்பனென்றும், பின்பு நீங்கள் அதிதியாகவும், காஸ்யபபிரஜாபதியாகவு முதித்தகாலத்திலுமது உந்தியில்பிறந்து வாமனனாகவும் திரிவிக்கிரமனாகவும் ஆயினம். இப்போதுமூன்றும் அவதாரமுஞ்செய்தோம், இந்தஜன்மத்திலே நீங்கள் மோக்ஷசாம்பிராச்சியத்தையடைவீர்க" ளென்று நவின்று யோகமாயையினாலவர்களை மூடலும்தேவகியார் அச்சுதனைநோக்கி இத்திவ்யசின்னங்களோடுந் தேவரீரெழுந்தருளியிருந்தால் கம்ஸன்வதைப்பனேவென்று வருந்தவும் கேசவபிரான் வசுதேவரைக் கடைக்கண்பார்த்து "எம்மை கோகுலத்தில் நந்தகோபன் திருமாளிகையில் விடுத்து ஆங்கு பிறந்திருக்கும் யசோதையின் யோக மாயைப்பெண்ணை இவிடம் கொண்டுவந்து வைமின், உங்கள் விலங்குகள் தெறிக்கும் கதவுகள் ஹஜாரங்கள் திறக்கும், யமுனையும்வழிஒதுக்கியருளு" மென்றருளிதிருமாலும் சிசுவடிவ மெய்தினன். அக்காலத்து பகவத்மாயையினால் அல்பமழையுடன் குமறலும் கும்பிருட்டுமாயிற்று. காவலாளரும் ஏவலாளருடன் பேருறக்க முற்றனர். உடனே வசுதேவன், மாதவனாகிய சிசுவைத் தம்மிருகரங்களிலேற்கவும் விலங்குகள் தெறிபட்டு பூட்டுகள் கதவுகள் திறந்தும், ஆதிசேடன் குடையாக ஆகவும்; யமுனையாறு எதிர்கொண்டழைத்து மத்தியில் ஜலதாரையை ஒதுக்கி வழிவிடலும் நந்தகோபன் மாளிகைக்குச் சென்று ஆங்கு மாதவனைவிட்டு, அவனது மாய்கையினாலப்போதுதான் அவிடம் பிறந்திருந்த யோகமாயை சிசுவை ஒருவருமறியாமலே எடுத்துக் கொண்டுவந்து தன் முன்னிருப்பிட சிறைச்சாலையில் வைத்தலும் கால்களில் விலங்கு மாட்டிக்கொண்டது. கபாடங்கள் மூடிக்கொள்ளவும் பெண்ணுருவாக வந்த மாயை அப்போதுதான் பிறந்தாற் போல வாய் விட்டழுதது. காவலாளர்களுடனே ஓட்டமாயோடிவந்து பார்த்துக் கம்ஸராஜனிடம் அதிவேகமாயோடி சமாசாரத்தை இயம்பலும் வசுதேவன் வழக்கம்போல் கொண்டுவருவானென்று சற்றுந்தாங்காமல் தானே கத்தியுடன் நேரில்வரவும் தேவகியார் அம்மாயக்குழந்

லதயை மார்போடணைத்துக்கொண்டு ஆணயிருந்தா லல்லவோ யுன்னைக் கொல்லக்கூடும்; இப்பேதையா லென்னகு மென்று தான் பெற்ற குழந்தையைப்போல் நடித்து அதனைக் கொல்லா திருக்கவேண்டினள்; அதற்குக் கம்ஸன் ஆண்பெண் என்று பேதமறையவில்லை, அஷ்டமகர்ப்ப மென்று சொல்லியிருக்கிற படியால் சிசுவைக்கொண்டு வாவென்று அச்சிசுவினது இருகால் களையும் பற்றி உருவி வைத்திருக்கும் வாளுக் கிரையாகும்படி சிசுவைமேலேவீசி மந்திரவாளைநேராய்ப் பிடித்தலும் மேலெரிந்த அக்குழவி கீழே விழாமல் ஆகாயத்திலிருந்து கொண்டே "உன்னைக்கொல்பவன் நந்தகோகுலத்தி லிருக்கிறான், என்னை ஏன் நீ கொல்லவேண்டு" மென்று சொல்லிப் பறந்தோடிப்போயிற்று. தெய்வச்செயலெப்படியோ யிருக்கிறது. அதுதெரியாமல்உங்கள் குழந்தைகளைக் கொன்று உங்களையும் வருத்தினதற்கு என்னை மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு அவ்விருவரையும் சிறைச்சாலையினின்றும் விலங்கைத் தெறித்து விடுத்தனன். அப்போது நடந்த விருத்தாந்தங்களை மந்திரிகளுடன் யோசிக்கும் போது இவ்வுலகில் பிறந்திருக்கும் குழவிகளை யெல்லாம் கொல்விக்கும்படி பூதனை முதலியோரை ஏவியும் மற்றும் பல உபாயங்களைச் செய்தும் பயன்படாமல் கடைசியில் கம்ஸன் வதைக்கப் பட்டதையும், கோபஸ்திரீகளுடன் யமுனை தீரத்தில் பலவித கேளீலீலாவிநோதங்கள் செய்ததையும் பிறவற்றையும் பாகவதத் தில் விரிவாய்க் கூறியிருக்கிறது. அத்திரு விளையாடல் களையும் அவரது மற்றஅவஸரங்களையும இம்மதுரா, கோகுலம், பிர்ந்தா வனம், கோவர்த்தனம் முதலியவைகளிலும், கோயில்களிலும் மற்றவிடங்களிலும் சித்திரங்கள், படங்கள், சின்னங்கள் மூலமா யும் நன்கு தரிசிக்கலாம். இதன் ஜனத்தொகை அறுபதினாயி ரம். தொலைவியாபாரம் கம்மி, உள்நாட்டு வியாபாரமே மிகுதி. சென்ற பஞ்சங்களில் இந்நகர் அதிகமாய் வருந்திற்று. பாக வதத்தில் சொல்லப்பட்ட கோபஸ்திரீகளினழகுக்கு ஏறக்கு றைய சமமானவர்களாயிப் போதுமிருக்கிறார்கள். சுருக்கமாய், பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிற ஒவ்வொரு அம்சத்தின் சின்னத்தையுமிங்கு கவனித்தால் பார்க்கலாம்.





## 11. கோகுலம்.

கோகுலம்—இவ்வரியஸ்தலம் மதுராவிலிருந்து தென்கிழக் காக (இவிடம் யமுனையாறு தென்கிழக்குத் திசையாய் ஓடுகி-

நது) யமுனாதீரத்தில் மஹாவன்பட்டணத்துக்கு ஒருமைல் தூரத்தில் ஒரு கிராமமாயிருக்கிறது. இது பலராமர் திருவவதாரஞ் செய்த ஸ்தலமாயும், ஸ்ரீகிருஷ்ணபகவானும் வளர்ந்த ஸ்தலமாயுமிருக்கிறது. இதற்குத் திருவாய்ப்பாடியென்று பெரியாழ்வார் முதலானோரருளிச்செய்த நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் பெயரீந்து பாடப்பெற்றிருக்கிறது. இதிலிப்போதும் விளங்கிவரா நின்ற நந்தகோபனது திருமாளிகையில் ஸ்ரீகிருஷ்ணபகவான் இப்போது பிறந்த குழந்தைபோலவே தங்கத்தொட்டிலில வை அரண்மனையின் பிரதான ஹாலில் ஆடிக் கொண்டிருக்கிறதையும், எசோதை தன் திருமகனுக்கு அன்புடன் வெண்ணெயைக் கடைந்தெடுத்துக் கொடுப்பதையும், கோபஸ்திரீகள் ஸ்ரீகிருஷ்ணனுடைய வேணு பில்லாங்குழலை ஒளித்து வைத்து விளையாடலுமானவுமிவைபோலும் மற்றும் முக்கியமான சில திருவிளையாடல்களும் ஆங்கமைக்கப் பெற்றிருக்கிறதைப் பார்த்துக்களிக்காத கணகளுமெண்ணே! தவிரவும் தங்கள் சிறு குழந்தைகளின் தேகசம்ரக்ஷணைக்காகவும், சௌக்கியத்துக்காகவும் தீர்க்காயுளுக்காகவும், ஸ்ரீகிருஷ்னபகவானிவிடம வளர்ந்து விருத்தியடைந்தது போலவே தம் குழந்தைகளுமாகுவர் என்னும கருத்தால் இவிடத்துக்கு யாத்திரைப் பிரபலமாய் செய்கிறார்கள். பம்பாய் குஜராத்தி, முதலிய தேசப்பிரபுக்களுக்குப் பிறக்குப் தங்கள் ஜியேஷ்ட ஸ்ரீமந்த புத்திரர்களுடன் இக்கோகுல யாத்திரைக்கு வரத்தவறமாட்டார்கள்.





## 12. பிருந்தாவனம்.

பிர்ந்தாவனம்:—இம்மஹா க்ஷேத்திரம் மதுராவுக்கு ஒன்பதுமைல் வடக்கே யமுனா நதியாலாக்கப்பட்ட ஒருத்வீபகல்ப (மூன்று பக்கங்கள் நீரால் சூழப்பெற்றபூமி) மாயிருக்கிறது. கம்ஸனால் வருத்தப்பட்ட யாதவர்களெல்லாம் கிருஷ்ணாவதாரமானவுடன் இவிடத்துக்குக்குடியேறினர்கள். பதினாயிரம் கோ

பஸ்திரீகளுடனும் யாதவஸ்திரீகளுடனும் கண்ணன் களித்து யமுனாதீரத்தில் அநேக திருவிளையாட்டுகள் செய்தவிடம். இவிடம் யமுனையின் கருநிறமான பளிங்குபோன்ற சுத்த தீர்த்தத்தின அழகையும் முற்றிலும் புன்னைமரங்களடர்ந்த சுத்தவெள்ளி போன்ற மணல்வெளிகளான யமுனா தீரத்தின் முன்னழகு பின்னழகையும் பார்க்கப்பதினாயிரங்கண்களும் போதுமோ! மதுராவிலும கோகுலத்திலும் ஸ்ரீகிருஷ்ணன் விளைவறியாத பாலகனாயிருந்தார். இவிடததிலோ பகவானின் பூர்ண யௌவனகாலமும மிகவும் மனோகரமாயும் ஆனந்தகரமாயும் களித்துப்பல லீலைகளைச் செய்து பக்தர்களைக் காப்பாற்றியும, சந்தோஷப்படுத்தியும், பக்தாகளுக்காகத் தம திருமேனியை யுழைத்துமிருக்கிறபடியால இப்புவியின மற்ற விஷ்ணு க்ஷேத்தரஙகளினும் விசேஷமுடையது. ஸ்ரீ கிருஷ்ணபரமாதமாவுக்கு இந்த பிர்ந்தாவனம சாக்ஷாத் வைகுண்டததைப் பாரக்கிலும அதிக ப்ரிய முள்ளது; கோடீமபரவியாகிய மகமமதுகஜினி முதலியவர்களால மற்ற காசிமுதலாய ஸதலஙகளிற போல வே இவிடமுள்ள பிரசித்த மேகாயில குளஙகளும நிலமட்டஞ்செயயப்பட்ட பிறகு சமீபகாலஙகளில பம்பாய் குஜராததி தேசபிரபுக்களால லெட்சக் கணக்காய்ப பொருள் செலவழித்து பஞ்ச ப்ராகாரத்துடன் கூடிய கிருஷ்ண பரமாதமாவின கோயிலும், மகாபரிசுத்த தீர்த்த விசேஷமாகிய மானஸ கஙகையெனற அறபுதமான ஸரோவரமும் கட்டப்பட்டிருக்கின்றன. பரான்ன போஜனம செய்யாத வடதேயத்து ஆசாரசீலர்களான பெரியவாளும்சசநநிதியில மட்டும் பிரசாதம் ஸ்வீகரிததுக் கொளவார். மாதவன் நிவேதனத்தையுண்போர நிததியராய் அவனையடைவனென்று இருக்கவேதம தவிதீயாஷ்டகம், தவதீயாததியாயம், சதுர்விமசோததியாயததிலும, யஜுர்வேதசாகை தவிதீயாஷ்டகம, சதுர்ததிபரு தஸம் சஷ்டியோ வநுவாகததிலும, 'பகவத் பிரசாததததைப புசிக்க பஞ்சாகுதிகள் தேவையில்லையென்று அதர்வணவேதம், பரத்வாஜ, சாணடிலய ஸ்மிருதிகளும், பிர்மமாண்டம், ஸ்ரீபாகவதம, ஸமிருதிசமஹிதை, பௌஷிகம, ஹரிபக்திசுதோதயம் பிரமமேஸ்வரசம்ஹிதை, நாரதீயத்தில் விஷ்ணு தத்வம், ஆரிதஸ்மிருதி, பரத்வாஜ, சாத்வித, வசிஷட, மகாசமஹிதைகளும், ஸ்ரீமந்நாராயணன பிரசாதத்தை ஏறறதினம் சுத்த உபவாசதினமாகுமென்றும, தேவபிதிர் காரியங்கள மஹாவிஷ்ணு சந்நிதானத்தில் செயின விசேஷ பலனடைவர்களென்றும பத்மபுராணததிலும் ஆரிதஸ்மிருதியிலும் உறுதிகூறி மொழியப்பட்டிருக்கிறது.



## 13. கோவர்த்தனகிரி.

கோவர்த்தனகிரி:—மதுராவிலிருந்து வடமேற்குத் திசையில் ஒன்பதுமைலிலுள்ள கோவர்த்தனமென்னும் இம்மலை ஸ்ரீகிருஷ்ணனால் யாதவர்களுக்குக் குடையாகப் பிடித்துக் காப்பாற்றப் பட்டது. கோபாலரனைவருங்கூடி இந்திரயாகம் செய்யப் பிரயத்தனப் படவும் த்வாரகாபுரிவாஸன் அந்த யாதவர்களை நோக்கி இந்திரனுக்குச் செய்வதை இம்மலைக்குச் சமர்ப்பியுங்க ளென்றோதலும் அவர்களதற்குடன்பட்டு திவ்யான்னஞ் சமைத்துப் படைத்து இம்மலையை ஆராதித்து வணங்கலும் தேவேந்திரன் அதிகோபங்கொண்டு பிரளயகாலத்தைப்போல் சப்தமேகங்களையுமொன்று சேர்த்து பிரமாதமான இடிமின்னல் குமறல்களுடனே மழைபொழிய ஆரம்பிக்கவும் கோபாலர்கள் பசுமாடுகளுடன் சகித்தற்கரிய கொடுந்துன்பத்துக்குள்ளாய் ஆதிபகவனைத்துதி செய்யவும் கண்ணன் பக்தர்களுக்காக அம்மலையைத் தமமிரு திருக்கரங்களில் ஏழுநாள் வரையில் உயர்த்திப் பிடித்து அவர்களனைவரையும் காப்பாற்றினர். சுமார் பத்துமைல் சுற்றளவுள்ள இப்புண்ணிய மலையை கிரிப்ரதக்ஷணஞ்செய்து ஆராதித்தல் விசேஷபல னுடைத்து. பிரதக்ஷணஞ் செய்யும் மார்க்கமத்தியில் தங்குவதற்குவசதியான இடங்களிருக்கின்றன. இப்பிராந்தியங்களில் தென்தேச (தமிழ்நாட்டு) ஸ்ரீவைஷ்ணவர்களை விசேஷமரியாதை களுடனும் பாதகாணிக்கை களுடனும் வணங்குகிறார்கள். அதினும் கொஞ்சம் சங்கீத ஞானத்துடன் ஸம்ஸ்கிருத பாகவத பாரதங்களைப்படிக்கும் திறமைபெற்றிருக்கின் விசேஷபொருள் சம்பாதிக்கலாம்.

## 14. இந்த்ரப்ரஸ்தம்.

ஸ்ரீமதுராவிலிருந்து இவிடம் வருவதற்கு முன் அவிடமிரு ந்து தென்கிழக்காய் சுமார் 28 மைலில் யமுனாதீரத்திலுள்ள ஆக்ராடாஜ் மஹால் கட்டிடம் பார்க்கத் தகுந்தது. இதைச் சூழ்ந்திருக்கிற உத்தியான வனங்களினழகையும், கட்டிட அழகையும் பார்க்க ஆசை கொள்ளாதாரை இவ்வுலகப்பற்றை முற்றும் வெறுத்த ஞானிகளென்னலாம். முழுச்சந்திரகாந்தக் கற்களாலமைக்கப்பட்டிருக்கிற இக்கட்டிடம் இவ்வுலகின் முதன்மையானவைகளி லொன்றாக மதிக்கப்பட்டிருக்கிறது.

இந்திரப்ரஸ்தம் அல்லது டில்லி :— டில்லி யென்னும் நவீனப் பெயரமைந்துள்ள யமுனா நதியின் பச்சிமதீரத்தி லுள்ள இம்மாநகர் ஸ்ரீமதுராவிலிருந்து சற்று வடமேற்குத் திசையில 120 மைலிலிருக்கிறது. பூர்வம் பஞ்சபாண்டவர்கள ஹஸ்தினாபுரத்தைவிட்டு ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியைத் தியானித்து காண்டவப் பிரஸ்தமென்னும் வனத்தையடைந்தக்கால் பக்தவத்ஸலனாகிய அக்கண்ணபிரான் பாண்டவர்கள் வனத்தில் வசிக்கும்படியாக கடாக்ஷித்து தேவதச்சனாகிய விஸவகர்மாவை அழைத்து அவ்வனத்தை யழித்து நாடாக்கி கோட்டை கொத்தளங்களுடனும் பெருமைதங்கிய மதில்களுடனுமற்றும் இந்திரன் பட்டணத்துக்குச் சமானமான மற்றவைகளையு மமைக்கச்சொல்லி அமமாநகருக்கு இந்திரப்ரஸ்த மென்னும் பெயரையுமிட்டான். பிறகு துஷ்ட கொடுங்கோல் மகமதிய சக்கிரவர்த்திகளுக்குவெகுகாலம் இராஜதானியாயிருந்தது. இதன் ஜனத்தொகை இலக்ஷத்துப் பதினாயிரத்தில், எண்பத்தெண்ணாயிரம் பேர் முகம்மதியர். முன்சொன்ன ஆக்ராவில் தாஜ்மஹால் கட்டிடம் ஒன்றைத்தவிர மற்ற கோட்டை கொத்தளங்கள் முதலியவைகளில், இம்மாநகரதனினும் சிறந்து விஸ்தாரமுள்ளதாயிருக்கிறது, இந்நகரின் வியாபார வர்த்தகங்களையும் (கடைத்தெரு) மெயின் பஜார்களையும் ஒருவன் பார்த்தவினால அளகாபுரி பட்டணத்தின் சிறப்பை ஊகிக்கும் திறமுடையவனாவான். இபபட்டணத்தைச்சுற்றி இருபதுமைல சுற்றளவில் பாரதபாகவதங்களிற் பிரஸ்தாபிக்கப்படும் பல அறிகுறிகளையும் பார்க்கலாம். நாம் மதசம்மந்தமாயிப்போது பேசிவராவிட்டால் இப்பட்டணத்தின் சிறப்பைப்பற்றி வெகுவாய்ப் பேசவிட்டிருக்கிறது. இதேமாதிரி மதசம்மந்தமில்லாத மற்ற பட்டணங்களைக் குறித்தும் நாம ஒன்றாக எடுத்துச் சொல்வதைப் பத்தாகப்பாவித்துத் தெரிவராக—இதுகல்கத்தாவிலிருந்து 903 மை

லும், பம்பாயிலிருந்து 848 மைலும், ஆக்ராவிலிருந்து 140 மைலுமிருக்கிறது. இப்பட்டணத்திலுள்ள ப்ரிவிகௌன்ஸில் சேம்பரென்று சொல்லப்பட்ட டில்லிதர்பார்ஹால் இந்திர சபையேயன்றிவேறில்லை. லண்டன், அமெரிகா முதலிய விடங்களெல்லாவற்றிலும், அதாவது இவ்வுலகத்தில் இவ்வளவு அழகுபெற்ற கம்பீரமான கட்டிடம்வேறு கிடையாது. இதேமாதிரி இதற்குச் சமீபத்திலிருக்கும் 238 அடி உயரமுள்ள குடப்மைனர் என்னும் கோபுரியின் கட்டிடச் சிறப்புக்கு நிகர் இவ்வுலகத்தியில்லை. சிற்பத்தொழில் வல்லோர்கள் மேற்சொன்ன கட்டிடங்களைப் பார்க்காவிட்டால் நிரயத்தையடைவர். சிற்பசாஸ்திரத்தின் திறமையும் மஹிமையும் விளங்கும்படியான கட்டிடங்கள் இவ்வுலகத்தில் இதற்குச் சமானமானவைகள் கிடையாது. ஆதியில் விஸ்வகர்மாவினால் சிருஷ்டிக்கப் பட்டவைகள்தாம் இன்னும் கெடாமல் அப்படியே இருக்கின்றனவோ வென்று பிரமிக்கும்படியா யிருக்கிறது. சொல்லப்பட்டவைக ளெல்லாம் வர்ணனைக்கென் றெண்ணவேண்டாம், நேரில்போய் பார்த்து அளந்துரிகார்டு செய்யப்பட்ட சரியான தஸ்தாவேஜுகளினின்றுமெடுத்தெழுதப்பட்டது. பின்னும் நம்மிந்திய நகரங்களில் கைத்தொழிலாற் சிறந்தமுதன்மையான பட்டணமுமிதுவே. பம்பாய் கல்கத்தா இதற்குப் பிறகுதான். நாமெழுதமுன் வந்திருக்கும் மத சம்பந்தமான கிரந்தமிதன் அதிகவர்ணனைக் கிடங்கொடாததால் எம்மிறகைத் தாழ்த்தலாயினம்.





# 15. ஸ்ரீ குருக்ஷேத்திரம்.

குருக்ஷேத்திரம்:—என்பது திரிஷத்வதி, ஸ்ரஸ்வதிநதிகளுக் கிடையில் 70 மைல் நீளமும் 20 மைல் அகலமும், 1167 சதுர மைல் விஸ்தீரணமுமுள்ள புண்ணிய க்ஷேத்திரப் பிரதேசம். இந்தப் பூமியில்தான் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் மகாபாரதயுத்தம் நடந்தது. இந்த பூமியில் தான் பூர்வத்தில்நம் முன்னோர்களான ஆரியர்கள் ஹிமாசலத்துக்கு வடக்கிலுள்ள

மத்திய ஆசியாவிலிருந்து வந்து முதல் முதல் தங்கி நம்மேன்மைதங்கிய இந்துமதத்தைப் ப்ரசங்கித்து ஸ்தாபித்தது. இக்குருக்ஷேத்திரபிரதேச ராஜ்யத்துக்கு ஸ்தானேஸ்வர் என்னும் பட்டணம மத்திய ப்ரதேசமாயும் ராஜதானியாயு மிருந்தது; இப்போது அந்த ராஜ்யமொழிந்து பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்த ஒரு ஜில்லாவாயிருக்கிறது. இக்குரு க்ஷேத்திரத்துள் 382 புண்ணிய யாத்திரை ஸ்தலங்களிருக்கின்றன. அவைகளுக்குள் முக்கியமானவை ஸ்தானேஸ்வர், பெய்ஹ்வாவுக்கு இருபது மைல் தென்மேற்கி லுள்ளவைகள் அதிக முக்கியமானவை. ஸ்தானேஸ்வர் என்பது கல்கத்தாவிலிருந்து வடமேற்கில் 1000 மைல் தூரத்திலும டில்லியிலிருந்து வடக்காக 111 மைலும் அம்பல்லா கண்டோன் மெண்டிலிருந்து தெற்காக 26மைலும் டில்லி-அம்பல்லா-கால்கா இருப்புப்பாதையில் ஒருரெயில் ஸ்டேஷனுமா யிருக்கிறது, மேலும் இக்குரு க்ஷேத்திரமானது யமுனு தீரத்துக்கடுத்த பச்சிமத்தி லிருக்கிறது. இக்குரு க்ஷேத்திர தீர்த்தம் ஸ்தானேஸ்வர் ரெயில் ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல் தூரத்தில், நீளத்தில் ஒருமைலும் அகலத்தில் கால்மைலுமுள்ள பரிசுத்த தீர்த்த விசேஷத்துடன் கூடிய ஒரு பெரிய தடாகமாயிருக்கிறது. இத்தடாக மஹாதீர்த்தத்தின் மூன்று தீரங்களிலும் உன்னதமான மூர்த்திகளோடுங் கூடிய தேவாலயங்களாலும், காட்ஸ் (படித்துறை ஸ்நாந கட்டங்கள்) களினாலும். ஜபதப மண்டபங்களினாலும்,சூழப்பெற்றுப் பிரகாசிக்க, தடாகத்தின் மத்தியில் (இக் கோயிலுக்குக் கரையினின்றும் போவதற்காக ஒரு விஸ்தாரமான கருங்கல் கட்டிடமார்க்க மமைக்கப்பட்டிருக்கிறது) முக்கியமான தேவாலயம் அநேக சிகரங்களோடும், ப்ராகாரம், அர்த்தமண்டப, கர்ப்பக் கிரகங்களோடுங் கூடி எண்ணிறந்த நக்ஷத்திரங்கள் மத்தியில் பிரகாசிக்கும் ஒருசந்திரனைப் போல் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. இக்குருக்ஷேத்திர மகிமையை நம் ஐந்து வேதங்களும சுருதிஸ்மிருதிகளும் க்ஷேத்திர புராணாதிகளும் வியந்து கூறுகின்றன. அவைகளில் இக்குரு க்ஷேத்திரத்தை சதுர்முகப்பிரம்மாவினால் தெரிந்தெடுக்கப்பட்ட புண்ணிய ஸ்தலமென்று பொருள்படும் "பிரம்ஹவரிதா" என்றும் சொல்லப் படுகிறது, இக்குருக்ஷேத்திர தீர்த்தத்துக்கு ஸ்தாணு தீர்த்தமென்றும் அதற்கு மத்தியிலுள்ள மூர்த்திக்கு ஸ்தானேஸ்வரரென்றும அவ்வூருக்கும் அதேபெயரும பொருந்தப்பட்டது. இத்தாணு தீர்த்தத்தில் தினந்தோறும் மத்தியானத்தில் ஸ்நாநம் செய்வது விசேடமாயினும் அயனம், அமாவாசை, பௌர்ணமி, மாதப்பிறப்பு சங்கிராந்தி, சந்திர, சூரிய கிரகணங்கள், அர்த்தோதய மஹோதய புண்ணியகாலங்களின்

பிரபாவத்தை எழுதி முடியாதாயினும் இருப்புப்பாதை போட்டபிறகு நேர்ந்த முதல் சூரியக்கிரகண புண்ணிய காலமாகிய 6-4-1894-ல் இக் குருக்ஷேத்திர தீர்த்த ஸ்நானத்துக்குக் கூடின ஜனசங்கியை சுமார் பத்துலக்ஷமென்று கணக்கிடப்பட்டிருக்கின்றது; இப்பெருங் கூட்டத்தைப் பார்த்துச் சமீபத்திலுள்ள அம்பல்லா கண்டோன்மெண்டும் திகிலடைந்து கலங்கிவிட்டதென்பதினால், இக்குருக்ஷேத்திர தீர்த்த மஹிமையை ஒருவாறு நீங்களே மனதாற்பாவிக்கக் கூடுமென்று நம்பப்படுகிறது.



## 16. ஹரித்வாரம்—மாயாபுரி.

ஹரித்வாரம் என்னும் மாயாபுரி:—ஸப்த புரியிலொன்றாகிய இதற்கு, இதுவரையில், கங்கையானவள் ஹிமயமலையின் பேரில் வந்தவள், இவிடத்தில் வந்து சமபூமியிலிறங்குகிறபடியால் கங்காத்வாரமெனனும் பெயருமமைந்தது. ஹரித்வாரம் அதாவது வைகுண்டத்துக்கு ஏறும் ஏணியாகிய இம்மாநகர் கங்கைக்கரையின்பேரில காசியிலிருந்து வடமேற்காய் சுமார் 550 மைலும் டில்லியிலிருந்து வடக்கில் 120 மைலும் குருக்ஷேத்திரத்திலிருந்து கிழக்கில் 100 மைலிலுமிருக்கிறது. கங்கோத்பத்தி, பதரி நாராயணம், ஸ்ரீகேதாரம், பிரம்ஹகபாலம் முதலான திவ்ய க்ஷேத்திரங்களுக்குப் போகிறவர்கள் இவிடத்தில் ரெயிலிறங்க வேண்டும்.

இதற்குப் பிறகு இமயமலையின் பேரிலுள்ள பாதையின் பேரில் நடந்து செல்லவேண்டும். ஹரித்வாரமென்றும், ஹரத்வாரமென்றும் வைஷ்ணவ, சைவர்கள் கங்கையின் வரலாற்றைப் பற்றிவாதாடுவர்; இதனுண்மையைக் குறித்துக்கங்காமான்மியத்தில் இயற்கனவே கூறப்பட்டிருக்கிறது. ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபமான இப்பட்டணத்தில் தர்மசாலைகள் ஜாகைக்கு சௌகரியமாய்ப்பல இருக்கின்றன. இவிடத்தில் கங்கைவடக்கினின்று தெற்குமுகமாய் ஓடுகிறாள். இக்ஷேத்திரத்தின் கண்ணு

ள்ள முக்கியமானகோயில்கள் சண்டிபஹார், மாயாதேவி-தேவாலயம், த்ரிமூர்த்திகளுக்குரிய த்ரிமதஸ் தர்களுக்கும் பொதுவான சர்வநாத்தேவாலயம். (ஸ்ரீஜகந்நாதம் போல்) முக்கியமான ஸ்நாநகட்டம் ஹரிசரணகாட், இந்த கட்டத்துக்குச் சமீபத்திலுள்ள கங்காத்வாரம் தேவாலயமும் அதன் ப்ராகாரத்தில் உள்ள ஸ்ரீவிஷ்ணுபாதமும் இக்ஷேத்திர தரிசனத்துக்கு முக்கியமானவை. இவிடத்தில் நடக்கும் வைசாகமேலா உற்சவம் மிகவும் பிரசித்தமானது; வெகு ஜனங்கள் கூடுவார்கள். நாட்டுக்கோட்டையார் தருமத்துடன் இதர தருமங்களுமிங்குண்டு, இவிடம் பெருமாள் பள்ளிகொண்டிருக்கிற மற்றோர் தேவஸ்தானமும் முக்கியமே.

காசிகாண்டத்தில்:—

பொன்னகரினுமுயர்மாயாத்துவாரமென்றும் பொருவிலரித்தவாரமென்று
துன்னுதடங்கரைக்கங்கைசுழித்திடைப்போதலிற்கங்காத்துவாரமென்றுந்
மின்னணமுப்பெயருடைத்தாய் வைகுந்தத்தினிதேறுமேணியாக
மன்னியமாயாபுரியிலினிதிருந்தானருந்தவத்துமறைவல்லோனே.

இதற்குத் தென்கிழக்கில் இரண்டு மைலிலுள்ள காங்காலென்னுமிடத்தில் கபிலமாமுனியும், சுகப்பிரம்மயோகீசுவரரும் முறையே யெழுந்தருளியிருக்கிற கபிலஸ்தான நீலதாரை என்னும் ஸ்தலங்களும் ராஜாதக்ஷப்பிரஜாபதியினது கோயிலும், யாகசாலையும் சதிகுண்டமும் இன்னும் அநேகதேவாலயங்களும் பரீக்ஷித்து ஸ்நாநகாட்டுமிருக்கின்றன. சதிகுண்டமென்பது:— லாங்தௌரராஜாவின் புத்திரியும் பரமசிவனது பாரியாளுமாகிய சதியென்பவளை அவ்வம்மையின் தகப்பனுன தக்ஷப்பிரஜாபதி ராஜா பிரஸித்தயாகஞ் செய்தகாலத்தில் அழைக்காத காரணத்தாலுங்கூட, பரமசிவனையும் நிந்தித்தபடியால் அச்சதிதேவி தீராமகத் மனக்கிலேசமுற்று உயிர்துறந்த இடம். இவ்வரித்துவாரத்தில் கங்கையெடுத்து வருவது பிரயாகையினும் சிரேஷ்டமுடையது.



# 17. ஸ்ரீமத் அயோத்தி.

அயோத்தி.—சரயூநதி தீரத்தில் காசியிலிருந்து சற்று வட மேற்குத்திசையாக 128 மைல் தூரத்திலும் பிரயாகையிலிருந்து நேர் வடக்காய் 98 மைலிலும் ஹரித்வாரத்திலிருந்து தென்கிழக்கில் 365 மைல் தூரத்திலுமிருக்கின்றது. இது சூரியவம்சத்தரசர்களுக்கு ராஜதானியாயும், ஸ்ரீ ராமராகிய மகாவிஷ்ணு பூர்ணாவதாரஞ் செய்த ஸ்தலமாயுமிருக்கிறது, இதுவுமொரு அழகிய பாரிபட்டணம். வண்டிகள் முதலியவைகளும் சடைத்தெருக்களுடன் நாட்டுக்கோட்டையார் அன்னதான சத்திரமும் அதில் இரண்டொரு திராவிடருமிருக்கிறார்கள் நகர் ஸ்டேஷனிலிருந்து இரண்டரை மைலிருக்கிறது; இங்கிருந்து நந்திக்கிராமம் இருபது மைலுள்ளது. நந்திக்கிராமம் என்னும் ஸ்தலம் ஸ்ரீ ராமர் வனவாசஞ் சென்றிருந்த காலத்தில் அவரதநுமதிப்படி பரதர் ஸ்ரீ ராமபாதுகையை சிம்மாசனத்தில் எழுந்தருளச்செய்து அரசாண்ட இடம். வேதத்திற் கூறுகிறபடி அயோத்தியே வைகுண்டமெனவும், அயோத்தியை வைகுண்டத்தினின்றும் சுவாயம்புவமநுவால் திரேதாயுகத்தில் கொண்டுவரப்பட்டு இப்பூமியில் பொருந்தாமல் மகாவிஷ்ணுவின் சக்கரத்தின்பேரிலே ஸ்தாபிக்கப்பட்டதெனவும், சரயுமாநதி தென்கரை முதல் தமசாதீரம் வரையில் அகன்று ஆதிபகவானது அவதாரமாகிய மச்சாகாரமாய் சாகேதம், சத்தி, விமலை என்னும் நாமங்களோடு கூடியதெனவும் அவந்தியைத் திருவடியாகவும், காஞ்சியை இடையாகவும், துவாரகையை உந்தியாகவும், மாயையை மருமமாகவும், மதுராவைக் கண்டமாகவும், ஸ்ரீ காசியை நாசியாகவு கொண்ட ஸ்ரீமந்நாராயணனுக்கு ஸ்ரீ அயோத்திமுகம் எனவும், அவ்வயோத்தியில் ஸ்ரீமகாவிஷ்ணுவாகிய ஸ்ரீராமர் ஜனித்த கர்ப்பஸ்தானம், அயோத்தியாபீடம், ரத்தின மண்டபம், கனகமண்டபம், தருமஸ்தானம், தேவஸ்தானம், ஹரிஸ்தானம், பிராட்டியார் பாக

சாலை பொக்ஷசாலை, அக்கினிகுண்டம், யாகவேதி, உத்தியான வனம், சித்தபீடம், விஷ்ணு ஹரிஸ்தானம், ரமணஸ்தானம், அகஸ்தியாச்சிரமம், பாராசராச்சிரமம், மகஸ்தானம், சுக்கிரீவ அங்கதாதிஸ்தானம், வசிஷ்டஸ்தானம் கணேசஸ்தானங்களோடு பல ஸ்தானவிசேஷங்களும் தந்ததாவன குண்டமுதல் ஹநுமத் குண்டம், கஜேந்திர குண்டம், சீதாகூபம், சுக்ரீவகுண்டம், விபீஷண குண்டம், வசிஷ்டை திலோசனை சங்கமம், சீதாகுண்டம், காஜாகுண்டம், வித்தியா குண்டம், கணேச தீர்த்தம், தசரத குண்டம் கோசலை குண்டம், சுமித்திராகுண்டம் யோகினி குண்டம், ஊர்வசி குண்டம், மகபரம், தர்பரம் பிரஹஸ்பதிகுண்டம், ருக்மணி குண்டம், க்ஷீரோதக தீர்த்தம், தனக்ஷய தீர்த்தம், வசிஷ்ட குண்டம், சக்ரதீர்த்தம், ப்ரம்ஹகுண்டம் ரணவிமோசன தீர்த்தம், பாபவிமோசன தீர்த்தம், வைதரணீ தீர்த்தம், கோஷார்க்கம், ரதிகுண்டம், கந்தருவ குண்டம், குசுமாயுதகுண்டம், மந்தரேஸ்வரதீர்த்தம், இந்திரதீர்த்தம், சோப்ரதாரகதீர்த்தம், துர்க்காகுண்டம், நாகர்குண்டம், நாராயண குண்டம், வால்மீகிதீர்த்தம் ஹரிகுண்டங்களோடு மைமப்பெற்ற பலதீர்த்தங்களும் இப்பூலோக வைகுண்டத்திலுள்ளதெனவும், சரயுமாநதி இக்ஷுவாகு மாசனது வேண்டுகோளின்படி வசிஷ்டபகவானது மானஸவாவியினின்றுங் கொண்டுவரப்பட்டதானும், அச்சரயுமாநதியும் ஸ்ரீரங்நாராயணரைப் பிரத்தியக்ஷத்தில் சதாகாலமும் சேவித்தவாறாகே யிருக்கும்படியான பாக்கியத்தைப் பெறலாமென்று இப்புவியிலுற்பவித்ததென்றும், அம்மாநதிக்குச்சரயு வசிஷ்டை, ராமகங்கை என நாமங்களுள்ளன எனவும் (மேலே சொல்லப்பட்ட விஷ்ணுபதிகங்கையே இச்சரயுநதி யென்றும் சொல்வர்) அதனுள் சஹஸ்ரதாரை ஸவர்க்கத் துவாரங்களோடு அநேகதீர்த்தவிசேஷங்களுள்ளனவென்றும் ஸ்ரீ அயோத்திமான்மியம் கூறுகின்றது. பின்னும் காசிகாண்டத்தில் :—

சரயுநதிப்புனல்படிந்துதென்புலத்தோர் கடன்கழித்துத் தழல்செய்வேள்வி
யருமறையோரினிதுவப்ப வழுதறமு மின்னடி சிலமையவூட்டிப்
பரிவினோடு மாகரிற் பஞ்சராத்திரியுறைந்துபவளஞ் சிந்தி
விரிகதிர்வெண்மணிகொழிக்கும் வீங்குபுனற் பிரயாகைதனி லமேவினானே

பின்னும் புண்ணியஞ்செய்தோர் சுவர்க்கம் புகுவாராகையால் அச்சுவர்க்கமே அயோத்தியாதல்பற்றி அதுவேபோகமுறைவிடமாயிற்றன்றோ. இம்மாநகரோடுவரிசையாய் மதுரா, மாயா, காசி, காஞ்சி அவந்திகா, துவாரகை, இவைகளை ஒப்பிடப்பட்டதேயன்றி தேவேந்திர ராஜதானியாகிய அளகாபுரியை ஒப்பிடப்படவில்லை. இக்கருத்தமைந்த :—

கோவை யிங்கரோடெண் குறிக்கலாதவத்
தேவர் தங்கரியைச் செப்புநின்றதென்
யாவையும் வழங்கிடத்தி கலியிங்கர்
ஆவணங்கண்ட பினளகைநோற்றதே.

பின்னும் முத்திநல்குந்திறன் அளகாபுரிக்கின்றுதலானுமத் துணை பெருமைதங்கிய அயோத்தியினது கடைத்தெருவீதிகளைக் கண்ணுற்றும் அம்மாநகரத்துச் செல்வத்தைக் கண்ணுற்றும் அழகை வெட்கப்பட்டதென்று கூறுவதுமொருபெரிதோ? சாக்ஷாத் ஸ்ரீ மந்நாராயணனே வைகுண்டத்துடனிழிந்திருக்குங் கால் இவ்வளவு பெருமைதங்கிய அயோத்திமா நகரை சூரிய குலத்தரசர்களாகிய இக்ஷ்வாகுமுதல் குக்ஷி, விகுக்ஷி, புரஞ்ஜயன், அநரண்ணியன், பாணன், பிருது, திரிசங்கு, ஹரிச்சந்திரன், ரோகிதாக்ஷன், குவலயாஸ்வன், யுவனாஸ்வன், மாந்தாதா, அம்பரீஷன், முசுகுந்தன், சுசந்தி, திருவசந்தி, பரதன், அசிதன், சகரன், அம்சுமான், திலீபன், பகீரதன், ரகு, மித்திரசகன், அஸ்மகன், கட்டுவாங்கன், சிபி, அஜன், தசரதன், முதலாய பல அரசர்கள் ஆண்டவிவரத்தையுமவர்களது திவ்யசரித்திரங் களையும் ஸ்ரீமத்ராமாயணம், மகாபாரதம், பாகவதம், விஷ்ணுபுராணம், அயோத்தியாமான்மியமிவற்றில் விரிவாய்க்காணலாம். இலங்கேசனாகிய இராவணன் சதுர்முகனையும், முக்கண்ணனையுங் குறித்து அரியதவம்புரிந்து மஹத் வரங்களைப் பெற்றுத்தேவர் களையும் திரிலோகங்களையுமழித்துவர, தேவர்கள் அவனோடு எதிர்க்க இயலாது காலம்நோக்கி அடங்கிக்கிடந்து, தசரதசக்கிரவர்த்தி, கலைக்கோட்டு மஹரிஷியை எழுந்தருளச்செய்து அஸ்வமேதயாகத்தைச்செய்த காலத்தில் ஹவிர்ப்பாகத்தை யுண்ண ஆங்குவந்த தேவர்களனைவரும் ஒன்றுகூடி ஸ்ரீமகாவிஷ்ணுவைத் திருவடிதாழ்ந்துத்தேவரீர் திருவவதாரஞ்செய்ய இதுவேதக்க இடம், பொருள், ஏவல்களுடையனவென்றுப் பிரார்த்தித்தலும் ஸ்ரீ மந்நாராயணனு மங்கீகரித்துத் தசரதனுக்குப் புதல்வனாய்த் திருவவதாரஞ் செய்து இராவணாதிகளைச் சம்ஹாரஞ்செய்து சீதாபிராட்டியாருடன் பன்னீராயிரம்வருடம் தர்மபரிபாலனம் சர்வவிபவங்களுடனும் அயோத்தியை அரசாண்டும் பிரத்தியக்ஷத்தில் எழுந்தருளியிருந்தும், இப்போதும் சூக்ஷ்மரூபமாய் யுகதர்மத்துக் கேற்றபடி எழுந்தருளி விளங்காநிற்கின்ற இத் திவ்ய க்ஷேத்திரத்தை ஒப்புள்ளது யாது! ஸ்ரீ அயோத்தியின் கீழவாசலில் ஆஞ்சநேயர் சந்நிதி மிகப்பிரபலமாயிருக்கிறது.









அச்சந்நிதியில் பல தேசத்தரசர்களும் ஸ்ரீ மத்ராமாயண பாராயணஞ் செய்விக்கின்றார்கள். இதற்குச்சாஸ்வத நிதி ஏற்படுத்தியிருக்கிறார்கள். மோக்ஷகாமிகளாகிய அநேகபெரியோரிடம் வசிக்கிறார்கள். சரயுநதிமத்தியினும் தீரத்திலுமுள்ள வனங்களில் ஆச்சிரமங்களை இயற்றிக்கொண்டு தவங்களைப் புரிந்துவரும் அநேக ரிஷிகளிவிடம் வஸிக்கின்றார்கள். அற்புதசித்திகளையுடைய சித்தர்களும் அரிய பெரியயோகாப்பியாசங்களைப் பெற்றயோகிகளும் ஸ்ரீ காசியிலிருப்பதைக்காட்டிலுமிவிடம் அதிகவசதியானபடியால் அதிகமாய்வசிக்கிறார்கள். இவிடத்துள்ளசில யோகிகளின் அற்புதசரித்திரங்களை யிங்கெடுத்தெழுத இடமின்மையால் அயோத்திக்கு நேரிற்போகும்போது அவிடத்தோரால் தெரிவிக்கப்படலாகும். யாத்திரைக்காரர்கள்சரயுமாநதியிற்படிந்து தீர்த்தசிரார்த்த முதலியவை செய்து ஜநகஸ்தானத்தையும் வாயுபுத்திரரையுஞ்சேவிப்பர். வாயுசுதரை உருத்திராவதாரம் என்ப பிரமனிடத்திலும், வாயுவினிடத்திலும், ஆதிசேடனிடத்திலும் முறையேஉதித்த வைகாரிகருத்திரன், தையஸருத்திரன், தாமஸருத்திரன் என்றும் வராகபுராணம் சாதுர்மாஸியமஹாத்மியம சதுர்த்தசோத்தியாயத்தில் கூறுகின்றது. இவ்வாஞ்சநேயர் சந்நிதியில் மேற்குறித்த சாதுக்களைப்போலவே அநேக (மனிதனுயரமிருக்கும்) வானரங்களும் ஸ்திரமாய்க்குடியேறி யாத்திரைக்காரரிடம் தின்பண்டங்கள் அன்னமுதலியவைகளைத்தின்று பெருத்துக் கொழுத்திருக்கின்றதைப் பார்க்க வெகு விநோதமாயிருக்கும். புதிதாய்ப்பார்க்கும் அந்தப்புர ஸதிரீகளும் குழந்தைகளும் பயப்படுவார்களாகையால் அவர்களை ஜாக்கிருதையா யச்சந்நிதியில் வழி நடத்திக்கொண்டு போகவேண்டும். ஸ்ரீ அயோத்தியில் கிரஹங்கள்தோறும் ஸ்ரீ ராமசந்திரன் விக்கிரஹரூபமா யெழுந்தருளிச் செய்யப்பட்டு (ஸ்ரீ காசியிலவிஸ்வேஸ்வரன் ஒவ்வொரு பெரியகிரகத்திலும்இலிங்கரூபமாய் பிரதிஷ்டைசெய்யப்பட்டு பூஜிக்கப்பட்டு வருவதைபபோல) ஆராதிக்கப்பட்டு வருகின்றார். சிலபுண்ணியாத்மாது

மணிகளில் சுவர்ணவிக்கிரஹங்கள் ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றன. அயோத்திமுழுவதும் சுவர்ணமயமென்று பொருள்பட முன்னாளில் இராமாயணபாராயணஞ்செய்த பக்தனொருவனுக்கு அச்சிரவணத்தையடைந்த வானரசிரேஷ்டர்கள் பட்டாபிஷேக காலத்தில் இராமாயண சாஸ்திரியனுக்குப் பரிசளித்த ஒரு சிலையைத்தன்னிருப்பிடத்தில்வந்து பார்க்கும்போதுஸ்வர்ணக் கட்டியாயிருந்ததை நேரில்பார்த்த சாது ஒருவர், அடியேன் அயோத்திக்குச் சென்றிருந்த காலத்தில் தெரிவித்தார். ஷை சாதுவுக்கு இப்போதுவயது 177-என்று சொல்லுகிறார்கள். திருவயோத்திக் கோயிலிலெழுந்தருளியிருக்கும் சீதாலக்ஷ்மண பரத சத்துருக்ன ஹநுமத்சமேத ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியை ஏகாதசி தினத்தில் தக்ஷிணையின்றி இனமாகச்சேவிக்கலாம். மற்றசாதாரண தினங்களில் தலைக்கு ஒருரூபாய்க் கொடுக்கவேண்டும். இந்த நிர்ப்பந்தம் ஸ்ரீ காசி விஸ்வேசருக் கின்று. சரயுநதிக்கரையில் அநேகஸ்நாநகட்டங்களும், கட்டிடங்களுமமையப்பெற்றிருக்கின்றன. நகரத்துக்குள்ளும் அநேக கட்டிடங்கள் யாத்திரைக்காரர் வசதியாய் வசிக்கக்கூடியவையாயிருக்கின்றன. சரயுநதியில் (ஆமைகள்) கூர்மங்கள் மிக ஜாஸ்தியாதலால் அவைகளாலுபத்திரவமில்லாவிட்டாலும் அவைகளையுங்கவனித்து ஸ்நாநஞ்செய்யவேண்டும் மேலெசொல்லப்பட்ட நந்திக்கிராமத்திற்குச் சமீபத்திலுள்ள மஹாரண்யத்தில் பூர்வம் ஸ்ரீ ராமர்வசித்த அரண்மனைகளும், மாளிகைகள், கோயில், குளங்கள், தெருக்கள் வீடுகள், நிதிநிக்ஷேபங்களும் தனியாய் அவைகளெல்லாம் இப்போது இடிந்து கிலமாய்க் கிடக்கின்றனவென்றும் சொல்லுகிறபடி காணப்படுகின்றது. இவிடமிருந்து இமயமலையை ஒருவாறுதரிசிக்கலாம். இங்கிருந்துஹிமாசலம் சுமார்முந்நூறுமைலிருக்கிறது. மகதீர்த்தங்களில் படிந்து தபசியற்றவும், குளிர், வெயில், மழைமுதலியவைகளைப் பொறுக்கும்படியாக நான்முகன் வடதேயத்தோரைச்சிருஷ்டித்துத் திராவிடரை அவைகளுக்கஞ்சும்படியாகச்சரீரதர்மங்களைக் கொடுத்திருப்பதும் யாருடையகுற்றமென்று யோசிக்கும்படியாய் வடதேசத்தோர்க்ஷேத்திராடனம் தீர்த்தாடனம் செய்யும்பக்தியை நோக்கின் வியக்கத்தக்கதாயிருக்கும்.

ஹரித்வாரத்திலிருந்து இவிடம் வரும் மார்க்கத்தில் ஹரித்வாரத்திலிருந்து 270 மைலிலுள்ள இலக்ஷ்மணபுரியென்னும் லக்நௌபார்க்கத் தகுந்த ஸ்தலம். இவிடமிருந்து தென்மேற்கில் சுமார் 30 மைலில் நைமியசாரண்ய க்ஷேத்திரமிருக்கிறது.






# 18. ஸ்ரீமத் பிரயாகை.

பிரயாகை:—அலஹபாத் என்று சொல்லப்பட்ட இப்பிரசித்தக்ஷேத்திரம் கங்கை, யமுனை, ஸரஸ்வதியென்னு மிம்மூன்று நதிகள் கூடும்படியான திரிவேணி சங்கமத்திலுள்ளது. இது காசியிலிருந்து சுமார் நூறுமைல் மேற்காகவும், அயோத்தியிலிருந்து 98 மைல் தெற்காகவு மிருக்கிறது. இம்மா நகரின், கோட்டையும், சைனியங்களும், லெப்டினெண்டு கவர்ண்மெண்டு கச்சேரிகள், ஹைகோர்ட் முதலியவைகளுடன், காசியைப் பார்க்கிலும் பெரிய பட்டணமா யிருக்கிறது. கங்கா, யமுனா சங்கமத்திலுள்ள இக்கோட்டைக்குள் முப்பதடி உயரமுள்ள பௌத்த விக்கிரகமொன்று சுமார் 2000 வருஷங்களுக்கு முன் பௌத்த அரசனாகிய அசோகாவினால் கட்டப் பட்டிருப்பதையும் மற்றவைகளும் பார்க்கத் தகுந்தவைகள். ஸ்டேஷனிலிருந்து சுமார் மூன்றரை மைல் தூரத்தில் நந்திராவிட தேசத்தாருள்ள தாராகஞ்சமிருக்கிறது. ஜாகை முதலானவைகளுக்குச் சௌகரியம். சமீபத்தில் நாட்டுக் கோட்டையார் அன்னதான சத்திர மிருக்கிறது. கடை கண்ணிகள் முதலியவை சமீபம்; ஸ்டேஷனில் பிரயாகைவாலரின் குமாஸ்தாக்களும் வண்டிகளும் தயாராயிருக்கும்.

மேற்குறித்த திரிவேணிசங்கமத்தில் கங்கை பச்சிமவாஹினியாயும், யமுனை பூர்வ வாகினியாயும், சரஸ்வதி அந்தர்வாஹினியாயும் ஓடிவந்து கூடுகிறது. வருஷம் 365 நாளும் இவிடம் விசேஷமுடையதானாலும் மாகமாதத்தில் மாகஸ்நானம் அதிக விசேஷமுடையது.

காசிகாண்டத்தில் :—

உடை திரைநீர்ப்பிரளயத்து மார்க்கண்டன் முதன்முனிவருறைவதாய
வடதருவைப்புனிற்று மதியலேபுரட்டுங் கங்கையொடு வணைந்த வேணிச்

கடவுளை வெண்மதி கொழிக்கும் பாலாழி துறந்து செழுங்கமலையொடு
மடியர் துயரகற்றுவ லென்றினிதடைந்த மாதவனையாங்கு கண்டான்.

பெறலரிய தருமத்தின் பேறெலாம் விரிதெண்ணீர் பிரயாகையாற்று
வறலிலொரு நுண்மணற்கு நிகர் தூங்கா கொடும்பாவ மனைத்துமன்ன
துறுபெயர் கேட்பினடுங்குமாடு நருமாண்டு வதிந்துயிர் விட்டோரும்
குறைவில் பரகதியடைந்து வீற்றிருப்பரெனமறைகள் கூறக்கேட்டான்.

செங்கதிர் செல்வனுமாதி கேசவனுங் கண்களாய்த் தெய்வ நன்னீர்ப்
பொங்குதிரைமணி கொழிக்கும்வளையசிகைகளாய்ப்புனலிற்றோய்ந்தோர்
வெங்கொடும் பாதகந்துலைந்து வீடுதருந்திருவேணி வேணியாய
கங்கைவிரி புனலாடைக்காசியணங்கினை நோக்கிக்களித்தானன்றே.

மதிதவழுமுயர்பொலங் கோட்டிமைய நெடுவரை முதலவரைகள்யாவுந்
தழைமலர்ப்பைந்தரு முதலதருக்களுமெண்ணறம்புவனந்தனிலுள்ளோரும்
விதிமுறையினுங்கடைந்து புகழ்மாகத்திங்கடனில் விளங்கும்வெய்யோன்
கதிர்மணித்திண்டேர் கடவுட்புலரியின் வாய்ப்புனலாடத் தண்ணிற் கண்
டான்.

யமுனாநதியில் ஸ்ரீ மகாவிஷ்ணுவாகிய கண்ணபிரான் முற்றிலுங் களித்து நீராடினமையால் கங்கைக்கொருவாறொப்பான இந்நதியுங் கூடுதல்பற்றி பிரயாகை திரிவேணி சங்கமத்தைத் தீர்த்தராஜா என்க பிரயாகைமான்மியங் கேட்ட அர்ச்சுனன் மார்க்கண்டேயரிஷியை நோக்கி இந்த க்ஷேத்திரத்தைக் குறித்து புராணப் பிரமாணமன்றி, வேறு பிரமாணமுளதோவென வினவியபோது, இந்த திரிவேணி சங்கமத்தில் நீராடுவோர் முத்தி பெறுவரென்ற சுருதி சம்மதத்தையும் மேற்செய்யுளாற் காண்க. பிரயாகாமுண்டன மென்றபடி இத்திருவேணி சங்கமத்தில்ஸ்திரீகள் புருஷனுடையதொடையில் சந்தோஷத்துடன் பர்த்தாவின் மேன்மையை நாடி முண்டனஞ் செய்துக்கொள்ளலும், அல்லது முண்டனத்துக்குப் பதிலாக சிகையின் நுனியையாவது கத்தரித்து வேணுதானஞ்செய்வது மகாவிசேஷ பலனைக்கொடுக்கின்றது ; பின்னும் அப்பிரயாகை மான்மியத்தில்: — திரிவேணி சங்கமத்தில் ஜலத்திலிறங்கியேனும், தேகத்தைக்கண்டங் கண்டமாய்ச்சேதித்து பறவைகட்கு இரையாக்கியேனும் பிராணனையிழக்கவேண்டுமென பிரயாகை மான்மியம் பஞ்சமோத்தியாயங் கூறுகின்றது. இந்த வழக்கத்தைமட்டும் நம் காருண்ய கவர்ண்மெண்டார் சஹகமனம்-புருஷனோடுமனைவியுமுயிர் விடுதலைப்போல் தடுத்துவிட்டார்கள் மாகமாதத்தில் இத்திருவேணிசங்கமத்தில் ஸ்நானத்துக்கு வரும்பலதேச அரசர்கள் முதல் வாயில்லாமிருகங்கள், அறிவில்லா பக்ஷிஜாதிகளும் ஸ்ரீ காசி, அயோத்தியிலுள்ள க்ஷேத்திரவாசிகளும் நிறைந்துள்ள ஸ்நாந கட்டத்தையும் படைத்த இப்பிரயாகையைப் பார்க்க என்ன பாக்கியஞ் செய்ய

வேண்டுமோவென்று மார்க்கண்டேய பௌராணிகரு மெடுத்து ரைக்க அசக்தராயினர். யாத்திரைகளை யெல்லாம் முடித்துக் கொண்டு கடைசியில்பிரயாகையில் வந்துதீர்த்த மெடுக்கும்போது மூன்று புடைவைகள் அல்லது வஸ்திரங்களோடும் உடுக்கப் பெற்று பூஜாத்திரவியங்களோடும் சென்று, கங்காயமுனை சரஸ்வதிகளை மந்திரோக்தமாய்ப் பூஜிக்து கங்கையையெடுத்து பத்திரப்படுத்தினபிறகு அவ் வஸ்திரங்களைப் பிராமண ஸ்திரீகளுக்கோ புருஷாளுக்கோ தத்தஞ் செய்துவிட்டு வேதியரைக் கூட வைத்துக்கொண்டு அறுசுவை கலந்தஇனிதடிசில் உண்ணுவதும் முறைமையாகும். பிரயாகைக்குச் சமீபத்தில் பரத்வாஜாச் சிரமமும், சித்திரகூட வான்மீகியாச் சிரமங்களு மிருக்கின்றன. ஸ்ரீ ராமர் வனவாஸஞ் செய்தபோது அவ்வாச் சிரமத்தில் தங்கியிருந்து சித்திரகூடம் எழுந்தருளினதும், பிறகு பரதனும் ரகுநந்தனனைத் தரிசனம் செய்யவந்தபோது அதே ஆச்சிரமத்தில் தங்கிச் சென்றதும் ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.



## 19. ஸ்ரீமத்கயா.

ஸ்ரீ காசியிலிருந்து சற்றுதென்கிழக்காய் 130மைலும்,பிரயாகையிலிருந்து அந்த திசையில 220 மைலிலுமுள்ள இந்த க்ஷேத்திரம் மற்ற க்ஷேத்திரங்களைப் போன்றதன்று. இக்ஷேத்திரத்தைப்பற்றி வேதத்தில் விரிவாயெடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. ஒருவன் பலபுத்திரர்களைப் பெறவேண்டுமென்பது யாதுகாரணத்தாலெனின் அப்புத்திரர்களிலெவரேனு மெக்காரணத்தாலேனும் இந்த கயா க்ஷேத்திரத்துக்குச் சென்றுபிண்ட ப்ரதானம் செய்வான்என்னும்கருத்தால் தருமசாஸ்திரங்களுமவ்வாறுகூறுகின்றன.பின்னும்கயாசிரார்த்தம் செய்யாத புத்திரனும் புத்திரனலலன், அவனைப்பெற்றோரும் புத்திரனைப்பெற்றோரல்லாமல், மிருகத்தைப்பெற்றவராவர். இது ரெயில்வேஸ்டேஷனிலிருநது மூன்றரை மைலிருக்கிறது. வண்டிகளுங் கூலிகளுமன்றி கயாவாளிகளின் குமாஸ்தாக்களும் ஒவ்வொரு வண்டித்தொடருக்கும் வந்து யாத்திரைவாஸிகளை யழைத்துப் போகக்காத்துக்கொண்டிருப்பர்.

கயாவாளிகளி லநேகர் பிரக்யாதிபெற்ற வேதசாஸ்திர பாரங்கத பண்டிதர்களாயும் வி. ஐ. இ., முதலிய பட்டங்கள் பெற்றவராயும் லக்ஷப்பிரபுக்களாயுமிருக்கிறார்கள்; கயாவாலர்கள் மட்டும் பிராமணரேயன்றி அவரது மனைவிகள் சூத்திர ஸ்திரீகள் போல் வைராகையா லவர் சமையல்செய்ததை உண்ணார்; போகத்துக்கல்லது மற்றக்காலத்தி லவர்களைத்தொடார்; கயாவாலர்களுக்கு இதர பிராமணர் சமையல்செய்துவைக்கிறதைத் தாங்களே யெடுத்துண்ட மிச்சத்தைத் தங்கள் ஸ்திரீகளுக்குப்போட அவருந்திய பிறகு பாத்திரங்களைச் சுத்திசெய்துவைப்பர். (மலையாளத்தில் பிராமணர் வைத்திருக்கும் அச்சிமாரைப்போல) காசியில் பட்டுப்பீதாம்பரங்கள், ருத்திராக்ஷங்கள், சாளக்கிராமங்கள், பாணலிங்கங்கள், பலவித பாத்திரங்கள், காசிபடங்கள் முதலியவைகளைப்போல இக்கயாவில் செம்பினாலும் கருப்புக்கல்லினாலும் தேவையானால் பொன்னிலும் வெள்ளியிலும் ஸ்ரீ விஷ்ணு பாதங்களும், தசாவதாரம் முதலிய விக்கிரகங்கள், நகாசு போட்டப் பலவித பித்தளை, செப்புப் பாத்திரங்களும் கற்பாத்திரங்களும் நார்மடி முதலியவைகளும் உயர்ந்த தினுசில் சரசவிலைக்குக் கிடைக்கும். இதற்கு ஏழுமைலிலுள்ள பௌத்த கயாவுமபார்க்கத் தகுந்தது. காசி, பிரயாகையிலுள்ள நம் திராவிடதேசத்தார் இக்கயாவுக்கு வருமுன்னரே நம்மிடத்தில் இக்கயாவாலர்களுக்குச் சீட்டுக்கொடாமல் விடார். ஏனெனில் அவருக்கிதில் தரகுண்டு. முன்னாளில் ஒருவனுடைய ஆஸ்தியில் பாதிவிலையிலிருந்த கயாசிரார்த்தமானது இப்போது ஐந்து ரூபாய் விலை மதிப்பிலிருக்கிறது; ஐந்து ரூபாய் முதல் அவரவர்கள் சக்திக்கியன்ற வரையில் செய்யலாம். கயாசிரார்த்தத்தில் விஷ்ணுபாதமொன்றில் மட்டும் பிண்டம் போடுவது எல்லோரும் செய்யத்தகுந்தது. இதைத்தவிர பஞ்சகயை, அஷ்டகயை, மகாகயை என மூன்றுவகையுண்டு. அஷ்டகயை கிரௌஞ்சபதம், 2-அகத்தியபதம், 3 சூரியபதம், 4 கார்க்கேயபதம், 5 பஞ்சாகனி பதம், 6 கசியபபதம், 7 உருத்திரபதம், 8 பிரமபதமிவைகளில் பிதிரர்களுக்கும் உயிரோடிருக்கும் ஒருவன் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் ஸ்ரீ ஜனார்த்தனன் கரத்திலும் இந்த க்ஷேத்திரத்தில் பிண்டப் பிரதானஞ்செய்து சற்கதியடையவும் ஸ்ரீமத் கயா மான்மியம் கூறுகிற்கின்றது.

கோயிலுக்குச்சிறிது தூரத்தில் வடமகாவிருக்ஷமும், அதைச்சுற்றி விஸ்தாரமாய் வரும் யாத்திரைக்காரர்கள் சிரார்த்தம் சமையல் முதலியவைகளைச்செய்வதற்காக விசாலமானகட்டிடங்களும் சௌகரியமாயமைக்கப்பெற்றிருக்கின்றது. இக்ஷேத்தி

ரத்தில் வபனம் க்ஷேத்திரோபவாஸமிரண்டும் அவஸியமில்லை, விஷ்ணுபாதம் முதலியவைகளில் சாதிபேதமின்றி எல்லாச்சாதியாரும் எப்போதும் பிண்டம் போட்டுக்கொண்டிருப்பார்களாதலின் திராவிடதேயத்தாரில் ஆசாரமிகுந்திருப்பவர்கள் சிலர் தனுட்டியராயுமிருந்தால் இவர்கள் பிண்டம் போடுகிற சிறிது நிமிஷங்களுக்கு மற்றவரைவரவிடாமல் வெகு பிரயத்தனத்துடன் தடுத்து விஷ்ணுபாதத்தில் பிண்டம் போடுகிறார்கள்; அது அனுவஸியம். இதுதேவபூமியாகையாலும்விஷ்ணு சந்நிதானமாகையாலும் க்ஷேத்ரபுராணமே இதற்கு இடங்கொடுத்தலானும் அப்படிச் செய்வதேஸ்மிருதி சம்மதம். சூத்திரர் ஆமசிராத்தத்தைத்தவிர இரணியசிராத்தமும் அன்னசிராத்தமும் செய்யக்கூடாதென்றவிதியை இந்தக்கயாவில் கண்டிப்பாய் அநுசரித்து வருகிறார்கள். எவ்வளவு ஸ்ரீமானுயினும் சூத்திரனுயிருப்பவன் ஆமரூபமாயல்லது, பிறிதால் செய்வதற்கிடங்கொடார். அன்னசிராத்தத்தை விஷ்ணுபாதத்திலும் கோயிலிலும் நதிதீரத்திலும் பருவத சிகரத்திலுஞ்செய்யலாம். தம்மிருப்பிடத்தில் தங்குலத்தாரைவரித்து அன்னசிராத்தஞ்செய்யும் சில சங்கரஜாதியார்களான சூத்திரர்களின் ஜம்பம் இங்குபலியாது. அவன் என்ன பிரபுவாயிருந்தாலும் கயாவாலரையன்றி மற்றவர்களைக்கொண்டு கயா எல்லைக்குள் வேறு விதமாய் நடத்தமுடியாது. இவர்கள் ஆதியில் சதுர்முகனுலுமிப்போது நம் கவாண்மெண்டாராலும் அதிகாரம் பெற்றிருக்கின்றனர். அதமபக்ஷம் ஐந்து ரூபாய்க்கொடுத்தாலும் கயாவாலர், தங்கஇடம்கொடுத்து சிராத்தம் செய்து வைத்து அனுப்புவர். பிண்டப்ரதானம் செய்தவுடனே அக்ஷயவடத்தின்கீழ் கயாவாலருட்கார்ந்து சிராத்தம் செய்தோனுக்குச் சந்தனம் பூசி பூமாலைபோட்டு "பிரயாகைமுண்டம், காசிதண்டம், கயாபிண்ட" மென்பவைகளைச்சொல்லி ஒரு பூமாலையால் முதுகில் அடித்துத் தட்டிக்கொடுத்து "உன்பிதிரர்களெல்லாம் சுவர்க்கஞ்சார்ந்தனர்" என்றுச்சாகப்படுத்தி சுபலம் முதலியதானங்கள் கேட்பார். சுபலத்துக்கு இருபத்தைந்து ரூபாயாவதும், மற்றவைகளுக்குப் பத்துரூபாயாவதும் கொடுக்கவேண்டும். இதுமிகவும் குறைந்தரேட்டு. மேலே சொன்ன ஐந்து ரூபாயில் சிராத்தஞ் செய்கிறவர்களுக்கு மற்றவை யெல்லாஞ் செய்து அக்ஷயவடத்தின் கீழ் ஒன்றுஞ் செய்யார். கயாவாலர்களில் பெரும்பான்மையோர் உற்சாகத்துக்காக பக்ஷிகளைவளர்த்து வருகிறார்கள். இந்தக் கயா மிகுந்த ஜன நெருக்கமுள்ளவும் விசேஷவர்த்தகமுள்ளவுமோர் பெரிய பட்டணம். இதிலிருக்கும் பல்குனிநதியில் பெரும்பாலும் ஜலம் இருப்பதேயில்லை. ஆற்றில

வெட்டப்பட்டிருக்கும் ஓடுகோல் களிற்றுன் எல்லாச்சாதியாரும் ஸ்நாநம் பண்ணவேண்டும். சமீபத்தில் 50, 60-கஜதூரத்தில் பிரேதங்கள் ஆற்றின் மத்தியிலே ஸ்நானஞ் செய்வோருக்குப்பக்கத்திலே தகனமாய்க்கொண்டிருக்கும்:—ஆதலின் ஜலகஷ்டம் மிகுதியே. காவேரிதீரவாசிகளுக்கு இவ்விஷயத்தைக்காண அருவருப்பாயிருக்கும். இதற்கு ஒருதகுந்த ஏற்பாடு கயாமுன்ஸிபாலிடியார்செய்தாலல்லது தீராது. இவிடம் ஒன்றிரண்டுதர்மான்ன சத்திரங்களுமிருக்கின்றன. மேற்குறித்தகாரணத்தினுல்கயாவில் த்ரிராத்ரம் க்ஷேத்திரவாஸஞ் செய்வதே கஷ்டமாயிருக்கும்.

விஷ்ணுபக்தனுகிய கயாசுரன் திருமாலைக்குறித்து கோலாஹல கிரியில் தவஞ்செய்து எவராலும் கொல்லப்படாத வரனைப் பெற்று மகாபரிசுத்தனுகி அவனைப்பார்த்த யாரும் புண்ணியர்களாயினுர்கள். இதனுல் இயமனுலகம்பாழ்த்து அத்தருமன், சதுர்முகன், சங்கரன் முதலானவர்களுடன் திருமாலையிதற்கோருபாயங்கேட்க, அவர் பிரமாவை அவ்வசுரனிடம் யாசித்து அவனுடைய உடலில் யாகஞ்செய்யும்படியாக அனுமதிபெற்று, யாகஞ்செய்யென்று ஆக்ஞியாபித்தபடி, பிரம்ஹா அவ்வசுரரிடம் சென்று, உன்சரீரம் மகாபரிசுத்த முடையதாயிருப்பதால் அதில் யாகஞ்செய்ய அநுமதிகொடுக்க வேண்டுமென்று கேட்கவே அவ்வசுரனும் சம்மதித்து கோலாஹல கிரியில் நிருதி திக்கிற்றலையை வைத்து தென்திக்கில் காலைநீட்டிப் பூமியிற் படுத்தான். அப்பொழுது பிரம்மா, யாகத்ரவ்யங்களையும், ஹோதா, அத்வர்யூ, இருத்துவிக்குகளாக கசியபாதிமுனிவர்களையும் சிருஷ்டித்து அவன் சிரசில் செய்யும் யாகசாலையில் ஹோமஞ் செய்வித்தனர். அக்காலத்து அவனது சிரஸ் அசையவே சத்தியலோகத்திருந்த தர்மசிலையை அவனது சிரசில் கொணர்ந்துவைக்கும்படி ஆக்யாபித்தபடி தர்மராஜன் வைக்கவும்,பின்னும் சலிக்கக்கண்டுஒவ்வொருவராய்க் கடைசியாக மகாவிஷ்ணு உள்பட பிரம்ஹா முதலிய தேவர்களும், பிதாமஹர், பிரபிதாமஹர்; பல்க்கீசர், கேதாரேசர், கணுதிபர் முதலிய மூர்த்திகளும், காயத்ரி, சாவித்ரி, சரஸ்வதி முதலிய தீர்த்தங்களும், அகஸ்தியாதி முனிவரும், அத்தருமசிலையின்மேல் பாதம்வைத்தனர். அப்பொழுது கயாசுரன் நான் கேட்கும் வரமளிப்பீராகில் சலியாதிருக்கின்றேனென்று கேட்டதற்கு, மும்மூர்த்திகள் முதலானேருமுடன்பட்டமையால் "நக்ஷத்திரங்களும் பூமியுமிருக்குமளவும் ப்ரம்ஹா விஷ்ணு மகேஸ்வரர்களும் இதரதேவர்களும் சர்வதீர்த்தங்களு மிச்சிலையிலேயேவிருக்க வேண்டுமென்றும் இதை ஸ்பரிசித்தவர்களது பாவம்பறந்துபோக வேண்டுமென்றும்,இதில் பிண்டமிட்டவரது பிதிரர்கள் சுவர்க்கமடைய வேண்டுமென்றும் வரங்கேட்டான்."

அவ்வாறே அவன் கேட்டவரத்தைக் கொடுத்தன ரதனாற்றான், இக்கயாவில் எல்லாமூர்த்திகளது பாதங்களும் தீர்த்தங்களுமிருக்கின்றனவென்று வாயுபுராணம் கூறுகின்றது.

இந்த மத்தியில் மேற்குறித்த யாகம் பிரம்மா செய்யுங்காலத்தில் இக்ஷேத்திரவாஸிகளான பிராமணர்கள் பிரம்மாவின் கட்டளைகளை அலக்ஷியஞ் செய்தபடியால் முதலில் சாபத்தைப் பெற்றவர்கள் யாகத்தினிறுதியில், அவ்வந்தணர் செய்த பக்தி முதலிய ஸ்தோத்திரங்களாலும் கிரியைகளாலும் அவ்விப்பிரர்களையே அவிடத்தில் நடக்கும கயாசிரார்த்தங்களில் உண்ணக்கூடிய யோக்யர்களாகவும் பௌரோகிதர்களாகவும் உரிமைக்காரர்களாகவுமிருக்கவரமளித்தனன். இந்த சதுர்முகப்பிரம்மாவின் ஆக்ஞைப்படி இக்ஷேததிர வாஸிகளான அந்தணர்கள் அதுமுதல் அததொழிலை மிக பக்தியுடனேற்று சிரார்த்தஞ் செய்யுமவர்களின் பிதிரர்களை சுவாககத்துக்கனுப்பவும், புத்ரபௌத்திர பாரம்பரிய அவவம்ஸவிருத்திககு அப்பிதிரர்களின் ஆசீர்வாதங்களை இவாகள் மீநால அளிததும்வருகிறார்கள். பிராமணருள் ஸ்ரீ வைஷ்ணவா, மததுவர் முதலிய எச்சாதியாரும் அவரையேவரித்து சிராத்தம செயவர். அவர் ஆசாரமிலரென்பதும் ஒரு தினத்தில் பலவிடங்களில் பிராமணார்தத்ஞ் செய்வரென்பதும் அவர்கள் ஆதிகாலத்தில பிரமதேவனிடத்தில் பெற்ற வரத்தின் மஹிமையையறியாவறல்ல. பூர்வததில் ஸ்ரீராமபிரான், பீஷ்மர், தருமபுத்திரரிவர்கள பிண்டபரதானம் செய்தபோது முறையே தசரதசக்கரவர்த்தியும், சந்தனமகாராஜனும், பாண்டுமகாராஜனும் எதிர்த்தோனறி யப்பிண்டத்தை அங்கீகரித்திருக்கிற உண்மையைகமகொண்டு பிரத்தியக்ஷமாய் அககாலததில் எல்லோருடைய பிதிரர்களுமவ்வாறே ஏற்று திருப்தியடைந்து வந்தனரென்றும்; பிறகு கலியுக ஆரமபததில பரத்துவாஜமுனிவர் கசியபபதத்தில் பிணடப்ரதானஞ் செய்தபோது தன்பிதாவைத்தவிர பிதாவுடன் மறறொருவனும பிண்ட மேற்கவந்தகாலத்தில் பிண்டப்ரதானத்தை நிறுதத்தி அதன வரலாறறை அமமுனிவரது மாதாவினுல் க்ஷேத்திரம பீஜம என்ற இரண்டு பிரபாவங்களையும் காரணத்தையுந் தெரிநது கொணடு, மறுபடியும் சிராத்தஞ் செய்து அவ்விருவருக்கும சமமாய்ப்பிண்டப்ரதானஞ் செய்தனர். இவ்வாறு கலியுகததில் அதர்மஙகள அக்காலமுதற்கொண்டே ஏற்பட்டுவிட்டபடியால் அதுமுதல பிரததியக்ஷமாய்ப் பிதிரர்கள் வருவதை நிறுததி மறைநதிருந்து பிணடங்களை ஸ்ரீஜனார்த்தனன் மூலமாய ஏற்றுக்கொளளுகிறாகளென்று, ஸ்ரீமத் கயாமான்மியங் கூறுகினறது. காசி, பிரயாகை இரண்டிலுமபோலவே இவிடத்திலும் நம திராவிடதேயப் பிராமணர் அநேகர் குடியேறியிருக்கி

ன்றனர். இந்த கயா நந்தஞ்சாவூரைப்பார்க்கிலும் பெரியதான ஒரு ஜில்லாப்பட்டணம். காசியைப்பார்க்கிலும் அதிக யாத்திரைக்காரர்கள் நாடோறும் இந்தியாவின் ஒவ்வொரு மூலை முடுக்குகளினின்றும் பரமஏழைகளும்பெரிய மகாராஜாக்களும் பிதிர்இரணத்தைத் தீர்க்கும்பொருட்டு வந்துகொண்டிருக்கிறார்கள். காசியாத்திரை நம்சொந்த நன்மையை நாடிச்செய்வது, கயாயாத்திரை அப்படிக்கல்லாது பிதிரர்களின் கடனைச்செலுத்தி அவர்களைச்சற்கதியடைவிக்கச் செய்யவேண்டியது ஒவ்வொரு சற்புத்திரனுக்கும் முதன்மையான இன்றியமையாக் கடமையாகையால் காசியாத்திரையினும் இக்கயா யாத்திரையே அதிக அவசியமும் முக்கியமுமுள்ளது. அது காரணம்பற்றியே காசிக்குச்சென்று ஸ்ரீ காசிவிசுவேஸ்வரர் தரிசனஞ்செய்வதற்கு முன்னமேயே கயா சிரார்த்தத்தைச்செய்துகடனைத்தீர்த்துக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்வதே சுருதி சம்மதமார்க்கமாதலால் ஸ்ரீகாசிக்ஷேத்ரபாலகரும் விஸ்வேஸ்வரரும் இவர்களுக்கு நேரில் தம்மிடம் வருபவர்களைக் காட்டிலும் அதிக பலனைக் கொடுக்கிறார்கள். மற்றொருகருத்து — ஒருவேளை காசியில் சேர்ந்தவுடன் இறக்க நேர்ந்தாலும் இந்த பிதிர்க்கடன் பாக்கிக்காக மற்றோர் ஜன்மமெடுக்காமலிருக்கும்பொருட்டென்க.

நம்மிந்து மதவுண்மைகளைப் பெரும்பாலும் பின்பற்றிவரும் பௌத்தமதம் பூர்வம் சுமார் 1500 வருஷங்களுக்கு முன் பிரக்யாதியுடன் செழித்தோங்கி வந்த காலத்தில், இந்தகயையை அம்மதாசாரியர்கள் முக்கியமான நடுநாயகமாக வைத்துக்கொண்டு அதில் அநேகமடங்கள், கோயில்கள் முதலானவைகள் கட்டியிருக்கிறார்கள். தற்காலத்திலும் மேலே பிரஸ்தாபித்த பௌத்த கயாவில் பௌத்தமத சந்நியாசிகளும், மடாதிபர்களும், ஜப்பான் தேசத்திலிருந்து கொண்டுவந்து வைத்திருக்கிற ஒருமிகவும் அற்புத அழகமைந்த பௌத்தவிக்கிரஹமொன்றும் வைக்கப்பட்டிருக்கிறது. இக்கட்டிடங்கள்,மடங்கள் முதலியவைகளுடன் கயாவிலிருக்கிற பௌத்தமத சம்மந்தமான அநேககோயில்கள்,மடாலயங்கள் முதலியவைகளும் காயவாலர்களின் பராமரிப்புக் குட்பட்டிருக்கின்றமையா லவர்கள் இக்கட்டிடங்கள் முதலியவைகளை நம்மிந்துக்களாகிய பிராமணர் முதலானமேல்ஜாதியாருக்கு சிரார்த்தாதிகள் செய்வதற்கும், ஜாகா முதலியவைகளுக்கும் கொடுத்து உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். கயையைத்தவிர்த்து வெளியிலிப் பாதகண்டத்துக்குள் எந்தப்பிரதேசத்தில் சிரார்த்தஞ்செய்தாலும் இந்த "கயை" யையுச்சரிக்காமலும், ஸ்ரீமத்ஜனார்த்தனருக் கர்ப்பணஞ் செய்யாமலுமிருந்தால்சிரார்த்த சம்பூர்ணபலன்கிடையாதென்பதும் சுவானுபவமாயுள்ளது.

# 20. ஸ்ரீமத் கங்காசாகரம்.



கங்காநதி சமுத்திரசங்கமமாகும் இக்ஷேத்திரம் ஸ்ரீமத்கயா விலிருந்து தென்கிழக்கில் 358 மைலிருக்கிறது. மார்க்கத்தி லுள்ள கல்கத்தாவைச் சுற்றிப் பார்த்தபிறகு (இம்மாநகரைப் பற்றி மற்றோரிடத்தில் விரிவாய் சொல்லப்பட்டிருக்கிறது) அங் கிருந்து தென்மேற்கில் 35 மைலிலுள்ள (ரெயில் சார்ஜ் 0-8-0) டயமண்ட் ஹார்பரிலிறங்கி அங்கிருந்து சுமார் 30 மைலில் தெற் காகவுள்ள இக்ஷேத்திரத்துக்கு ஸ்டீமர் அல்லது படகுகளிற் போகவேண்டும். ஷை டயமண்ட் ஹார்பருக்குப்பிறகு இருப் புப்பாதை கிடையாது. நேராக கல்கத்தாவிலிருந்தும் ஸ்டீம ரிலேயே வரலாம். இதில் இறங்கி ஏறவேண்டிய அசௌகரியம் இன்று. இக்ஷேத்திரம் கங்காநதியா லாக்கப்பட்ட ஒரு தீவின் மத்தியிலிருக்கிறது. இவிடம் விறகைத்தவிர யாதொரு சாமா னும் கிடைக்காது. எல்லாம் கல்கத்தாவி லிருந்தே வாங்கிப் போகவேண்டும். இதில் யாத்திரைத் தொழிலை நடத்துபவர்க ளும் செம்படவர்களும் டெம்பரொரியா யிருப்பதைத்தவிர்த்து ஸ்திரமாய்க் குடியிருப்பவர்கள் கிடையாது. இவிடம் ஜனங்கள் விசேஷமாய் இரவில் தங்கமாட்டார்கள். கீழ் பூமியெல்லாம் சுத்த சதுப்பு நிலமாயும், காடுகளடர்ந்து மிருக்கிறது. அக் காடுகளில் புலி முதலிய துஷ்ட மிருகங்களும் சஞ்சரிக்கும். ஸ்திரீ ஜாதிகளுடனும், குழந்தைகளுடனும் இவிடம் போவது சிரமமே. இத்தலம் நமது பூ பிரதட்சண யாத்திரையின் கீழ்க் கோடி எல்லை; இங்கிருந்து இனி இராமேசுவரத்தை நோக்கிச் செல்லும் தென் மேற்குத்திசை மார்க்கத்தில் இவிடமிருந்து 311 மைலிலுள்ள ஸ்ரீ ஜகந்நாதத்துக்கு மத்தியிலுள்ள வைத ரணீ, பிராம்ஹணீ, மஹாநதி தீரங்களின் மார்க்கமாய்ச் செல் வோமாக.





# 21. ஸ்ரீஜகந்நாதம்.



தாருமயபிரதிமா ரூபகிருஷ்ணமூர்த்தி, சுபத்திரை, பலபத்திரர் முதலானவர்கள் யோகநரஸிம்ஹஸ்வாமி, எட்டுதிக்குகளில் கபாலமோசனீஸ்வரர் முதலிய சிவமூர்த்தங்கள், மங்களை முதலிய எட்டுசக்திகள், ரோகிணி முதலிய அநேக தீர்த்தங்கள், வடமஹாவிருக்ஷப் இவையன்றி கபோதேஸ்வரர், கோடிலிங்கேஸ்வரர் என்னுமிரண்டு சிவமூர்த்தங்களும் இந்த க்ஷேத்திரத்தை

யிரட்சிக்கின்றனர். சூரிய குலத்தரசனாகிய இந்திரத்யும்னன் பிரதிஷ்டை செய்து பிரமலோகத்துக்குப் போனஸ்தலம். இரணியகசிபனைச் சங்கரித்த நரஸிம்ஹஸ்வாமி உக்கிரரூபத்தைக் காண தேவர்கள் அச்சப்பட்டு, சாந்த ரூபமாய் நித்தியமாயிருக்கிற தலத்தில் வசித்து தரிசனந்தரக் கோரியபடி சேவைதந்தஸ்தலம். கபாலமோசனேஸ்வரர் ஆராதித்து பிரமஹத்தி போக்கியஸ்தலம். ஒரு பிரமகல்பத்தில் மார்க்கண்டேயர் பிரளயத்தில் மூழ்கி அலையுங்காலத்தில், எக்காலத்திலும் அழிவில்லாத இத்தலத்தையடைந்து ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைப் பார்த்துத் தான் சிரஞ்சீவியானதால் அப்போதைக்கப்போது பிரளயஉபாதியால் தனக்கு வருத்தம் நேரிடுவதைப் பற்றித் தான் அவிடத்திலேயே வசித்து சிவாராதனை செய்யும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று கோர, ஸ்ரீமந்நாராயண மூர்த்தி கிருபாநோக்கம் செய்து தன் சுதரிசனமென்னும் சக்கரத்தினால் ஒரு தீர்த்தமுண்டாக்கி, அத்தீர்த்தத்தில் மூழ்கி அதன் கரையில் சிவத்யானஞ் செய்யும்படியனுக்ரிஹித்தஸ்தலம். மஹிஷாசுரனைச் சம்ஹாரஞ்செய்த கௌரிதேவி தான் எப்போதும் ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கும் இலக்ஷ்மிக்கும் சமீபத்திலிருந் தாராதிக்கவேண்டுமென்று கோர, இலக்ஷ்மிதேவியார் உத்தரவால் இந்தத்தலத்தில் எட்டு ரூபங்களாக வசித்து இதையிரக்ஷிக்கின்றனர். ஓர்காலத்தில் ஈஸ்வரனும் பிரார்த்தித்து எட்டு உருவங்களாகி இந்தஸ்தலத்தை பிரக்ஷிக்கின்றனர்.

ஈஸ்வரன் புறாப்பக்ஷி உருவங்கொண்டு, ஸ்ரீ மந்நாராயண மூர்த்தியைக் குறித்துத் தவஞ்செய்து சகல தேவ மானிடரால் பூசிக்கப்பட அருள் பெற்ற ஸ்தலம். புறாவுக்கு வடபாஷையில் "கபோதம்" எனப்பெயராதலால் இவ்வீஸ்வரருக்குக் கபோதேஸ்வரரெனப் பெயர் காரணமாயிற்று. மற்றோர் காலத்தில் ஈஸ்வரன் ஸ்ரீ மந் நாராயண மூர்த்தியினது அநுமதியின் மேல் கோடிலிங்கங்களை ஸ்தாபனஞ் செய்து அவற்றிற்குத்தானதிபதியாயிருந்த ஸ்தலம். புண்டரீகன் என்னும் பிராமணனும், அம்பரீஷன் என்னும் க்ஷத்திரியனும் தத்தங்குலாசார விதி கடந்து, விசேட பாவங்களைச் செய்தும் பூர்வ புண்ய வசத்தினால் நைமிசாரணியமடைந்து பிருகு மஹாமுனி சொற்படி இத்தலத்தையுற்று ஸ்ரீ மந் நாராயண மூர்த்தியை நோக்கித் தவஞ்செய்து அவர் பிரசன்னராக அவராக்கினைப்படி அவருக்கு நிவேதனமாகும் பிரசாதத்தை மூன்றுமாதகாலம் புசித்து முத்தியடைந்தனர். இத்தலத்தில் நிவேதனமாகும் பிரசாதத்தையும், சுவாமிக்கணிந்திருக்கும் துளசிமாலை, கந்தம் முதலியவற்றையும் ஆசாரம்

பாராட்டாது கிரஹிப்பவருக்கு இஹத்தில் சகலவித நன்மையும் பரமபதமும் கிடைக்கும். அல்லாதவருக்குச் சகலவித துன்பமும் நரகமும் பிராப்தியாகும்.

இத்துணை மஹிமைபெற்ற இப்பிரஸித்த விஷ்ணு க்ஷேத்திரம் ஸ்ரீ காசிக்குச்செல்லும் கீழமார்க்கத்திலுள்ள கூர்டா ஜங்ஷன் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்காய் 28 மைல் தூரத்திலிருக்கிறது. இது ஒட்டிரமத்தியதேசம். நாள் தவறுமல் 365 நாளும் ஆயிரக்கணக்காய் யாத்திரை வருகிறார்கள். ஆடிமாதத்தில் இவிடம் நடக்கும்பிரம்மோற்சவத்துக்கு லெக்ஷம் ஜனங்களுக்குக் கம்மியில்லாமல் கூடுகிறார்கள். இப்புண்ணியப் பிரசித்த தேவஸ்தானம் 652 அடி நீளமும் 630 அடி அகலமுமுள்ள சதுரமாகவும் இருபதடி உயரமுள்ள மதில்களாலும் சூழப்பெற்றிருக்கிறது. இதற்குள் சுமார் நூறு சிறிய தேவஸ்தான சந்நிதிகளிருக்கின்றன. இந்த நூறு சந்நிதிகளிலும் முக்கியமானவை:—பீமலா, லெக்ஷ்மீதேவி சந்நிதானங்கள், ஆனால் 192 அடி உயரத்துடன் கூடிய விமானமுள்ள பிரசித்த ஸ்ரீ ஜகந்நாத ஸ்வாமி சந்நிதான விசேஷத்தைப் பார்க்கும்போது இவ்விரண்டும் எம்மாத்திரம்! சுமார் 800 வருஷங்களுக்கு முன் அனங்கபீம ராஜனால் 50,00,000 பவுன் செலவு செய்து கட்டப்பட்டு சமீபத்தில் ஏராளமான திரவியத்தால் ரிபர் செய்யப்பட்டிருக்கிறது. மகம்மது கலாபத்தில் மூன்றுதரம் இதற்குத் தெற்கிலுள்ள சில்கா ஏரியில் இந்த மகத்தான விக்கிரஹத்தைப் புதைத்து விட்டார்கள்; பிறகு வெகுகாலம்வரையில் இவ்வோட்டிர தேசத்தின் பச்சிம பாகத்திலுள்ள காடுகளில் மறைந்து கிடந்தது. இப்போது மிகவும் பழமை பெற்றிருக்கிறது. ஜக்கர்நாத்ஸ்வாமி கோயிலிலிருந்து ஒன்றரைமைல் தூரத்திலுள்ள இந்திரதூம்ன என்னுமிடத்துக்கு ஒரு விஸ்தாரமான அழகிய ரஸ்தா செல்லுகிறது. இத்தலத்தில ரூத்ஜாத்ரா திருவிழாவில் எட்டுநாள் இக்கடவுள் வசிக்கிறதாக ஆகமம். நாளின் அறுபது நாழிகையிலும் ஸ்வாமி தரிசனத்துக்காக உள்ளே போகிறவும் வெளியே வருகிறவுமான ஜனசமூகத்தின் காக்ஷி தேவேந்திர காக்ஷியே! இந்தியாவின் எந்தச் சந்நிதியிலும் இப்படி ஒரே தொடர்ச்சியாய் எந்தக்காலத்திலும் கூட்டம் கிடையாது. ஸ்ரீ மந்திர் என்னும் தேவாலயம் மற்றெல்லா வற்றினும் பெரிது; இதற்கு மூன்று வாசல்களுண்டு, முதலாவது ஸிம்ஹத்துவாரம் அதாவது வாசலுக்கு இரண்டு பக்கத்திலும் கற்சிலை ஸிம்ஹங்களைக் காவலாக வைக்கப்பட்டிருக்கிறது. இதற்குள் விஸ்தாரமான 22 படிக்கட்டுகள் ஏறி மேலே சென்றால் ஒரு அழகிய

உயர்ந்த விஸ்தாரமான சபா மண்டபமிருக்கிறது. இம்மண்டபத்தைத் தாண்டி உன்னதமான மத்திய வாசலால் உட்சென்றால் ஜக்கர்நாதஸ்வாமியின் தேவாலயம் ஒரு விஸ்தாரமான திறந்த வெளியான முற்றத்துக்கு மத்தியில் சமீபத்திலுள்ள நாத மந்திரத்துடன் கூடிப்பிரகாசிக்கிறது. இந்த முன்றிற்றான் ஸ்வாமி தரிசனத்துக்காக ஜனங்கள் கூடி நின்று தரிசிப்பது. இப்படிக் கூடியிருக்கும் ஜனங்கள் தரிசனத்துக்காக எல்லாக் காலங்களிலும் உள்ளே விடப்படாமல் பகலிலும் இரவிலும் குறிப்பிட்ட காலங்களில் தரிசனத்துக்காக உள்ளே விடப்படுகிறார்கள். அர்த்த மண்டபத்தினுள்ளே ரத்ன சிம்ஹாசனத்தில் ஜக்கர்நாத் ஸ்வாமியும் நாதருடைய ஜியேஷ்டரான பலராமஸ்வாமியும் சகோதரியான சுபத்ரா தேவியும் இந்த ரத்ன ஸிம்ஹாஸன பீடத்தில் வீற்றிருக்கிறார்கள். இத்திரி மூர்த்திகளில் ஜக்கர்நாத், பலராம் இவர்களுக்கு அபூர்ணமான குட்டைக் கைகளும், சுபத்திரைக்குக் கைகளே யில்லாமலுமிருக்கிறது. ஏனெனில் பூர்வத்தில் ஆதி சிருஷ்டிக்கிரமத்தில் ஜக்கர்நாதஸ்வாமியே (கிருஷ்ண பகவானான மகாவிஷ்ணுவை ஜக்கர்நாத் என்று இவிடத்து ஜனங்கள் சொல்லுகிறார்கள்) இந்த மூன்று விக்கிரஹங்களையும் மகா விஷ்ணுவே ஒரு கிழத்தச்சன் வேடம்பூண்டு வேலை செய்து கொண்டிருக்கும் மத்தியில் (வேலை முடிவு பெறுவதற்கு இன்னும் ஒரு வாரஞ்செல்லும்) ராஜனுடைய பாரியையின் அந்தரங்க பக்தியுடன் கூடிய வேண்டுகோளினால் கர்ப்பத் துவாரம் திறக்கப்பட்டு அக்காரணத்தினால் அதே ஸ்திதியில் அபூர்ணமாய் நின்று விட்டது. இம்மூர்த்திகள் மிக்க விலைபெற்ற ஆபரணங்களாலும் பட்டு பீதாம்பரங்கள் முதலிய ஆடைகளாலும் மிகவும் உன்னதோன்னதமாய் அலங்கரிக்கப் படுகின்றன. ஜக்கர்நாத் சுவாமியினது நெற்றியில் விலைமதிக்க முடியாத ஒரு பெரிய வஜ்ஜிரம் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. அறுபது நாழிகையிலும் அநேகந்தடவை அதாவது அடிக்கடி, அடிக்கடி அலங்காரங்களைப் புதிய ஆடைகளாலும் புஷ்பங்களாலும் மாற்றிக்கொண்டே யிருக்கிறார்கள். நம்முடைய தேவஸ்தானங்களை யெல்லாம் நிர்மூலப்படுத்திவந்த மகம்மதிய அரசாக்ஷியில் இந்த ஸ்ரீ ஜகந்நாதஸ்வாமி கோயிலை யழிக்காதிருக்கும் பொருட்டு யாத்திரை வரியாக வருஷத்துக்குப் பதினைந்து லெக்ஷம் ரூபாய்க் கப்பஞ்செலுத்தி வந்தார்கள்.

ஆயிரக்கணக்காய் வரும் யாத்திரிகர்களுக்கு 365நாளும் பிரசாதமளித்தாலும் ஆடிமாதத்து ரதோற்சவ காலத்திலு மெல்லோருக்கும் அளிக்கப்படுகின்றது. சுவாமி நிவேதனமாகிய

இப்பிரசாதத்தை ஏற்றுக் கொண்டு சமீபத்தி லெதிரிலுள்ள சமுத்திரத்தில் தங்கடங்கள்பாவங்கள் போம்படி ஸ்நாநஞ் செய்கிறார்கள். பிரபுக்களும்பணக்காரரும் ஆயிரக்கணக்காய் ஸ்வாமிக்குப்பாத காணிக்கை யளிக்கவும் பிச்சைக்காரனாய்ப் பரம ஏழையாயிருந்தாலும் தன்னாலியன்ற காணிக்கை போடாமலிரான். சிலர் வாங்கின கடனிலிருந்து மீளாவண்ணம் தங்களுடைய சர்வ ஆஸ்தியையும் கொ துவை வைத்து யாத்திரை செய்கின்றனர். வேறு சிலர் அப்படிக் கொண்டுவந்த பணம் முற்றிலும் இம்மஹத்தான சந்நிதியில் செலவு செய்துவிட்டு ஊருக்குத் திரும்புகால் செலவுக் கில்லாமல் பிச்சை யெடுத்துக்கொண்டு போகின்றனர். இத்தேவாலயத்தின் சுவான்தார் ஷெ கூர்டா ராஜா. வெகுசான எண்ணங்களுடன் வருகிற யாத்திரைக்காரரில் சிலர் மிதமற்ற கஷ்டத்தினு லுண்டாகும் காலரு முதலியவைகளா லிறக்கும்படி நேரிடுகிறபடியால், பணத்தைக் கொண்டு ஜாகா முதலிய சௌகுரியங்க ளேற்படுத்திக் கொள்ள முடியாதவர்கள் சாதாரண நாட்களில் இத்தலத்துக்கு யாத்திரை செய்வதே உசிதமாயிருக்கிறது. ஜக்கர் நாத்தென்று சொல்லப்பட்ட இஜ்ஜகந்நாத ஸ்வாமிக்குப் பிரதிதினமும் சமர்ப்பிவிக்கும்போகம் (போகம்=நிவேதனம்) சாதம் சமைத்த காய்கறிகள், தித்திப்புத் தின்பண்டங்கள், பழவகைகள் பால், தயிர் முதலிய சமஸ்தமும் ஒன்றாய்ச்சேர்த்து ஒரு குவியலாக சந்நிதானத்தில் போட்டு நிவேதனஞ்செய்த பிறகு இயற்கனவே ஜாஸ்திப்பணங் கொடுத்தவர்களுக்கு அப்போகக் குவியலினின்றும் பிரித்தெடுத்துக் கொடுததபிறகு, பாக்கியிற்கும் முழுப் பிரசாதத்தையும் விலைக்குக் கொடுக்கும்பொருட்டு தேவாலயத்துக்குள் ஆனந்த பஜார் என்னும் இடத்திற்கு அனுப்பப்படுகிறது.

ஒரு நாள் போகம் (இதை சமையல் செய்ய 200 சுயம்பாகிகளும அதற்குத் தகுந்த பரிசாரகர்களும் பிடிக்கிறது) ஒரு இலக்ஷம் ஜனங்கள் ஆகாரத்துக்குப் போதுமானதா யிருக்கிறதென்பது என்னும் விவரத்தால் அப்போகத்தின் குவியல் பரிமாணத்தை நீங்களே கணித்துக் கொள்ளலாம். இந்தப் போகத்தின் பரிசுத்தத்தையும் மகாத்மியத்தையும் பற்றி மனதாலும் அளவிட்டு மதிககக்கூடாது; எவ்வாறெனில் மிகவுந் தாழ்ந்த சூத்திரன் முதல் (அதாவது பஞ்சமர் மட்டும் நீங்கலாக மிகவுமுயர்ந்த உத்ரதேசத்து பிராமணன வரையில் எல்லோருய எவ்வளவேனும் ஜாதி மதவித்தியாசம் பாராட்டாமல் ஒரே இடத்திலுட்கார்ந்து கொண்டும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டும் ஒரு சூத்திரன்கொடுத்த பிரசாதத்தை பிராமணன் ஏற்றுக்கொண்டும்,

ஒரேபாத்திரம் அல்லது போஜன பாத்திரத்தின் சுற்றிலும் பிராமணனும் சூத்திரனும் வித்தியாசமின்றி உட்கார்ந்தும் புசிக்கிறார்கள் !!! இதற்கு முக்கிய காரணம் இவிடத்திலுள்ள பல வர்ணத்தாரும் அணிந்துவரும் ஒரேவித நடை, உடை, பாவனைகளாலும் இடம், பொருள், ஏவல்களாலும், பசி தாகம் முதலியவைகளாலும், சந்நிதான விசேஷத்தினாலும், கூட்டத்தின் அபரிமித அளவினாலும்கொஞ்சம்சாதாரணமாயுள்ள ஜன சமூகத்தினர்கள் முக்கியமாய்வடதேசத்தோர் இவ்வருவெறுப்பானவழக்கத்தைப் பின்பற்றுகிறார்கள். ஆனால் நம் தென்தேயத்து ஆசார சீலமுள்ள பிராமணர்கள் துணியார்களானாலும் அந்தப்படி ஜாதி வித்யாசம் பாராட்டாது பகவத் பிரசாதத்தை உட்கொள்ள வேண்டியதே க்ஷேத்ரபுராண முறைமையாகும், அன்னோர்கட்குத் தான் பூர்ண பலனென்றும் கூறுகிறது. இஜ்ஜெகந் நாதமென்னும் பூரியில் ஒருவரும் சமைப்பதில்லை எப்பேர்ப்பட்டவனும் இந்தப் பிரசாதத்தைத் தான் வாங்கி சாப்பிடுகிறான். மேலும் நிற்பதற்குக் கூட இடங் கிடைக்காதபோது சமைப்பதற்கு எங்கிருந்து இடம் கிடைக்கும் !! "சர்வம் ஜகந்நாதம்" என்பது இதுதான். ரத் ஜாத்ரா என்னும் ஷை பிரம்மோற்சவத்துக்கு இரண்டு வாரத்துக்கு முந்தி ஜக்கர்நாதஸ்வாமி பௌர்ணமியில் சமுத்திரஸ்நானஞ் செய்துவிட்டு அன்று முதல் இரண்டுவாரம் வரையில் ஒருவருக்கும் தரிசனம் கொடுக்காது ஏகாந்தமாயிருக்கிறார். இக்காலத்தில் கோயில் கதவுகளெல்லாம் மூடப்படுகின்றன. இந்த சமயத்தில் ரதோற்சவத்தி (ராத்ஜாத்ரா பிரமோற்சவம்) ன் ரதத்துக்காக 16 சக்கரங்களுடனமையப் பெற்ற ஒரு மகாரதம் தயாரிக்கப்படுகின்றது. அவருடைய சகோதரனுக்கும் சகோதரிக்கும் இரண்டு தனிசிறிய ரதங்கள் நிருமிக்கப்படுகின்றன. யாத்திரிகர்களெல்லோருஞ் சேர்ந்து இம்மூன்று இரதங்களையும் ஒருமைல் தூரத்திலுள்ள தோட்டத்தின் மத்தியிலுள்ள கோயிலுக்கு இழுத்துக் கொண்டுபோய் வைக்கிறார்கள். உடனே யாத்திரிகர்களெல்லோருந் தங்கள் தங்களுருக்குத் திரும்பி விடுகிறார்கள். ஷை மூன்று சுவாமிகளும் ஷை தோட்டத்தில் பத்துநாள் தங்குகின்றன. திரும்புகாலில் கூலியாட்களைக் கொண்டு இம்மூன்று ரதங்களையும் கோயில் நிலைக்குக் கொண்டு வந்து சேர்க்கிறார்கள்.

யாத்திரிகர்களிலொவ்வொருவரும் தாங்கள் செய்த பாவங்கள் இம்மூர்த்தியாலடிபட்டுப் பரிகரித்து விடப்பட்டனவென்பதற்கறி குறியாக ஒவ்வொரு வர்ணப் பிரம்பை வாங்கிக்கொண்டு போகிறார்கள், கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர் முதலியஐரோப்

பிய வாஸஸ்தலங்கள், கச்சேரி முதலியவைகள் கடற்கரையில் ஒரு விஸ்தாரமான தனிஜாகாவில் அமைக்கப்பட்டிருக்கின்றன. அநேக பங்களாக்களும் ஹோட்டல்களுமிருக்கின்றன. இவ்விடத்தில்கோடை மிதமாகவும், பொதுவாகதேகசௌக்கியமுள்ளதாகவுமிருக்கிறது. விஸிடர்கள் கடற்கரைஹோடல்களில் நிதானமான வாடகைக்கு ஜாகாக்களைப்பெறலாம். ஷை உற்சவ காலத்தில் ஸ்ரீ ஜகந்நாதத்தைச்சுற்றி சுமார் 30 மைல் நாலாபக்கங்களிலும் எங்கும் கூட்டமாகவே யிருக்கும். இந்தப்பூரி என்னும் ஸ்ரீ ஜகந்நாதம் கீழ் சமுத்திரக் கரையில் கல்கத்தாவிலிருந்து கார்க்பூர் மார்க்கமாய் 311 மைலும், சென்னபட்டணத்திலிருந்து பெஜவாடா, ராஜமகேந்திரம் வழியாய் 777 மைலுமிருக்கின்றது. இந்தியாவின் எந்த யாத்திரை ஸ்தலத்திலும் இஜ்ஜகந்நாதத்தைப்போல் சாதாரண நாள்களிலும், ஷை ஆடி அமாவாசையின் பிரம்மோற்சவ காலத்திலும் கூடும் யாத்திரிகர்களினளவு எந்த தேசத்திலும் கிடையாதுள்ள அத்துணை மகிமை பெற்றிருத்தலால் இந்த ஸ்ரீ ஜகந்நாத யாத்திரையை ஒவ்வொருவரும் அவஸியம் செய்யவேண்டிய மாண்பினும் மாண்புடைத்தென்க. சர்வம் ஸ்ரீ ஜகந்நாதமென்பது பரமாநந்தம்; இவ்வானந்தத்தை நேரிற் பார்த்தாலல்லது விளக்கிமுடியாத பேராநந்தம்.

## 22 கோதாவரி.



ஸ்ரீ ஜகந்நாதத்திலிருந்து 420 மைலிலிருக்கிற சப்தநதிகளில் ஒரு முக்யநதியாகிய இம்மஹாநதியில், மற்ற நதிதீரங்களிற்போல தீர்த்தசிரார்த்தம் வகைரு செய்வதுடன், கங்கையும் கோதாவரியும் சகோதரிகளாமாதல்பற்றி கங்கோற்பத்தி, ஹரித்வாரம் அல்லது பிரயாகையிலெடுத்து வந்திருக்கிற கங்கையுடன் இக்கோதாவரி தீர்த்தத்தை இவிடம் கலக்கவேண்டியது முறைமையாகும். ஜகந்நாதத்திலிருந்து இவிடம் வரும் மார்க்க மத்தியில் சத்தர்பூர், பர்ஹம்பூர், விஜயநகரம், பீடாபுரம், உர்லாம், விசாகபட்டணம், முதலியவைகளில் சௌகரியப்படி இறங்கி மஜிலிகள் செய்யலாம். ஷை மஜிலிகளெல்லா வற்றுள்ளும் தர்மான்னசத்திரங்களும் மற்றெல்லாவித சௌகரியங்களுமுண்டு, இவையெல்லாம் தெலுங்கு தேசம்.

இராஜமஹேந்திரம் ஸ்டேஷனுக்கு டிக்கட் வாங்காமல் கோதாவரி ஸ்டேஷனுக்கே வாங்கவேண்டும் ஏனெனில் கோதாவரி ஸ்டேஷனிலிருந்து நதியின் முக்கிய ஸ்நாந கட்டமும்,

கோடி லிங்கமும் வெகு சமீபம். 2 பர்லாங்கு கூட இல்லை. இராஜமஹேந்திரத்திலிருந்து மூன்று மைலுக்கு மேலிருக்கிறது; அநுபோகம் தெரியாதவர்கள் அனுவசியமாய் சிரமப்படுகிறார்கள். ஷை கோடிலிங்கத்திலும், பட்டணத்துக்குள் நாளம்வாரி சத்திரம் முதலிய அநேகவிடங்களில் பிராமணருக்கு மாத்திர, மன்று எல்லா யாத்திரைக்காரர்களுக்கும் இனுமாய் அன்னமளிக்கிறார்கள். டவுனுக்கு மத்தியில் ஷை நாளம்வாரி சத்திரத்தில் ஜாகாசெய்ய வெகு சௌகரியம். இந்தத் தெலுங்கு ராஜ்யத்தில் பிராமணன் தீர்த்த பாத்திரத்துடன், போஜனசமயத்தில் வேறு புதுமடி உடுத்திக் கொண்டாலன்றி அன்னமளிக்கமாட்டார்கள். கோதாவரிக் கிவிடமேற்பட்டிருக்கிற அழகு மான்மிய முதலியவை நோக்குமிடத்து, ஸ்ரீகாசி கங்கையினும் ஜாஸ்தியென்று சொல்லத் தகுந்ததாய் எவ்வளவு நாளானாலும் இதை விட்டகல மனம் வராது. வாஸயோக்கியத்துக்கு வெகு சௌகரியமும், ரமணீய கரமுமானது.

கோதாவரி ஸ்டேஷன், கோதாவரி ஆற்றின் வடகரையிலிருக்கிறது. சிறிது வருஷங்களுக்கு முன் கட்டி முடிந்த இம்மா நதியின் பாலம் 160 அடியுள்ள 56 கணவாய்கள் பெற்று ஒன்றே முக்கால் மைல் நீளமுள்ளதா யிருக்கிறது; இந்தியாவிலுள்ள வாராவதிகளின் பரிமாணத்தில் இது இரண்டாவதாயிருக்கிறது. முதன்மையானது.—ஸ்ரீமத் கயாவிலிருந்து ஸ்ரீ காசிக்குச்செல்லும் மார்க்கத்திலுள்ள ஈஸ்ட் இண்டியன் ரெயில்வே கம்பெனியைச் சேர்ந்த ஸோணபத்திரா நதியின், பாலம். ஷை கோதாவரி பாலத்துக்கு மூன்றுமைலுக்குக் கிழக்கில் கோதாவரிநதி மூன்றரைமைல் அகலம் விரிந்திருக்கிறது.

## 23. கிருஷ்ணா=பெஜவாடா.



ஷை கோதாவரியிலிருந்து தென் மேற்காய் 85 மைலில் கிருஷ்ணா தீரமாகிய இந்த ரெயில்வே ஸ்டேஷனுக்கு அரைபர்லாங் தூரத்தில் பிரயாணிகள் சௌகரியமாய் ஜாகை செய்துகொண்டு சமையல் சாப்பாடு செய்ய ஒரு விஸ்தாரமான ஸெகிந்தராபாத் ஸேட்ஸாவ்கார் தர்மசாலை யிருக்கிறது. ஸ்டேஷனிலிருந்து கிருஷ்ணா ஸ்நாநகட்ட விசேஷமுள்ள ஊர் 1½ மைலிருக்கிறது; ஊருக்குள்ளும் சில தர்ம சத்திரங்க ளிருக்கின்றன. அந்தணருக்கு இலவசமாய் அன்ன மளிக்கும் தர்ம சத்திரங்கள் பல உண்டு; தீர்த்த விசேஷத்துடன் கிருஷ்ணா நதியின் அழகான

அணைக்கட்டையும், ஆழமானபாய்ச்சல் கால்வாயும், மற்றுமுள்ள இஞ்சினீர் இலாகா ஜலாதாரக்கட்டிட ஏற்பாடுகளையும் புத்தி யூகங்களையும் பார்க்கத் தகுந்தது. க்ஷேத்திர வாஸிகளான அந்தணர் தீர்த்த சிரார்த்த முதலியவைகளைச் செய்துவைக்க, கோதாவரியில் போலவே இவிடமும் தயாராய்க் காத்திருக்கின்றனர்.



## 24. காஞ்சீபுரம்.

பெஜவாடாவிலிருந்து தென்மேற்காய் 288-மைலிலுள்ள முத்திநல்கும் சப்தபுரிகளிலொன்றாகிய இவ்வழகிய புராதனபட்டணம் அநேக தீர்த்தங்களும் மூர்த்திகளுமுடையது. ஏகாம்பரேஸ்வரர், வரதராஜப்பெருமாள், இவ்விரண்டு சந்நிதிகளும் பிரசித்திபெற்றவை. விஸ்தாரமான வீதிகளோடுகூடிய இப்பட்டணத்தினழகும், ஸ்ரீகாமாக்ஷியம்மன் மஹிமையும் ஜாஸ்தி; இதற்கு மூன்றுமைலுக்குத் தெற்கே க்ஷீரநதியென்னும் பாலாறு ஓடுகிறது. இவ்வூரின் பட்டுதினிசு வஸ்திரங்கள் பேர்போனவை. ஸ்டேஷனிலிருந்து ஷை கோயில்கள் இரண்டுமைல் தூரத்திலிருக்கின்றன. தர்மான்னசத்திரங்களும், தர்மஜாகாக்களும் பலஉண்டு. வைசாகமாதத்தில் நடக்கும் கெருடோற்சவம் வெகுவிசேஷம்.

காசிகாண்டத்தில்:—

காதலிற் சென்றிறந்தோர்க்குச் சாரூபஞ் சிவனளிக்குங் காஞ்சிக்கேகி [ட்
யாதாததினைழ்பகொண்டிருந்திறந்தோ ரென்பனைத்து மலங்கற்றிண்டோ
சீதரன்றன் வளையாழி யுருவாகுந் துவாரகையிற் சென்று பின்னர்
மாதவத்தோ ரெஞ்ஞானறு மூவர்துறை மாயாபுரியின் வத்து சேர்ந்தான்.

பெஜவாடாவிலிருந்து இவிடம் வரும் மார்க்கமத்தியில் உத்தரபினாகினிதீரத்துக்காக நெல்லூரிலும், வாயு லிங்கவிசேஷஸ்வாயம்புஸ்தலமாகிய ஸ்ரீகாளஹஸ்தியிலும் (இவிடம் ஸ்வர்ணமுகிஆறு ஓடுகிறது. மஹாசிவராத்திரி மஹாவிசேஷம்) ஜகத்பிரஸித்தமாகிய திருப்பதியிலும், விசேஷமகிமைபெற்று விளங்காநிற்கின்ற சுப்பிரமணியஸ்தலமாகிய திருத்தணிகையிலும் தரிசனாதிகள் செய்யத்தவறக்கூடாது. ஷெ ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் தர்மான்ன சத்திரங்கள் ஜாகாக்கள் முதலிய எல்லா சௌகரியங்களுமுண்டு.

## 25. சிதம்பரம்.

காஞ்சீபுரத்திலிருந்து தெற்கில் 120 மைல் தூரத்திலுள்ள இந்தப்பிரபலமான சிவத்தலம் த்வாதசாந்த ஸ்தலம். மார்கழி, ஆனி மாதங்களில் முறையே நடந்தேறும் ஆருத்திரா தரிசனம், ஆனித்திருமஞ்சன உற்சவங்கள் வெகு பிரசித்தம். தென்ஜில்லா வாசிகளுக்கு இதன் மஹிமையைப்பற்றி அதிகமாய் ஊமிங்கெடுத்து சொல்லவேண்டிய அவசியமில்லை.

காஞ்சீபுரத்திலிருந்து இவிடம்வரும் மார்க்கமத்தியில் செங்கற்பட்டு ஸ்டேஷனுக்கு 9 மைல் கிழக்கிலுள்ள பக்ஷி தீர்த்தமென்னும் திருக்கழுங்குன்றம் தரிசிக்கத் தகுந்தது.

## 26. ஸ்ரீ ரெங்கம்.

சிதம்பரத்திலிருந்து தென்மேற்கில் 120 மைலில் காவேரி தீரத்திலுள்ள இவ்வுலகப்பிரஸித்த க்ஷேத்திரத்தின் ஒவ்வொரு விவரமும் மான்மியமும் எல்லோருக்குந் தெரிந்ததே. இத்தேவஸ்தானம் இவ்விந்தியாவின் தேவஸ்தானங்களெல்லாவற்றுள்ளும் பெரிது. அதாவது நீளத்தில் ஒருமைலும், அகலத்திலும் அதே அளவுமுள்ளது. மார்கழிமாதத்தில் நடக்கும் வைகுண்ட ஏகாதசி உற்சவம் மிகப்பிரபலமானது.

இதற்கு அரைமைலிலுள்ள அப்புலிங்கமாகிய ஜம்புகேஸ்வரத்தையும், மூன்றுமைலில் மலையின்பேரிலுள்ள தாயுமானவரையும் தரிசிக்கத் தவறக்கூடாத மாண்புடையவை.

சிதம்பரத்திலிருந்து ஸ்ரீரங்கம்வரும் ரெயில்வேமார்க்க மத்தியில் சீர்காழி, வைத்தீஸ்வரன்கோயில், மாயூரம், மத்தியார்ச்சுனம், கும்பகோணம் திருவையாறென்னும் ஸ்ரீ பஞ்சனதமாகிய திவ்யக்ஷேத்திரங்களும், ஷ பிரதேசத்திலுள்ள திருவண்ணாமலை, திருவாரூர், ஆவுடையார்கோவில் முதலிய அநேக திவ்யக்ஷேத்திரங்களும் விளங்காநிற்கின்றன.

இனி ஸ்ரீரங்கத்தைவிட்டால் மதுரையே; மதுரையினின்றும் பூபிரதக்ஷிணமஹாயாத்திரை ஆரம்பம்செய்த இராமேஸ்வரம் ஸ்ரீ இராமநாதசுவாமிக்கு ஸ்ரீ காசி கங்கையை அபிஷேகாதிகள் செய்து, ஸேதுமாதவரது அநுக்ரஹமும் ஆசீர்வாதமும்பெற்று, இராமேஸ்வர தீர்த்தங்களுடன் தத்தமில்லத்துக்கு முறைப்படி யேகி ஸ்ரீ ஸேதுமாதவ, காலபைரவ, கங்கா சமாராதனைகள்செய்து, வேதமோதிய அந்தணரது மஹதாசீர்வாதங்களை இனிதிற்பெற்று, அஷ்டைஸ்வரிய போகபாக்கியங்களுடனும் புத்திரமித்திராதிகளுடனும், பெருங்கீர்த்தியுடனும் அரோகதிடகாத்திர தீர்க்காயுளுடன் இனிது வாழ்வாராக.

பொருவில்கடவுணிலங்க டம்மிற் புகலுங் குருக்கேத்திரஞ் சிறந்த
துரைசா னேம்மிசாரணிய மதனிற்சிறந்த தொலிக்குநெடுந்
திரைசேர் பிரயாகை யாங்கதனிற் சிறந்ததனிற் றெய்வநன்னீர்க்
கரைசேர் கங்கை சூழ்கிடந்த காசிப்பதியே சிறந்தனவால்.

இன்னநற்காதை கேட்டவர்துறக்கத்தெய்துவ ரெனவெடுத்தியம்பிக் [வன்
கன்னலிற்பழுத்தகனி மொழித்துவர் வாய்க்கதிர் முலைக்குறக்கொடிகணை
றென்னவன்மகிழச்செழுந்தமிழ்க்கவிதை பொழிதருந்தென்வரைமுனிவன்
மன்னிய முத்திசேர் ஞானமு நல்குமென வகுத்தினிதுரைத்தனமாதோ.

பூபிரதக்ஷிண யதோக்த பாரத நவகண்ட யாத்ராக்ரமம்.

சம்பூரணம்.

ஓம்சுபம்.



## மேல, கீழ, மத்திய இருப்புபாதைகள்.

பீடிகை:—ஜாஸ்தியைக்கருதி, உள்ளதையுமிழந்து போகும் (அதிக ஆசை அதிக நஷ்டம்) பேதையர்களைப் பஞ்ச பூதங்களும் பரிகசிக்கின்றன வாதலான், முன் அத்தியாயப்படி யதோக்த பூபிரதக்ஷிண யாத்திரை செய்யக்கூடிய தமது வல்லமையைத் தெரிந்துகொண்டு, எவ்வளவும் காலம் போக்காது இரண்டிலொன்றைக் கடைப்பிடித்துய்வாராக.



இராமேஸ்வரத்திலிருந்து ஸ்ரீ காசிக்குச் செல்லும் கீழ இருப்புப்பாதையி னிடையேயுள்ள ஸ்டேஷன்கள், மஜிலிகள், பிரயாண சௌகரியங்கள் வண்டி வரும் கால நிர்ணயங்களையும் பற்றியது.

| நெ. | ஸ்டேஷன்களின் பெயர். | ஸ்ரீ காசிக்கு மைல். | நெ. | ஸ்டேஷன்களின் பெயர். | ஸ்ரீ காசிக்கு மைல். |
|---|---|---|---|---|---|
| 1 | தனுஷ்கோடி | 1817 | 24 | கொடைக்கானல் ரோட் | 1678 |
| 2 | இராமேஸ்வரம் | 1806 | 25 | அம்பாத்துறை | 1672 |
| 3 | தங்கச்சிமடம் | 1802 | 26 | திண்டுக்கல் | 1665 |
| 4 | பாம்பன் | 1799 | 27 | தாமரைப்பாடி | 1660 |
| 5 | மண்டபம் | 1795 | 28 | வடமதுரை | 1655 |
| 6 | உச்சிப்புளி | 1785 | 29 | அய்யலூர் | 1650 |
| 7 | வல்ந்தரவாய் | 1778 | 30 | கல்பட்டிசத்திரம் | 1644 |
| 8 | இராமநாதபுரம் | 1773 | 31 | வையம்பட்டி | 1639 |
| 9 | சத்திரக்குடி | 1763 | 32 | மணப்பாறை | 1630 |
| 10 | பாண்டிகண்மாய் | 1757 | 33 | சமுத்திரம் | 1625 |
| 11 | பரமக்குடி | 1751 | 34 | தென்கொளத்தூர் | 1619 |
| 12 | பார்த்திபனூர் | 1742 | 35 | புங்குடி | 1614 |
| 13 | மானமதுரை | 1736 | 36 | திருச்சி ஜங்ஷன். | 1607 |
| 14 | முத்தநந்தல் | 1730 | 37 | மஞ்சத்திடல் | 1604 |
| 15 | திருப்பாச்சேத்தி | 1724 | 38 | திருவெறும்பூர் | 1601 |
| 16 | திருப்புவனம் | 1717 | 39 | சோளகம்பட்டி | 1595 |
| 17 | சிலைமன் | 1712 | 40 | பூதலூர் | 1587 |
| 18 | கீழ்மதுரை | 1706 | 41 | ஆலக்குடி | 1582 |
| 19 | மதுரை ஜங்ஷன். | 1703 | 42 | தஞ்சாவூர் ஜங்ஷன். | 1576 |
| 20 | மதுரைபாலம் | 1703 | 43 | வடவார் | 1573 |
| 21 | சமயநல்லூர் | 1696 | 44 | திட்டை | 1570 |
| 22 | சோளவந்தான் | 1690 | 45 | பசுபதிகோயில் | 1568 |
| 23 | வாடிப்பட்டி | 1686 | 46 | ஐயம்பேட்டை | 1566 |

| நெ. | ஸ்டேஷன்களின் பெயர். | ஸ்ரீ காசியிலிருந்து மைல். | நெ. | ஸ்டேஷன்களின் பெயர். | ஸ்ரீ காசியிலிருந்து மைல். |
|---|---|---|---|---|---|
| 47 | பண்டாரவாடை | 1564 | 86 | பாக்கம் | 1417 |
| 48 | பாபநாசம் | 1561 | 87 | மதுராந்தகம் | 1413 |
| 49 | சுந்தரப்பெருமாள்கோயி | 1558 | 88 | கருங்குழி | 1411 |
| 50 | கும்பகோணம் [ல் | 1555 | 89 | பாடாலம் | 1405 |
| 51 | திருநாகேசுரம் | 1553 | 90 | ஒட்டிவாக்கம் | 1403 |
| 52 | திருவிடைமருதூர் | 1550 | 91 | செங்கல்பட் ஜங்ஷன் | 1397 |
| 53 | ஆடுதுறை | 1548 | 92 | சிங்கப்பெருமாள் கோவி | 1392 |
| 54 | நரசிங்கம்பேட்டை | 1545 | 93 | கட்டுப்பாக்கம் [ல் | 1389 |
| 55 | குத்தாலம் | 1541 | 94 | கூடுவாஞ்சேரி | 1385 |
| 56 | மல்லியம் | 1539 | 95 | வண்டலூர் | 1382 |
| 57 | மாயவரம் ஜங்ஷன் | 1536 | 96 | தம்பரம | 1378 |
| 58 | ஆனைதாண்டவபுரம் | 1532 | 97 | பல்லாவரம் | 1374 |
| 59 | வைத்தீஸ்வரன்கோயில் | 1527 | 98 | மீனம்பாக்கம் | 1373 |
| 60 | சீயாழி | 1523 | 99 | ஸெண்ட்தாமஸ்மவுண்ட் | 1371 |
| 61 | அரசூர் | 1522 | 100 | கயிண்டி | 1370 |
| 62 | கொள்ளிடம் | 1517 | 101 | சைதாபேட்டை | 1368 |
| 63 | சிதம்பரம் | 1513 | 102 | மாம்பழம் | 1367 |
| 64 | கிள்ளே | 1509 | 103 | கோடம்பாக்கம் | 1365 |
| 65 | பரங்கிப்பேட்டை | 1506 | 104 | செட்பெட் | 1363 |
| 66 | புதுசத்திரம் | 1502 | 105 | எழும்பூர் | 1362 |
| 67 | ஆலப்பாக்கம் | 1496 | 106 | பார்க் } மதிராஸ் | 1361 |
| 68 | காபர்சுரங்கம் | 1492 | 107 | கோட்டை | 1361 |
| 69 | கூடலூர் | 1489 | 108 | பீச் | 1360 |
| 70 | திருப்பாப்புலியூர் | 1487 | 109 | மதிறஸ் பேஸன் ப்ரிட்ஜ் | 1358 |
| 71 | வரகல்பட்டு | 1484 | 110 | கொருக்குப்பேட்டை | 1357 |
| 72 | நெல்லிக்குப்பம் | 1481 | 111 | தண்டயார்பேட்டை | 1356 |
| 73 | மேலபட்டம்பாக்கம் | 1478 | 112 | திருவெற்றியூர் | 1353 |
| 74 | பண்ணுருட்டி | 1472 | 113 | எர்ணூர் | 1352 |
| 75 | வரிஞ்சிப்பாக்கம் | 1469 | 114 | என்னூர் | 1349 |
| 76 | சேர்ந்தனூர் | 1465 | 115 | மீஞ்சூர் | 1345 |
| 77 | விழுப்புரம் சேர்க்கை. | 1460 | 116 | பொன்னேரி | 1337 |
| 78 | முண்டியம்பாக்கம் | 1457 | 117 | கவரப்பேட்டை | 1333 |
| 79 | விக்கிரவாண்டி | 1452 | 118 | கும்முடிபூண்டி | 1329 |
| 80 | பேரணி | 1449 | 119 | எலவூர் | 1326 |
| 81 | மைலம் | 1443 | 120 | ஆரம்பாக்கம் | 1320 |
| 82 | திண்டிவனம் | 1437 | 121 | தட | 1315 |
| 83 | ஒலக்கூர் | 1431 | 122 | சல்லூருபேட்டா | 1308 |
| 84 | பெரும்பயர் | 1425 | 123 | போலிரெட்டிப்பாளையம் | 1305 |
| 85 | அச்சரபாக்கம் | 1421 | 124 | தொரவாரிசத்திரம் | 1298 |

| ரெ. | ஸ்டேஷன்களின்பெயர். | ஸ்ரீகாகுளமிலிரு ந்து மைல். | ரெ. | ஸ்டேஷன்களின் பெயர். | ஸ்ரீகாகுளமிலிரு ந்து மைல். |
|---|---|---|---|---|---|
| 125 | நாயுடுபேட்டா | 1291 | 164 | பவர்பேடா | 1056 |
| 126 | பெத்தபாரியா | 1283 | 165 | எல்லூர் | 1055 |
| 127 | கூடூர் ஜங்ஷன் | 1274 | 166 | பீமடோல் | 1043 |
| 128 | மனுபோலு | 1268 | 167 | புல்லா | 1039 |
| 129 | வெங்கடாசலம் | 1260 | 168 | சிப்ரல் | 1034 |
| 130 | நெல்லூர் | 1250 | 169 | பாதம்பூடி | 1029 |
| 131 | படுகுபாடு | 1247 | 170 | தாடபல்லிகூடம் | 1025 |
| 132 | கொடவலூரு | 1243 | 171 | நவாப்பாளையம் | 1020 |
| 133 | தலமஞ்சி | 1240 | 172 | நிடதவோலு | 1013 |
| 134 | அல்லூருரோட் | 1233 | 173 | சாகல்லு | 1009 |
| 135 | பிட்ரகுண்டா | 1229 | 174 | கொவ்வூரு | 1004 |
| 136 | காவலி | 1218 | 175 | கோதாவரி | 1001 |
| 137 | தெட்டு | 1210 | 176 | ராஜமஹேந்திரம் | 999 |
| 138 | உலவப்பாடு | 1201 | 177 | கடியம் | 993 |
| 139 | சிங்காராயகொண்ட | 1195 | 178 | த்வாரபூடி | 986 |
| 140 | டங்கடூரு | 1189 | 179 | அனபார்தி | 984 |
| 141 | சூரரெட்டிப்பாளயம் | 1184 | 180 | பிக்கவொல் | 978 |
| 142 | வங்கோல் | 1178 | 181 | மேடபாடு | 973 |
| 143 | கரவர்டி | 1172 | 182 | சாமல்கோட் ஜங்ஷன் | 968 |
| 144 | அம்மனப்ரோலு | 1169 | 183 | பீடாபுரம் | 960 |
| 145 | உப்புகுண்டூர் | 1160 | 184 | கொல்லப்ரோலு | 957 |
| 146 | சின்னகஞ்சம் | 1162 | 185 | தூர்க்காடா | 949 |
| 147 | வேட்டபாளேயம் | 1157 | 186 | கோட்டபள்ளி | 945 |
| 148 | சீரள | 1145 | 187 | தூனி | 934 |
| 149 | பாபட்லா | 1138 | 188 | குல்லிபாடு | 928 |
| 150 | அப்பிகட்ல | 1132 | 189 | நரசபட்ணம்ரோட் | 921 |
| 151 | பொன்னூரு | 1125 | 190 | யெல்லமஞ்சிலி | 910 |
| 152 | சண்டூரு | 1119 | 191 | பய்யாவரம் | 901 |
| 153 | தெனலி | 1111 | 192 | காசிம்கோடா | 896 |
| 154 | கொலக்கலூரு | 1107 | 193 | அனகபல்லி | 895 |
| 155 | டுகி ரள | 1105 | 194 | துவ்வாடா | 885 |
| 156 | பெத்தவட்லபூடி | 1099 | 195 | வால்டேர் ஜங்ஷன் | 875 |
| 157 | கிருஷ்ணாகால்வாய் | 1096 | 196 | ஸிம்ஹாசலம் | 870 |
| 158 | பெஜவாடா ஜங்ஷன் | 1092 | 197 | பெண்ட்ருட்டி | 863 |
| 159 | முஸ்டபாடா | 1084 | 198 | கோட்டவலஸ | 858 |
| 160 | கன்னவரம் | 1079 | 199 | அலமண்ட | 848 |
| 161 | அம்பாபுரம் | 1073 | 200 | விஜயநகரம் | 837 |
| 162 | நூஜ்விட் | 1066 | 201 | நெல்லிமர்லா | 829 |
| 163 | வட்லூர் | 1060 | 202 | கஜ்ஜங்கிவலச | 824 |

| நெ. | ஸ்டேஷன்கள். | ஸ்ரீ காகுளியிலி ருந்து மைல் | நெ. | ஸ்டேஷன்கள். | ஸ்ரீ காகுளியிலி ருந்து மைல் |
|---|---|---|---|---|---|
| 203 | கரிவிடி | 821 | 242 | பைய்ரீ | 565 |
| 204 | சிபுருபல்லெ | 818 | 243 | தன்மண்டல் | 559 |
| 205 | ஷிகடாம் | 810 | 244 | ஹரிடாஸ்பூர் | 555 |
| 206 | பாண்டுரு | 803 | 245 | ஜெஜுபூர் | 546 |
| 207 | தூசி | 798 | 246 | வியாஸ்ஸரோவர் | 536 |
| 208 | ஸ்ரீகாகுளம்ரோட் | 794 | 247 | பைதரணிரோட் | 529 |
| 209 | உர்லாம் | 788 | 248 | கெண்டுவெபடா | 519 |
| 210 | திலாரு | 782 | 249 | பாதரக் | 509 |
| 211 | கோட்டபொம்மலி | 774 | 250 | மார்கோணு | 500 |
| 212 | நௌபட் ஜங்ஷன் | 765 | 251 | ஸோரோ | 491 |
| 213 | பூண்டி | 756 | 252 | கண்டாபாரா | 480 |
| 214 | பலாசா | 749 | 253 | பலாஸோர் | 471 |
| 215 | மந்தாஸாரோட் | 740 | 254 | நுப்ஸா ஜங்ஷன் | 460 |
| 216 | பாருவா | 735 | 255 | பஸ்டா | 453 |
| 217 | சோம்பேட | 729 | 256 | அமர்டாரோட் | 450 |
| 218 | ஜடுபூடு | 725 | 257 | ஜெல்லாஸோர் | 442 |
| 219 | இச்சாபுரம் | 718 | 258 | டன்த்டன் | 431 |
| 220 | கொலன்த்ரா | 709 | 259 | நெகுர்ஸெனி | 426 |
| 221 | பர்ஹம்பூர் | 703 | 260 | கன்டெய்ரோட் | 422 |
| 222 | ஜகந்நாதபுரம் | 697 | 261 | நாராயண்கர் | 414 |
| 223 | சத்ரபுரம் | 689 | 262 | பெஜுபூர் | 407 |
| 224 | கஞ்சம் | 684 | 263 | கர்க்பூர் ஜங்ஷன் | 400 |
| 225 | ஹூம்ம | 680 | 264 | கோகுல்பூர் | 396 |
| 226 | ரம்ப | 673 | 265 | மிட்நாபூர் | 392 |
| 227 | கல்லிக்கோட்டா | 666 | 266 | கோடபீஸல் | 384 |
| 228 | பலுகான் | 655 | 267 | ஸால்போனி | 378 |
| 229 | ப்ராண்டெய்பூர் | 650 | 268 | சன்ட்ரகோணுரோட் | 371 |
| 230 | குஷ்றி | 642 | 269 | கார்பெட்டா | 361 |
| 231 | கலுபராகாட் | 638 | 270 | பியர்டோபா | 355 |
| 232 | பூஸண்ட்பூர் | 632 | 271 | விஷ்ணுபூர் | 348 |
| 233 | கிரகர்பூர் | 627 | 272 | ராம்ஸாகர் | 345 |
| 234 | டாபங்க் | 622 | 273 | ஒண்டக்ரா | 339 |
| 235 | சட்டிப்பூர் | 617 | 274 | பங்கூரா | 329 |
| 236 | கூர்டாறேட் ஜங்ஷன் | 611 | 275 | ச்சட்னா | 321 |
| 237 | புவனேஸ்வர் | 599 | 276 | ஜன்டிபாரி | 315 |
| 238 | பாரங்க் | 589 | 277 | இண்ட்ரபில் | 305 |
| 239 | கட்டாக் | 581 | 278 | ஆட்ரா ஜங்ஷன் | 297 |
| 240 | ஜகட்பூர் | 578 | 279 | கார்கலி | 287 |
| 241 | கபிலாஸ்ரோட் | 572 | 280 | போஜூடி | 278 |

| நெ. | ஸ்டேஷன்கள். | ஸ்ரீ காசியிலி ருந்து மைல். | நெ. | ஸ்டேஷன்கள். | ஸ்ரீ காசியிலி ருந்து மைல். |
|---|---|---|---|---|---|
| 281 | பாகா | 271 | 303 | கயா ஜங்ஷன் | 137 |
| 282 | பார்பட் | 267 | 304 | பறெய்யா | 127 |
| 283 | மால்கேரா | 262 | 305 | இஸ்மெய்ல்பூர் | 118 |
| 284 | மொஹூடா | 255 | 306 | ரபிகஞ்ஜ் | 113 |
| 285 | கனூடி | 249 | 307 | ஜகிம் | 106 |
| 286 | கோமா ஜங்ஷன் | 242 | 308 | பீஸர் | 99 |
| 287 | கிமியாகாட் | 236 | 309 | பால்மர்கஞ்ஜ் | 94 |
| 288 | இஸ்றி | 231 | 310 | ஸோணபத்திராநதி | 87 |
| 289 | சௌதரிபாண்ட் | 225 | 311 | டேஹ்ரீ ஆன்ஸோன் | 84 |
| 290 | சிசாகி | 220 | 312 | க்கர்வண்ட்யா | 77 |
| 291 | ஹஜாரிபாக்ரோட் | 214 | 313 | ஸஸாரம் | 73 |
| 292 | சோபே | 207 | 314 | ஷியூஸாகர்ரோட் | 64 |
| 293 | பராஸபாட் | 200 | 315 | குட்ரா | 57 |
| 294 | ஸர்மடண்ட் | 195 | 316 | புஸௌலீ | 51 |
| 295 | ஹிரோடி | 190 | 317 | பாப்டோவாரோட் | 43 |
| 296 | சொதர்மா | 184 | 318 | தர்கௌடி | 37 |
| 297 | குஜண்டி | 178 | 319 | கர்மநாஸ | 30 |
| 298 | குர்பா | 164 | 320 | ஸையெட்ரஜா | 25 |
| 299 | பஹர்பூர் | 157 | 321 | மாஜ்வர் | 20 |
| 300 | டன்குப்பா | 149 | 322 | மோகல்ஸேராயி ஜங்ஷன் | 7 |
| 301 | பண்டுவா | 144 | 323 | ஸ்ரீ காசி அல்லது பெனரீஸ்சிடி ஸ்டேஷன். | |
| 302 | மான்பூர் | 140 | | | |

மேற்கூறிய கீழ மார்க்கமானது கீழ சமுத்திரக்கரையோரமாய் 223 நெ. சத்ரபுரம் வரையில் தெலுங்கு தேசத்திலும், அங்கிருந்து ஒஷ்டரம், பங்காள தேசங்களிலும், கடைசியாக ஸ்ரீகாசியுள்ளவடமேற்கு மாகாணத்திலும் செல்லுகிறது; இந்த மார்க்கத்தில்தனுஷ்கோடியிலிருந்துகாசிக்கு மூன்றாவதுவகுப்பு மெயில்ரயில் சார்ஜ் ரூ 21—14—0 ஆகிறது கல்கத்தாவழியாய்ச் சென்றால் 22—7—0 வித்தியாசம் அணா 9 தான், நேராய்கல்கத்தா வழியாய்ப் போவதில், குழந்தை குட்டிகளையும் மூட்டை முடிச்சுகளையும் பாஷை தெரியாத தேசத்தின் ரெயில்வே ஜங்ஷன்களில் இரவு பகலில்லாமல் ஏற்றி இறக்கியும், காத்திருந்து கஷ்டப்படவேண்டிய அவசியமில்லை; நேராய்க் காசிக்குப் போகிறவர்கள் சென்னப் பட்டணத்திலிருந்து நபர் 1-க்கு கல்கத்தா மார்க்கமாய் ரெயில் சார்ஜ் ரூ 17—5—0, சென்னப்பட்டணத்திலிருந்து கல்கத்தாவுக்குப் போகிற மெயில், சாயரக்ஷை 6 மணிக்குப் புறப்பட்டு மறுநாளில்லை, அடுத்தநாள் காலை 10 மணிக்கு கல்கத்தாவுக்கு அதாவது 40மணி தேசகாலத்தில் (24மணி

=1நாள்) போகிறது. அவிடமிறங்கி ஸ்நாநபானம் சமையல் சாப்பாடு முதலியவைகளைச் சாவகாசமாய்ச் செய்துகொண்டு (ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் தர்மசாலை சமயல்செய்து சாப்பிட விடமிருக்கிறது) கல்கத்தா நம்மிந்தியா தேசத்தின் பிரதான நகரமானபடியாலும் அவிடத்தில் ஹிந்துஸ்தானி பங்காளி பாஷையானபடியாலும் விசாரிப்பது கொஞ்சம் சிரமமாய்த்தோன்றும். இங்கிலீஷ் கற்றறிந்தோர் அவிடம், இவிடத்தைப் பார்க்கிலும் அதிகம்; கல்கத்தாவிலிருந்து காசிக்குப் புறப்படுகிற வண்டி, இராத்திரி ஒன்பது மணிக்குப் புறப்படுகிறபடியால், இந்த்ரலோகத்துக்குச் சமானமான இப்பட்டணத்தின் முக்கியமான இடங்களை (இந்நகரின் விவரங்களைப்பற்றி மற்றோரிடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது) யும் பார்த்துக்கொண்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு எட்டரை மணிக்கு மேற்படாமல் வந்துவிடவேண்டும் கல்கத்தாவில் இரவு ஒன்பதரை மணிக்கேறி காசிக்கு மறுநாள் காலை $9\frac{1}{2}$ மணிக்குப்போய் விடுகிறது; ஆகவே சென்னையிலிருந்து சௌகரியமாய் நான்காம்நாள் போய்விடுகிறது; ஆனால் ரயிலில் உட்கார்ந்து பிரயாணம் செய்யும் மொத்தநேரம் $40+12=52$ மணி தேசகாலந்தான், இந்தக்கால வேற்பாடு மாறினாலும் இதைக்கொண்டு கணித்துக் கொள்ளலாம். ஷை ரயில்வேஸ்டேஷன் அட்டவணைப்படி செல்ல கார்ப்பூர் ஜங்ஷனிலும் கோமா ஜங்ஷனிலும் இறங்கி ஏறவேண்டும்; பாஷை தெரியாதவும் அகாலத்தில் செல்லும்படியானவும் இந்த இரண்டு ஜங்ஷனகளிலும் யாத்திரைவாஸிகள் ஷை ஒன்பதரை சாதகத்துக்காக உட்படவேண்டிய அசௌகரியங்கள் ஜாஸ்தி, தவிரவும் கார்ப்பூர், கோமாஸ்டேஷன்களில் திருடர்கள் ஜாஸ்தி, ஆனாலும் ரெயில்வே கம்பெனியார் கூடியவளவு பந்தோபஸ்தும் சௌகரியமும் செய்திருக்கிறார்கள், ஆகையால் நம் திராவிட தேசவாசிகள் கார்ப்பூரி லிறங்காமல் நேராய் கல்கத்தா மார்க்கமாய்க் காசிக்குச் செல்லுவதே மிகவும்நல்லது; அநேக ரிதை அறியாமல் கோமாமார்க்கஞ் சென்று வருந்துகிறார்கள். இறங்கக்கூடிய மஜிலிகள்:—சென்னப்பட்டணம் வரையில், நம் திராவிட தேசவாஸிகளுக்கு இங்கெடுத்துச் சொல்லவேண்டிய தனுவசியம், மதிராஸிலிருந்து மாலை 6 மணிக்குப் புறப்பட்டு கிருஷ்ணா (தீர்த்தவிசேஷம்) தீரமாகிய பெஜவாடாவுக்குக் காலை $4\frac{1}{2}$ மணிக்கும், கோதாவரி தீர்த்தமாகிய இராஜமஹேந்திரத்துக்குக் காலை $8\frac{1}{2}$-மணிக்கும் போகிறது. மறுநாட் காலை, நேற்றுக் காலை $8\frac{1}{2}$-மணி மெயிலிலேயே ஏறி இராத்திரி $7\frac{1}{2}$ மணிக்கு பர்ஹம்பூரிலிறங்கலாம். ஸ்டேஷனுக்கு $\frac{1}{2}$ பர்லாங்கு தூரத்தில் முன் ராஜமகேந்திரத்தில் நாளம்வாரி சத்திரத்துக்கொப்பான தர்மான்ன சத்திரமிருக்கிறது. எல்லாச்சா

தியாருக்கும் இலைபோட்டு அன்னமளிக்கிறார்கள். சமையல்செய்துகொள்ளவும்மிக சௌகரியமே. ஸ்டேஷனிலிருந்து பேட்டையென்கிற டவுன் இரண்டு மைலிருக்கிறது. பட்டு நெசவுக்குப் பேர்போனது, திராவிடதேசத்தோர் வெகுபேர் இப்பட்டிணத்தில் பெரிய உத்தியோகஸ்தராயிருக்கிறார்கள். பேட்டைக்குள்ளும் அநேக தர்மான்ன சத்திரங்கள் முதலியவையிருக்கின்றன. இந்த ஊருக்கு வடக்கே நம்மதேசத்தவர்கள் காணப்படமாட்டார்கள். பாஷையும் ஒட்டிரம்—வங்காளி. மறுநாள் இராத்திரி $7\frac{1}{2}$ மணிக்கு இறங்கின அதே ரயிலிலேறி கல்கத்தாவுக்குக் காலை $9\frac{1}{2}$ மணிக்குப் போய்விடுகிறது. இந்த மஜிலிகளே போதுமானாலும் மற்ற வைகளையும் எழுதுகிறேன்.

இந்தக் கீழ மார்க்கத்திலுள்ள முதலாவது ஜங்ஷன் கூடூர், இவிடத்தில திருப்பதி, காளாஸ்தி முதலிய விடங்களிலிருந்து வரும் இருப்புப்பாதை வந்து சந்திக்கிறது. இவிடத்தில் ஒரு லோகல்பண்டு சத்திரமும் ஆஸ்பத்திரியு மிருக்கிறது. 2-வது ஜங்ஷன் இயற்கனவே சொன்ன பெஜவாடா, இவிடமிருந்து ஹைதராபாத், குண்டக்கல், மசுலிபட்டணம் இவைகளுக்கு தனித்தனி லயன் போகிறது. வால்டேர், இவிடத்தில் மதுராஸ் தக்ஷிணமராடா ரெயில்வே முடிந்துவிடுகிறது. இவிடமிருந்து கல்கத்தாவரையில் பெங்கால் நாக்பூர் ரெயில்வே, கல்கத்தாவிலிருந்து ஈஸ்ட் இண்டியன் ரயில்வே, மொகல்சிரே ஜங்ஷனில் ஸ்ரீ காசிக்குச் செல்லும ஔட் அண்ட் ரோகில்கண்ட் ரெயில்வே ஆரம்பம். 3-வது சாமல்கோட் ஜங்ஷன், இவிடமிருந்து காகிநாடா என்னும் துறைமுகப் பட்டணத்துக்குச் செல்லுகிறது. 4-வது நௌபடா ஜங்ஷனிலிருந்து பர்லகிமிடி ஜமீன் பட்டணத்துக்குச் செல்லுகிறது. ஷை சாமல்கோட் ஜங்ஷனில் ஸ்டேஷனுக்கு ஒரு பர்லாங்குக்குள் வெகுவசதியான தர்மான்ன சத்திரமிருக்கிறது. இந்தப் பககத்தி லெல்லாம் சத்திர மென்றால் பிராமணனுக்கு மாத்திரமல்ல. எல்லாச்சாதியாருக்கும் சமமான படி நடக்குமென்க. ஷை வால்டேரிலிருந்து விசாகப்பட்டணம் 2 மைல், மஜிலிசெய்யப் பிரியமுள்ளவர்கள் இவிடத்துக்குச் சென்றால் சௌகரியம். ஸ்டேஷனிலேயே தர்மான்ன சத்திரமிருக்கிறது. பட்டணம் நீர்த்தாழ்ந்த நம் சோழதேசத்தை ஒத்திருக்கும். வெகுபேர் நந்தேசத்தா ருத்தியோகத்தி லிருக்கின்றார்கள்.

5-வது கூர்டாரோட் ஜங்ஷனிலிருந்து ஸ்ரீ ஜகந்நாதத்துக்குச் செல்லுகிறது, சார்ஜ் ஆறணாதான். இந்த ஜங்ஷனில் பாஷை ஒட்டிரம், எல்லாம் புதுமையாகக் காணப்படும். ஸ்டேஷனில் தங்க இடமிருக்கிறது, ஜாக்கிரதையா யிருக்கவேண்டும.

6-வது கார்க்பூர் ஜங்ஷன், இவிடமிருந்து ஒருகிளை லயன் பிரிந்து ஆட்ரா—கோமா ஜங்ஷன்கள் வழியாய் கயாவுக்கும் அங்கிருந்து காசிக்கும் செல்லுகிறது. பாஷை தெரியாத இக்கிளைப்பாதையில் செல்லும்போது ஷை ஜங்ஷனில் இறங்குவோர்கள் சிரமப்படுவார்கள். கார்க்பூர் ஜங்ஷன் மிகவும் நவீன இயந்திர ஏற்பாடுகளமையப்பெற்ற பெரிய ஸ்டேஷன். இதின் வேலைக்காரர்களால் ஆக்கிரமிக்கப்பட்ட ஒரு பட்டணமாயிருக்கிறது. ஸ்டேஷனில் விஸ்தாரமான தர்மசாலை யிருந்தாலும் பிரயாணிகள் வெகு ஜாஸ்தி, பாஷையும் தெரியாததால் நிர்ப்பந்தம் அதிகமாய்த் தோன்றும். ஜாதி வித்யாசம் பார்க்க முடியாது. தண்ணீர் பைப்புகளால் ஜல கஷ்டம் தோன்றுது.





ஷை கார்க்பூரிலிருந்து கல்கத்தா 72மைல், இவிடமிருந்து கல்கத்தாவுக்கு இரவு பகல் இடைவெளியின்றி அரைமணிக்கு ஒரு லோகல்வண்டி போய்க் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு வண்டியிலும் இஞ்சின் இழுக்கமுடியாத வண்டிகள் சேர்க்கப்பட்டும், வண்டிக்குள்ளோ ஜனங்களுக்கு நிற்பதற்குக்கூட இடமில்லாமலுமிருக்கும். இந்தக் கூட்டத்திலேயே இவிடமிருந்து கல்கத்தாநகரம்(நகரத்துக்குரிய நிர்ப்பந்தங்கள்)ஆரம்பமாய்விட்டதென்று சொல்லலாம். இந்தப்ரதேசம் நம் சோழநாட்டைப்பார்க்கிலும் பதின்மடங்கு அதிக செழிப்புள்ளது. மரங்கள் முதலிய மனிதருள்பட ஜீவராசிகளின் வளர்ச்சி சற்றுகம்மியாயிருந்தாலும் அவைகளின் செழிப்பத்தையும் பலனையும் மனிதஜாதியாரின் யுக்தி புத்தி-பலம்-தைரியம் முதலியவைகளையும் வியக்கத்தக்கதாயிருக்கின்றது. நம்முடைய சோழதேசந்தான் மேலானதென்றிருந்தேன். உதாரணமாக ஒரு இளநீர்சாதாரணமாய் ஒரு சிறிய பூசனிக்காயளவும், வயலிலிருக்கும் நெல்தாள்கள் ஒரு மனிதனுயரமும், ஒற்றைத்தாளின் பருமன் கட்டைவிரல் பருமனும், இதைப் போலவே மற்றெல்லாவற்றையும் ஊகித்துக்கொள்ளுங்கள், ஆ என்ன! தென்னை, மா, பலா, வாழை, கமுகு, முதலியவைகளின் செழுமை!! கல்கத்தாவிலிருந்து சமுத்திரம் 80

மைல் தூரத்திலிருந்தாலும் கங்காநதியால் சேர்க்கப்பட்டிருப்ப தால் அந்நதியில் ஊசிகுத்த இடமில்லாமல் ஸ்டீமர்கள், கப்பல் கள், படகுகள், ஓடைகள் முதலியவை வியாபார நிமித்தமாக ஓடிக்கொண்டிருக்கும். டவுனுக்குள் எங்கேபார்த்தாலும் டிராம் வே, றெயில்வே முதலியவைகளும், ஒவ்வொரு கடை, கோடிநூ விலை மதிப்புள்ளவைகளும், இப்படி இதைப்பற்றிவர்ணிக்க இவி டமிடமின்று; சுருக்கமாய் தேவேந்திர ராஜதானியாகிய தேவ லோகத்தின் அமராவதிக்கொப்பாகச் சொல்லலாமே யொழிய இப்பூவுலகினிதற்கு நிகர் இன்றென்பது நிச்சயம். இம்மாநகரில் முக்கியமாய்ப்பார்க்க வேண்டியவைகள் கவர்ண்மெண்ட்ஹவுஸ், போர்ட்வில்லியம், ஸ்ட்ராண்ட்ரோட்டிலுள்ள தங்கசாலை, ஷிப்பூ ரிலுள்ள தாவர சாஸ்திர தோட்டங்கள், அலிப்பூரிலுள்ள பூமிப் பிரகிருதி சாஸ்திர நீரோட்டங்கள், சர்க்கியுலர் ரோட்டிலுள்ள ஜெனரல் ஆஸ்பத்திரி, இந்தியன் பலபொருட் கண்காக்ஷி சாலை, சுப்ரீம் கோர்ட் ஹவுஸ் கட்டிடங்கள், எதை விடுகிறது! எதை எழுதுகிறது!! ரெயில்ஸ்டேஷன் கட்டிடத்தைப் பார்த்தால், கட்டிடத்தினழகும், ரிப்ரெஷ்மெண்ட் ரூம் வெய்டிங் ரூம்களி லுள்ள இந்திராணிகளுக்குச் சமானமான சுதேச பங்காளிஸ்தி ரீகளேயும், ரெயில்வே பிளாட்பாரங்கள் 48 லும் நிற்கும் போ கும், வண்டித்தொடர்களின் ஜெகஜ்ஜோதியையும் ஆ! இரவில் எலக்ட்ரிக் லைட்களேற்றியிருக்கும்போது பார்க்காதகண்ணும் ஜன்மமும் இருந்தென்ன போயென்ன! 90 சதுரமைல் விஸ்தீர ணமுள்ள இந்நகரில் எங்கேபோனாலும் நிற்பதற்குக்கூட இட மில்லாமல் ஜனங்களிருந்தாலும் பட்டணத்தைச் சுத்தமாய்ப் பாதுகாத்துவரும் மியுனிஸிபாலிட்டியாரின் திறமை மிகவும் வியக்கத்தக்கது. எவ்வளவோ ஜாக்கிரதையாய் போலீஸ் முத லிய பந்தோபஸ்துகள் செய்திருந்தாலும்வண்டிகளிடையிலகப் பட்டு உயிர்கள் சேதமடையாத நாளில்லை. தனவந்தர்களைத் தவிர மற்றெவரும் சுத்தமான வெள்ளை வஸ்திரத்தைத் தரிக்கமுடி யாது. ஏன்! இந்நகரின் பற்பல புகையந்திரங்களினால் ரோட்டு களின்கீழ் மண்ணும் கறுப்பாயிருக்கிறது, ஜோடில்லாமல் நடக் கக்கூடாது.

இந்தக்கீழ மார்க்கத்தில் மேலேசொல்லப்பட்டிருக்கிற சரி யான மஜிலிகளைத்தவிர அடியிற்கண்ட பிறவற்றையும் கூறுகின் றோம். இஷ்டமானவர்கள் சௌகுரியப்படி நடந்து கொள்வத ற்கு:—சென்னையிலிருந்துகாசிக்கு ஒரேடிக்கெட்டாய்வாங்கிவிட்டு நூறுமைலுக்கொருமுறை சவுகுரியமான இடத்தில் சமையல் சாப்பாடு, க்ஷேத்திர தீர்த்த வாஸங்கள் செய்து கொண்டு மறு

நாள் இறங்கின அதே மெயில் வண்டித்தொடரில் ஏறிச்செல்லலாம். சென்னையிலிருந்து காசிக்குக்கோமா மார்க்கமாய் 1358 மைல், கல்கத்தா மார்க்கம் 1458 மைலாதலால் முறையே 13-ம் 14 நாளும் டிக்கெட் செல்லும். அதாவது அந்த டயத்துக்குள்ளாக காசிக்குப்போய்ச் சேர்ந்து விடவேண்டும், ஒரே டிக்கெட்டாய் வாங்காமல் மேலே சொல்லியிருக்கிற. 1. இராஜமகேந்திரம், 2 பர்ஹம்பூர். 3. கல்கத்தா இந்த மூன்று மஜிலிகளுக்கும், தனித்தனியாய் வாங்கிச்சென்றாலும் பறவாயில்லை. சார்ஜ் ஜாஸ்தியாகமாட்டாது. இவைகளைப்பற்றிய மற்ற ரூல்ஸ்களை இந்நூலின் 5-வது அத்தியாயத்தால் கண்டுகொள்க.

திருவொற்றியூர் :—ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் சில தர்ம சத்திரங்களிருக்கின்றன. இது ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ஸ்தலம். பங்குனி, சித்திரை மாதங்களில் பிரம்மோற்சவம், இவிடமிருந்து இரண்டு பர்லாங்கு தூரத்திலுள்ள காலடிப்பேட்டை ஸ்ரீ வரதராஜஸ்வாமிக்கு வைகாசிமாதத்தில் பிரம்மோற்சவம். என்னூர், மிஞ்சூரில், ஜாகா முதலியவைகள் கிடைக்கும்.

பொன்னேறி :—விஷ்ணு, சிவ தேவாலயங்களும் சித்திரை மாதத்தில் பிரம்மோற்சவமுமுண்டு. ஜாகாசௌகரியமுண்டு.

கும்மிடிபூண்டி:—மிகவும் சௌகரியமான சத்திரம்.

ஆரம்பாக்கம்:—காளாஹஸ்தி ஜமீன்தாருக்குச்சொந்தமான இக்கிராமத்தில் ஒரு சிறிய சத்திரமுண்டு.

நாயுடுபேட்டை:—இவிடத்தில் சென்னை, காளாஸ்தி, வெங்கிடகிரி முதலிய இடங்களினின்று ரோட்டுகள் வந்து சந்திக்கின்றன. சத்திரமும் ஆஸ்பத்திரியுமிருக்கிறது.

கூடூர்:—லோகல் பண்டு சத்திரமிருக்கிறது.

மனுபோலு, வேங்கிடாஜலம்:—ஜமீன்தாரி கிராமங்கள், சிறிய சத்திரங்களிருக்கின்றன.

நெல்லூர்:—உத்திரபினாகினி தீரத்திலுள்ளது. இதின் பூர்வ நாமம்ஸிம்ஹபுரி, ஸ்டேஷனிலிருந்து டவுன் 1½மைலிருக்கிறது, நாகரீகம்மிகுந்துள்ள பிரிடிஷ்ராஜாங்க இக்காலத்தில் இராமேஸ்வரம்முதல் காசிவரையிலும் இன்னும் இருப்புப்பாதைசெல்லும் எல்லாவிசேஷ விடங்களிலும் வண்டிகள் கூலிக்காரர் எப்போதும்கிடைக்கும்; இதைப்பற்றி ஒவ்வொரு ஸ்டேஷனுக்கும் எழுதவேண்டியதில்லை, ஸ்டேஷனுக்கு 150 கஜதூரத்தில் ஜாகாவுக்குசத்திரமிருக்கிறது. இரவுநேரங்களில் முழுவதும் விளக்கு

கள்முதலியவை போட்டுவெகு பந்தோபஸ்தும் சௌகுரியமுமா யிருக்கிறது. ஊருக்குள் பல கோயில்கள், தர்ம சத்திரங்கள் உண்டு; தமிழ் நாட்டார் இவிடத்தில் வெகுபேர் உத்தியோகத்தி லமர்ந்திருக்கின்றனர். சாயப்புடவைகளுக்குப் பேர்போனது.

பிட்ரகுண்ட:—மலையின்பேரிலுள்ள விஷ்ணு சந்நிதானத் தில் பிரார்த்தனைக்காரர்க ளநேகர் விவாகாதிகளை நடத்துகின்ற னர், தங்கள் வீடுகளில் ஜாதிவழக்கங்களின்படி செலவழிக்க வேண்டிய ஏராளமான பணத்தின் நூறிலொருபங்கை என் சந்நி தானத்தில் செலவழித்தால் போதுமென்று இக்கருணைகடாக்ஷ விஷ்ணுமூர்த்தி அநேக ஜோடிகளைச் சேர்த்து வைக்கின்றனர் தங்குவதற்கு சௌகுரியம்.

காவலி, உலவப்பாடு, சிங்கராயகொண்ட, டங்குடூரு இந் நான்கிலும் சத்திரம் முதலிய ஜாகா சௌகுரியமுண்டு, பின்னை யமூன்றில் சித்திரை வைகாசிமாதங்களில் பிரம்மோற்சவங்க ளோடுகூடின சிவ, விஷ்ணு தேவாலயங்களிருக்கின்றன.

ஓங்கோலென்னும் வங்கவோல்:—இந்த நெல்லூர்ஜில்லாவில் இரண்டாவது முக்கியபட்டணம். காளைமாடுகளுக்குப்பேர் போனது, சவுகுரியமானஜாகாவும் தர்மசத்திரமு முண்டு.

கரவாடி:—ஸ்ரீராமர் கராசுரனைக்கொன்றருளிய இடம்.

சீரள:—நெசவு கைத்தொழிலுள்ள வியாபாரஸ்தலம்.

தேனலி:—வர்த்தகம் ஓங்கிவளர்ந்துவரும் செழுமையான பெரிய ஊர், இது கர்நூல்ஜில்லாவின் முக்கியமானதாலூகா. டிஸ்டிரிக்ட்முன்சிப், தாசில்தார், சப்மேஜிஸ்டிரேட், போலீஸ் இன்ஸ்பெக்டர், சப்ரிஜிஸ்டரார், லோகல்பண்டு ஓவர்ஸீர் முத லிய உத்யோகஸ்தர்களும் தர்மசத்திரமும் இருக்கின்றன, பெ ஜவாடாவைப்பற்றி முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது.

ஏலூர்:—ரத்தின கம்பளங்களுக்குப்பேர்போனது, தர்மான் ன சத்திரமிருக்கிறது.

பீமடோல்:—தர்மசத்திரத்துடன் கூடிய ஒரு பெரிய ஜமீன் தாரிஸ்தலம்.

கோவ்வூரு:—இவிடத்துக்கு கௌதமரிஷியால் முதலில் கோதாவரியைக்கொண்டு வரப்பட்டது—புராணோக்தம்.

கோதாவரி:—இந்த மஜிலியைப்பற்றி பூபிரதக்ஷண யாத்ரா கிரமத்தில் விரிவாய் எழுதியிருப்பதைப்பார்க்க.





பீடாபுரம்:—இது ஒருஜமீன்தாரி, ஸ்டேஷனிலிருந்து 1½ மைலிருக்கிறது, தர்மான்னசத்திரமுண்டு, காயாசுரனுடைய பாதம் இவிடத்தில் முடிந்திருப்பதால் பாதம்=பீடம் ஆனதால் இப்பெயர் காரணமாயிற்று. இக்கயாசுரனுடைய சிரசு ஸ்ரீமத் கயாவிலிருக்கிறது. அவ்வசுரனுடைய நீளம் அதுமுதல் இது வரை, இதுகாரணம்பற்றி இது விஷ்ணுக்ஷேத்திரமாகையால் இதை பாதகயையென்று க்ஷேத்திரவிசேஷம்.

துனி:—ஒருராஜா இருக்குமிடம், காசிம்கோடா, அனகபல்லி—இவ்விரண்டும் ஜமீன்தாரிகள். இம்மூன்றாரிலும் தர்மான்னசத்திரங்கள் ஸ்டேஷனுக்குச் சமீபத்திலிருக்கின்றன.

வால்டேர்:—விசாகப்பட்டணம் ஜில்லாவின் ஹெட்குவார்டர்ஸ்; சமசீதோஷ்ண சௌகுரியமுள்ள பட்டணம். இதற்கு அடுத்த ஸ்டேஷனாகிய ஸிம்ஹாசலம் றெயில்வழியாய் 5-மைலிருக்கிறது; மறுபடி அந்த ஸ்டேஷனிலிருந்து மலையின்பேரில் நரசிம்ஹாவதாரமாக எழுந்தருளியிருக்கும் விஷ்ணுசந்நிதானத்துக்கு 4-மைலிருக்கிறது. இவிடமிருந்தும 4-மைல்தான். பாதையும் போக்குவரவும் மலைமேல் ஜாகாவும் சௌகுரியம், ஆகையால் ஷை சந்நிதானத்துக்குச் செல்லுபவர்கள் இவிடத்திலிறங்கிப் போவது சௌகுரியம். மூர்த்திவிசேஷம் அவசியம் தெரிசிக்க வேண்டியஸ்தலம்.

விஜயநகரம்:—இராஜனிருக்குமிடம், அரண்மனை கட்டிடவிசேஷம். ஸ்டேஷனுக்குச்சமீபத்தில் தங்கி ஜாகாசெய்வதற்கு தர்மசாலைகளிருக்கின்றன. டவுனுக்குள் தர்மான்ன சத்திரங்களுண்டு. ஜல சௌகுரியம்போதாது.

உர்லாம்:—ஜமீன்தாரிருக்குமிடம், தர்ம்மான்னசத்திரம் முதலிய விசேஷ தருமங்களுண்டு, ஸ்டேஷனிலிருந்து 1½மைல்தூரமிருக்கிறது.

சோம்பேடா:—ஸ்டேஷனிலிருந்து ஒருமைல் தூரத்திலுள்ள இவ்வூரில் தர்மான்னசத்திரமும், ஜாகைக்கும் சௌகுரியம்

சத்திரபுரம்:—ஸ்டேஷனிலிருந்து 1½மைலிருக்கிறது, சௌகரியமுள்ள ஊர், இதுஒட்ர தேசத்தைச்சேர்ந்தது, தர்மான்ன சத்திரமுண்டு, தெலுங்குபாஷைக்கு இது வடகோடி எல்லையாகவிருக்கிறது.

கள்ளிக்கோட்டா:—இதுவொரு ஜமீன்தாரிஸ்தலம், ஊருக்குள் ஜாகா முதலியவைகள் சௌகரியமாயிருந்தாலும் பாஷை தெரியாத காரணத்தால் எல்லாம் நூதனமாகவும் சிரமமாகவும் காணப்படும்.

கடகம்:—மகாநதி தீரத்திலுள்ளது. தீர்த்த விசேஷம். தெலுங்கு பிராமணர்கள் தீர்த்தக் கரையி லிருப்பவர்களைத் தவிர மற்றெல்லாரும் ஓட்டிரர். இது வங்காள ராஜதானியைச் சேர்ந்த தென்கோடி ஜில்லா; ஸ்டேஷனிலிருந்து இரண்டு மைலிருக்கிறது, ஜாகாவும் தர்மான்ன சத்திரமும் சௌகரியமே. இதற்கு வடக்கே கால்நடையாய் நடந்து போகிறவர்கள் கூட எப்படியாவது கஷ்டப்பட்டு ரயிலேறிச்செல்லுதல் நலம், ஏனெனில் பாஷை முதலியவை தெரியாதவும் காட்டுப் பாதையுமான தேசம், தர்மங்களும் சொற்பம், திருடர்பயம் ஜாஸ்தி. மஜிலிகள் தூரம்.

கர்க்பூர், கல்கத்தா இவைகளைப்பற்றி இயற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது.

கல்கத்தாவை விட்டால் ஸ்ரீமத்கயா:—ஸ்டேஷனிலிருந்து மூன்று மைலிருக்கிறது. லோகப் பிரசித்தமான க்ஷேத்திரம், ஸ்டேஷனிலேயே கயாவாலர்களின் குமாஸ்தாக்கள் அழைத்துக்கொண்டு போகக் காத்திருப்பார்கள். மற்ற விவரங்களைப்பற்றி மறறோரிடத்தில் விஸ்தாரமாய் எழுதப் பட்டிருக்கிறது.

ஸ்ரீமத்கயாவை விட்டால் ஸோன்ப்ரிட்ஜ் என்னும் ஸோணபத்திரா நதி தீர்த்தவிசேஷம், இந்தியாவிலுள்ள வாராவதிகளிலெல்லாம் அதிக நீளமான இதன் பாலம் இரண்டேகால் மைல் நீளமுள்ளது; உலகத்திலுள்ள வாராவதிகளுக்கெல்லாம் மிகவும் நீளமுள்ளதான ஸ்காட்லெண்ட் தேசத்திலுள்ள டே நதி வாராவதிக்கு இது அடுத்ததா யிருக்கிறது. இதற்காகவாகிலு மிறங்கிப் பார்க்கத்தக்க சிறப்பமையப்பெற்றது.

ஷை ஸோன் ப்ரிட்ஜ் ஸ்டேஷனை விட்டால் ஸ்ரீமத்காசியே; ஸ்டேஷனிலிருந்து டவுன் ஆரம்பமாயிருந்தாலும் நம தமிழ் நாட்டார் மிகுதியாயிருக்கும் படியான அனுமந்தகட்டம் மூன்று மைலிருக்கிறது. கங்கா புத்திரர்களின் குமாஸ்தாக்கள் ஸ்டேஷனில் வந்து காத்துக்கொண்டிருப்பார்கள்; மற்ற விவரங்களைப் பற்றி மற்றோரிடத்தில் விரிவா யெடுத்துரைக்கப் பட்டிருக்கிறது. கயாவாலர், கங்காபுத்திரர் இவர்களின் குமாஸ்தாக்கள் கார்க்பூர் முதலான மார்க்கத்திலேயே வந்து அமர்ந்து கொள்ளுபவரை ஏற்காது நேராகவும் தனியாகவும் இக்கயிட்டுப்படி யாத்திரை செய்வது செலவு கம்மியாகும்.



## ஸ்ரீ காசிக்குச் செல்லும் மேலமார்க்கம்.



இடையேயுள்ள ஸ்டேஷன்கள், மஜிலிகள், பிரயாணசௌகரியங்கள், மெயில் வண்டித்தொடரின் கால நிர்ணயங்களைப் பற்றியது.

| நெ. | ஸ்டேஷன்களின்பெயர் | ஸ்ரீ காசியிலிருந்து மைல் | நெ | ஸ்டேஷன்களின் பெயர். | ஸ்ரீ காசியிலிருந்து மைல் |
|---|---|---|---|---|---|
| 92 | செங்கல்பட் ஜங்ஷன் | 1526 | 125 | முத்தனூரு .. | 1336 |
| 93 | ஆத்தூர் .. | 1522 | 126 | மங்கபட்நம் ... | 1327 |
| 94 | வில்லியம்பாக்கம் ... | 1519 | 127 | கொண்டாபுரம் ... | 1321 |
| 95 | பழையசீவரம் .. | 1516 | 128 | ரேகடிபல்லெ .. | 1317 |
| 96 | வாலாஜாபாத் ... | 1512 | 129 | வங்கனூர் ... | 1312 |
| 97 | நத்தப்பேட்டை .. | 1507 | 130 | தாட்பத்திரி ... | 1304 |
| 98 | காஞ்சீபுரம் ... | 1504 | 131 | ஜூதூரு ... | 1296 |
| 99 | பன்னூர் .. | 1498 | 132 | ராயல் செருவு ... | 1289 |
| 100 | அரக்கோணம் ஜங்ஷன் | 1489 | 133 | ஜக்கல்செருவு ... | 1282 |
| 101 | திருத்தணி ... | 1481 | 134 | குத்தி ... | 1274 |
| 102 | பொம்படி ... | 1477 | 135 | பாதகொத்தசெருவு .. | 1267 |
| 103 | நகரி ... | 1462 | 136 | திம்மன்செர்லா ... | 1258 |
| 104 | வேபகுண்ட ... | 1467 | 137 | குண்டக்கல் ஜங்ஷன் | 1256 |
| 105 | புத்தூர் ... | 1462 | 138 | நன்செர்லா ... | 1251 |
| 106 | தடுக்கு ... | 1458 | 139 | மொளகவல்லி ... | 1244 |
| 107 | பூடி . | 1454 | 140 | ஆஸ்பரி ... | 1237 |
| 108 | ரேணிகுண்ட ஜங்ஷன் | 1448 | 141 | நாகர்பூர் ... | 1231 |
| 109 | மாமண்டூரு . | 1439 | 142 | ஆதோனி ... | 1224 |
| 110 | ஸெட்டிகுண்ட ... | 1429 | 143 | குப்பல் ... | 1215 |
| 111 | கொடூரு ... | 1423 | 144 | கோஸ்கி ... | 1207 |
| 112 | ஊரம்பாடு ... | 1414 | 145 | துங்கபத்திரைநதி ... | 1198 |
| 113 | ரெட்டிபல்லெ .. | 1410 | 146 | மட்மரி ... | 1192 |
| 114 | ராஜம்பேட்டா ... | 1402 | 147 | ராய்ச்சூர் ஜங்ஷன் | 1181 |
| 115 | நண்டலூர் ... | 1395 | 148 | ராய்ச்சூர் கண்டோன் .. | 1175 |
| 116 | வொண்டிமிட்டா ... | 1385 | 149 | சிக்ஸூகர் ... | 1171 |
| 117 | சித்தவட்டம் ... | 1377 | 150 | கிருஷ்ணா ... | 1165 |
| 118 | கடப்பை .. | 1370 | 151 | ஸைடாபூர் ... | 1153 |
| 119 | கிருஷ்ணாபுரம் ... | 1365 | 152 | யாத்கிரி ... | 1138 |
| 120 | கங்கயபல்லெ ... | 1360 | 153 | நால்வார் .. | 1123 |
| 121 | கமலாபுரம் ... | 1356 | 154 | வாடி ஜங்ஷன் | 1114 |
| 122 | யெர்ரகுடிபாடு ... | 1351 | 155 | ஷஹபாட் ... | 1108 |
| 123 | யெர்ரகுண்டல ... | 1346 | 156 | மார்டூர் ... | 1101 |
| 124 | கலமல்ல ... | 1341 | 157 | குல்பர்கா ... | 1091 |

| நெ. | ஸ்டேஷன்களின் பெயர். | ஸ்ரீ காசியிலிருந்து மைல். |
|---|---|---|
| 158 | ஸவால்ஜி ... | 1083 |
| 159 | கங்காபூர் .. | 1075 |
| 160 | குலாலி ... | 1067 |
| 161 | தூத்னி ... | 1061 |
| 162 | பொரேடி .. | 1052 |
| 163 | சறப்கோன் ... | 1043 |
| 164 | டிலடி ... | 1037 |
| 165 | ஹாட்கி ஜங்ஷன் | 1031 |
| 166 | ஷோலாபூர் .. | 1022 |
| 167 | பேலி .. | 1018 |
| 168 | பகணி ... | 1012 |
| 169 | மொஹல் . | 1002 |
| 170 | அங்கர் ... | 992 |
| 171 | மட்த . | 983 |
| 172 | பார்ஸிரோட் ஜங்ஷன் | 973 |
| 173 | ட்தாவலஸ் ... | 968 |
| 174 | கெம் ... | 962 |
| 175 | பலவ்ரி .. | 957 |
| 176 | ஜியர் .. | 952 |
| 177 | போப்லெஜ் .. | 946 |
| 178 | வாஷிம்பி .. | 942 |
| 179 | பொமல் வாடி . | 934 |
| 180 | கட்ரூஜ் ... | 928 |
| 181 | டிக்ஸல் ... | 923 |
| 182 | மால்தன் ... | 918 |
| 183 | போரிபியால் ... | 912 |
| 184 | டோண்ட் ஜங்ஷன் | 906 |
| 185 | பிம்ப்ரீ . | 894 |
| 186 | பெல்வாண்டி ... | 885 |
| 187 | விஸாபூர் . | 877 |
| 188 | ஸரோலா ... | 867 |
| 189 | அகோல்னர் . | 863 |
| 190 | ஆமத்நகர் ... | 855 |
| 191 | விலாட் ... | 846 |
| 192 | வம்பேரி ... | 838 |
| 193 | ரகூரி .. | 830 |
| 194 | லாக் ... | 821 |
| 195 | பெலாபூர் .. | 814 |
| 196 | சிடலி . | 806 |
| 197 | புண்டாம்பா .. | 801 |
| 198 | ஸம்வத்ஸர் .. | 797 |
| 199 | கோபர்கெயோன்ரேட்.. | 787 |
| 200 | யியோலா .. | 778 |
| 201 | அன்கெய் ... | 769 |
| 202 | மன்மாட் ஜங்ஷன் | 760 |
| 203 | இஸ்வஹால் .. | 751 |
| 204 | பன்ஜன் .. | 748 |
| 205 | கண்ட்கோன் ... | 744 |
| 206 | பிம்பர்கெட் | 738 |
| 207 | நெய்டொன்சிரி ... | 731 |
| 208 | ரோஹிணி .. | 728 |
| 209 | ஹீராபூர் ... | 723 |
| 210 | சாலீஸ்கோன் ஜங்ஷன் | 718 |
| 211 | வக்லி .. | 713 |
| 212 | காஜ்கெயான் .. | 706 |
| 213 | கால்ஞ | 697 |
| 214 | பச்சோரா .. | 690 |
| 215 | மெஹிலி ... | 681 |
| 216 | மஸவெட் .. | 674 |
| 217 | ஷிர்ஸோலி | 668 |
| 218 | ஜாஸ்கோன் ஜங்ஷன் | 661 |
| 219 | பாட்லி .. | 653 |
| 220 | புஸாவல் ஜங்ஷன் | 646 |
| 221 | டுஷ்கேடா ... | 641 |
| 222 | ஸவ்ட .. | 636 |
| 223 | ரிம்போரா .. | 630 |
| 224 | ரேவர் .. | 624 |
| 225 | வகோடா .. | 618 |
| 226 | ர்ஹன்பூர் . | 612 |
| 227 | சுல்கன் .. | 606 |
| 228 | ச்சட்ரி ... | 600 |
| 229 | மண்ட்லா .. | 592 |
| 230 | டொங்கார்கெயொன் .. | 586 |
| 231 | பாக்மர் | 576 |
| 232 | கண்ட்வா ஜங்ஷன் | 569 |
| 233 | மதிலா .. | 564 |
| 234 | டல்வாடா . | 559 |
| 235 | கெய்கோன் | 553 |

| நெ. | ஸ்டேஷன்கள். | ஸ்ரீ காசியிலிருந்து மைல் | நெ. | ஸ்டேஷன்கள். | ஸ்ரீ காசியிலிருந்து மைல் |
|---|---|---|---|---|---|
| 236 | பிர் . | 548 | 276 | விஹோராரோட் | 287 |
| 237 | விங்காஜி . | 541 | 277 | ஸ்லீமனபாட்ரோட் ... | 272 |
| 238 | ஹரர்ஸாட் . | 536 | 278 | கிவார் | 263 |
| 239 | பிப்லகி . | 531 | 279 | கட்நி ஜங்ஷன் | 254 |
| 240 | கிர்க்கியாயா .. | 525 | 280 | ஜுஹிகெஹி .. | 244 |
| 241 | குராவன் .. | 521 | 281 | அம்டாரா .. | 232 |
| 242 | பிரிங்கி ... | 517 | 282 | பாடென்பூர் | 224 |
| 243 | மாலெஸங்கோன் ... | 513 | 283 | மெய்ஹர் | 215 |
| 244 | பலஸ்நர் . | 510 | 284 | உன்செரஹா . | 206 |
| 245 | ஹர்டா .. | 505 | 285 | ஸட்நா ... | 193 |
| 246 | சர்க்ஹிரா .. | 501 | 286 | ஜெய்ட்வார் ... | 181 |
| 247 | டிமர்ரி .. | 497 | 287 | மஜ்கெவான் . | 168 |
| 248 | ச்சிட்கெயான் ... | 491 | 288 | மர்குண்டி . | 155 |
| 249 | பக்டெயால் ... | 488 | 289 | மாணிக்பூர் ஜங்ஷன் | 145 |
| 250 | பெய்ரன்பூர் .. | 483 | 290 | டபௌரு .. | 131 |
| 251 | பாணுபுர .. | 479 | 291 | பார்க்சார் ... | 121 |
| 252 | ட்தரம்குண்டி ... | 494 | 292 | ஷங்கர்கார் ... | 111 |
| 253 | க்குட்வன்ஸ .. | 469 | 293 | லொஹ்சாரா ... | 105 |
| 254 | ஓலேரியா ... | 463 | 294 | ஜஸரு ... | 97 |
| 255 | பிலக்ஹெரி .. | 461 | 295 | ச்சியோகி ஜங்ஷன் | 86 |
| 256 | இடார்ஸி ஜங்ஷன் | 458 | 296 | கர்சானு .. | 81 |
| 257 | குர்ரு . | 451 | 297 | பீர்பூர் | 75 |
| 258 | பக்ரா ... | 441 | 298 | மேஜாரோட் ... | 68 |
| 259 | ஸெம்ரி ... | 433 | 299 | உன்சிடி ... | 63 |
| 260 | ஸோகாஜ்பூர் .. | 427 | 300 | மண்டாரோட் | 58 |
| 261 | பிபேரியா ... | 416 | 301 | ஜிக்நா .. | 53 |
| 262 | பங்கெடி ... | 410 | 30 | செய்புரு ... | 48 |
| 263 | பாபெய் .. | 400 | 303 | பிரோஹி . | 44 |
| 264 | கடர்வாடா ஜங்ஷன் | 391 | 304 | பிர்ந்தாச்செல் . | 41 |
| 265 | பொஹொணி ... | 383 | 305 | மர்ஜாபூர் ... | 39 |
| 266 | கரெலி ... | 373 | 306 | ஜிங்கூரு ... | 37 |
| 267 | நர்விங்பூர் . | 363 | 307 | பஹ்ரா ... | 34 |
| 268 | நாரெக்பெல் ... | 354 | 308 | டாக்மபூர் ... | 29 |
| 269 | கோடிகெயான் . | 344 | 309 | சுனர் ... | 26 |
| 270 | பிக்ரம்பூர் ... | 337 | 310 | கைலாஹட் ... | 22 |
| 271 | ஷாபுர ... | 330 | 311 | அஹ்ரௌரரோட் ... | 15 |
| 272 | மிர்கஞ்ஜ் . | 322 | 312 | ஜியோநாத்பூர் ... | 12 |
| 273 | மாெ .ன்மஹல் | 317 | 313 | மோகல்சிரே ஜங்ஷன் | 7 |
| 274 | ஜப்பல்பூர் ஜங்ஷன் | 311 | 314 | ஸ்ரீ காசி அல்லது பெனுரீஸ்ஸிடிஸ்டேஷன் | |
| 275 | டியோரி ... | 300 | | | |

## ஸ்ரீ காசிக்குப்போகும் மேலமார்க்கத்தின் மஜிலிகள்.

காஞ்சீபுரம்:—இதைப்பற்றி பூபிரதக்ஷிணயாத்திராக் கிரமத்தில் விரிவாயிருப்பதைக் கவனிக்க.

அரக்கோணம்ஜங்ஷன்:—இவிடமிருந்து கிழக்கே பட்டணம், தெற்கே காஞ்சிபுரம், மேற்கே ஜோலார்பேட்டை, வடக்கே ராயச்சூருக்கும் ரெயில் பாதைகள் போகின்றன; ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் நல்ல ஹோட்டல்களுண்டு.



திருத்தணி:—ஸ்டேஷனிலிருந்து ஒருமைலிருக்கிறது. மலையின் மீதுள்ள சுப்பிரமணியர் சந்நிதானம் வெகுபிரசித்தம், இக்கலியுகத்தில் பிரத்தியக்ஷதெய்வம்; விசேஷமான யாத்திரிகர்கள் பிரதிகிருத்திகைக்கும் வருவதால ஜாகைக்காக நூறுக்குமேல்பட்ட தர்மசாலைகளிருக்கின்றன. எண்ணிறந்த ஹோட்டல்களும் நாட்டுக்கோட்டையார் தர்மான்ன சத்திரமுமுண்டுவசதியாய்.

புத்தூர்:—இவிடமிருந்து கார்வெட் நகர்ராஜா ஏழுமைல் தூரத்தில் வசிக்கிறார்.

பூடி:—அலமேலு மங்கைநாச்சியார் சந்நிதானத்துக்கு எண்ணிறந்த ஜனங்கள் யாத்திரைசெய்கிறார்கள். இச்சந்நிதானத்தில் விவாகாதிமுகூர்த்தங்களை பிரார்த்தனை செய்து நடத்துகின்றார்கள்.

ரேணிகுண்டா ஜங்ஷன்:—இவிடமிருந்து மேற்கே திருப்பதி முதலான இடங்களுக்கும், கிழக்கே காளஹஸ்தி முதலிய இடங்களுக்கும் இருப்புப்பாதை செல்லுகிறது. மேற்கேபோகும் லயன் காட்பாடி, தர்மாவரம் ஜங்ஷன்களிலும் கிழக்கே கூடூர் ஜங்ஷனிலும் சந்திக்கிறது; ஸ்டேஷனுக்கு அருகாமையிலே ஜாகாவுக்கு தர்மசாலையும் ஓட்டல்களுமுண்டு, இவிடமிருந்து திருப்பதி ஏழுமைல்.

வோண்டிமிட்டா:—கிருஷ்ணமூர்த்தி தேவாலய விசேஷம் ஊர் ஸ்டேஷனிலிருந்து ஒருமைலிருக்கிறது.

கடப்பை:—ஸ்டேஷனிலிருந்து டவுன் ஒன்றரைமைல், ஜாகை சௌகுரியம், தர்மான்னசத்திரங்களுண்டு, இதுமுதல் ராயச் சூர்வரை தெலுங்கு தேசமாகையால் போஜனகாலததில் மடி உடுததிக்கொள்ளாமலும் தீர்த்த பாத்திரமில்லாமலுமிருந்தால் அன்னமளிக்கமாட்டார்கள்; இந்த சீமையில் பிராமணர்மட்டுக்குமல்ல, வைசியர் முதலானவர்களுக்கும் தர்மமுண்டு, புதிதாய்ப் போகிறவர்களை கடப்பை ஜ்வரம பிடித்துக்கொள்ளுமாகையால் தாமதமில்லாமல் புறப்பட்டுவிடவேண்டும்.

கமலாபுரம்:—இவிடமிருந்து வடகிழக்கே ஐந்துமைல்தூரத்தில் பேர்பெற்ற புஷ்பகிரி தேவஸ்தான சந்நிதானமிருககிறது

கோண்டாபுரம்:—இவிடமிருந்து ஐந்துமைல் தூரத்திலிருக்கிற குண்டி கோட்டாவின் புராதான கோட்டையும், ஒரு குகைக்குள்ளிருக்கும் நீர்வீழ்ச்சியும் பார்க்கத்தகுந்தது.

பேண்ணேறு:—இரண்டுமைல் தூரத்தில் பிநாகினிதீரத்திலுள்ள அஸ்வத்த நாராயணஸ்வாமி சந்நிதானததுக்குயாத்திரைபோவோர் பலர்.

தாடிபத்திரி:—விஜயநகரம் ராஜாக்களினுல் 400 வருஷத்துக்குமுன கடடப்பட்ட ஸ்ரீ ராமர் தேவாலயத்தில் எழுதப்பட்டிருககிற ஸ்ரீராமாயணம் சித்திரங்களாக பார்ககத்தகுந்தது. தர்மசாலைகிடையாது, ஜாகாகிடைக்கும்.

குத்தி:—டவுனுக்குச்சமீபததில் 2000 அடி உயரத்திலுள்ள மலைமேல கட்டப்பட்டிருக்கிற புராதன கோட்டை ஒனறுண்டு; ரெயிலவேஸ்டேஷனுக்குசசமீபத்திலும் டவுனுக்குளளும ஒரு தர்மசத்திரம் உண்டு.

திம்மன்சர்லா:—ஏப்ரல் மாதத்திய உற்சவத்திற்கு வெகு பேர்வருகிறார்கள். ஸ்டேஷனுக்குச்சமீபத்தில சத்திரமுண்டு.

குந்தக்கல்ஜங்ஷன்:—தென்கிழக்கே பட்ணத்திலிருந்து வடமேற்கே பம்பாய்க்குச் செல்லுமமெயினலயனைத்தவிர தெற்கே பெங்களூருக்கும், மேற்கே ஹூப்ளி தார்வாடாவுக்கும, கிழக்கே பெஜவடாவுக்கும் இருப்புப்பாதைகள் செல்லுகின்றன. ரெயில்வே ஸ்டேஷனைவிட்டு வெளியில்போனுல் தங்க சௌகுரியமான ஜாகைகிடைக்காது, ஓடல்களுண்டு.

ஆதோனி:—பஞ்சுவர்த்தகம ஜாஸதி, ஸ்டேஷனிலிருந்து ஒருமைல், இவிடமிருந்து வடக்கே கோஸ்கிக்கு இடையில் றெயிலவே லயனுக்கு இருபுறத்திலும பாறைகளில வெட்டப்பட்டிருககும் பூதவடிவமுளள பிரதிமைகளை கவனித்துப்பார்க்கத் தகுந்தது.

துங்கபத்ரா:—ஸ்டேஷனுக்குச்சமீபத்திலேயே துங்கபத்திராநதி தீர்த்தவிசேஷம், சௌகரியமான ஜாகாவுள்ள தர்மசாலை காசியாத்திரிகர்கள் தவறாமலிதில் இறங்குவார்களாக. கங்காஸ்நானமும், துங்காபானமும் கிடைப்பதருமை.

ராயச்சூர்:—மதிராஸ் ரெயில்வேயும், பம்பாய்க்குச்செல்லும் கிரேட் இண்டியன் பெனின்சுலர் ரெயில்வேயும் இவிடம் சந்திக்கிறது. கி. பி. 1294-ம் வருஷத்தில் விதலராஜனால் கட்டப்பட்டிருக்கிறகோட்டையும் 21 அடி நீளமுள்ள பீரங்கியும் பார்க்கத்தகுந்தது; ஸ்டேஷனுக்குச்சமீபத்திலுள்ள ஊரில் சத்திரம் தங்குவதற்குண்டு.

கிருஷ்ணா:—ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் கிருஷ்ணாநதி ஓடுகிறது, ஸ்நாநவிசேஷம்

வாடிஜங்ஷன்:—இவிடமிருந்து ஹைதராபாத்துக்கு இருப்புப்பாதை பிரிந்து செலலுகிறது; தெலுங்கு சீமையைத் தாண்டி மகாராஷ்டிரம், ஹிந்துஸ்தானி தேசத்துக்கு வந்துவிட்டோம். இவிடத்தில் பதனிட்ட வெண்ணெயின் நேர்த்தியும் ருசியும் வெகு காலம்வரையில் கெடாமலே புதியதைப்போலிருக்கும்.

ஹாட்கிஜங்ஷன்—இவிடமிருந்து தெற்கில் கடக்ஜங்ஷன் வழியாய் பெங்களூருக்குப்பிரிந்து செல்லுகிறது.

ஷோலாப்பூர்:—ஸ்டேஷனிலிருந்து முக்கால்மைல், மகாராஷ்டிர பிராமணர்கள் மிகுதியுள்ள ஓர் சிறியபட்டணம்.

பார்சிரேட்ஜங்ஷன்:—இவிடமிருந்து பண்டர்பூருக்கு லயன்பிரிந்து செல்லுகிறது, பண்டர்பூரின் மற்ற விவரங்களைப்பிரிதோரிடத்திற்காண்க.

டோண்ட்ஜங்ஷன்:—பம்பாய்க்குச் செல்லும் மெயின் லயனிலிருந்து, வடக்கே மன்மாட் ஜங்ஷனுக்கு லயன்பிரிந்து செல்லுகிறது.

ஆமத்நகர்—பெரிய வியாபார ஸ்தலம், ஸ்டேஷனிலிருந்து ஒருமைல்.

புண்டாம்பா:— கிழமார்க்கத்தில் இராஜமகேந்திரத்தைப்போல் இங்கு கோதாவரி நதியோடுகிறது. தீர்த்தவிசேஷம் ஸப்தநதிகளிலொன்று, காசியாத்திரைபோவோரும், வருவோரும் இதில் ஸ்நாநாதிகள் செய்யாமற் போகமாட்டார்கள். ஆனால் சமீபத்தில் விசேஷசாமான்கள் கிடைக்காததால் சாமான்கள் கையில் கொண்டுபோவது நலம்.

மன்மாட்ஜங்ஷன்:—இவிடத்தில் பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்குச் செல்லும் மெயின்லேனோடு சேருகிறது, சமீபத்தில் ஒரு ஆறு ஓடுகிறது, ஜாகாகிடைக்கும். திராவிட தேசத்தார் சிலர் இந்த ஸ்டேஷன் உத்தியோகத்திலிருக்கிறார்கள்.

சாலிஸ்கோன் ஜங்ஷன்:—டூலியாவுக்கு ஒரு லயன் பிரிகிறது

ஜால்கோன் ஜங்ஷன்:—அமால்நர்க்கு ஒரு லயன் பிரிகிறது.

பூஸாவல்ஜங்ஷன்:—நாகப்பூருக்குப்பிரிகிறது, ஸ்டேஷனில் தங்குவசற்கிடமுண்டு மிட்டாய்பதார்த்த விசேஷவகைகள் மலிவாயும் நாணயமாயுமிருக்கும், தப்தி நதி சமீபம்.

கண்ட்வாஜங்ஷன்:—இண்டூரு (ராஜாவிருக்குமிடம்) க்குப் பிரிந்து சென்று அங்கிருந்து க்வாலியர், ஆக்ரா-டில்லிமுதலிய விடங்களுக்குச் செல்லுகிறது. ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் தங்குவதற்கு வசதியான தர்மசாலைகளும் கடை கண்ணிகளும் ஜல சவுக்கியமுமுண்டு, நெடுந்தூரத்திலிருந்து பிரயாணம் செய்கிறவர்களுக்கு தங்குவதற்கேற்ற மஜிலி.

இடார்ஸி ஜங்கஷன்:—போபல் ஸமஸ்தானத்துக்குப் பிரிகிறது.

ஸோஹாக்பூர்:—ஸ்டேஷன் கம்பவுண்டுக்குள்ளேயே தங்குவதற்கும், சமையல் சாப்பாடு செய்வதற்கும் ஜாகா உண்டு, சமீபத்து மலைகளின் காடுகளில் புலி-சிறுத்தை முதலிய துஷ்ட மிருகங்கள் ஜாஸ்தி, இது ஒரு வர்த்தகஸ்தானம்.

கடார்வாடா ஜங்ஷன்—மோபனி, கோடு டோரியாவுக்குப் பிரிந்து செல்கிறது.

மிர்கஞ்ச்:—மார்பிள் ராக்ஸ்க்குச் செல்வோர் இவிடமிறங்க வேண்டும். நருமதை நதி, மலைக்கற்பாறைக்கு மத்தியில் உடைத்துக்கொண்டு நிர்மலமாயோடி வருவதைப்பார்க்க இந்த இரண்டு கண்கள் போதாது; வண்டிகளகப்படுவது கம்மி.

ஜப்பல்பூர் ஜங்ஷன்:—இவிடமிருந்து நருமதை தீர்த்த விசேஷஸ்நாநகட்டம் ஐந்து மைல். டீடன்கள், நான்கு சக்கிரவண்டிகள் வெகு சுலபவாடகைக்குக்கிடைக்கும். இந்த ஊரிலே நம்ம தேசத்து ஜட்காவண்டிகளும், மாட்டுவண்டிகளும், கிடையாது; எல்லாம் நாலுசக்கிர வண்டிகள் தான், ஷை ஐந்து மைலுக்கும் ஆள் 1-க்கு நாலணாவுக்கு மேல் எப்போதுமில்லை. இரண்டணாவுக்கும் கிடைக்கும், ஸ்நாநகட்டத்தில் ஜாகா வெகு சௌகரிய

யம், தீர்த்தக் கரைப் பிராமணரிருக்கிறார்கள். பதார்த்தங்கள் ஜப்பல்பூரிலிருந்து வாங்கிப்போனால் சரசம். ஜப்பல்பூரில்க்ரேட் இண்டியன்பெனின்சுலர்ரயில்வேயும், ஈஸ்ட் இண்டியன் ரெயில்வேயும் சந்திக்கிறது. இது ஒரு பெரியவூரில், மிலிடெரிஸ்டேஷன் பாரிபட்டணம், வர்த்தகம் ஜாஸ்தி, பெரிய பெரிய சாவ்காரிகள் உத்தியோகஸ்தர்கள் (தமிழ்நாட்டாருமுண்டு) இருக்கிறார்கள். இவிடமிருந்து நயின்பூர்மார்க்கமாய் கோண்டியாவுக்கு ஒரு மீடர் காஜ் ரெயில்வே லயன் பிரிந்தோடுகிறது.

கட்நி ஜங்ஷன்:—ஈஸ்ட் இண்டியன், பெங்கால் நாக்பூர், க்றேட் இண்டியன் பெனின்சுலர் இம்மூன்று இருப்புப்பாதைகளும் இவிடம் சந்திக்கின்றன. ஸ்டேஷனுக்குச் சமீபத்திலும், டவுனுக்குள்ளும் தர்மசாலைகளும், வாடகை பங்களாக்களும் வசதியாய்த் தங்க உண்டு.

மாணிக்பூர் ஜங்ஷன்:—ஜான்விக்கு ஒரு லயன் செல்கிறது.

நயினி ஜங்ஷன்:—இங்கிருந்து மேற்கே பிரயாகை நான்கு மைலிருக்கிறது. காசிக்குப்போகிறவர்கள் ஒரு மைல் கிழக்கே சியோகிஜங்ஷன் வழியாய்ச்செல்லவேண்டும். நயினியிலிருந்து ஒரு மைல் மேற்கேயமுனாநதி அதன் கம்பீரமான பாலத்துடன் பிரகாசிக்கிறது. இந்த இரண்டு ஜங்ஷன் ஸ்டேஷன்களில் பிரயாணிகள் தங்கும்படியான அவசியமில்லை; ஆனாலும் தங்கவேண்டுமானால் ஜாகா சௌகரியமே, ஷை ஊர்களிலும் விசேஷமொன்றுமில்லை. நயினியில் ஒருவிஸ்தாரமான தர்மசாலையுண்டு. ஏழைகள் எல்லாச்சாதியாருக்கும் அன்னமளிக்கப்படுகிறது.

மிர்ஜாபூர்:—ஸ்டேஷனுக்கு அதிகதூரத்திலில்லை. தர்மசாலை ஒன்றிருக்கிறது, கங்காதீரம், துர்க்காதேவி விசேஷம், காசியிலிருக்கும் கங்கைக்கும் இவிடத்திலிருக்கும் கங்கைக்கும் வித்தியாசம் தெரியும் பொருட்டு பார்க்கவேண்டியதவசியம், அதாவது காசியில் ஓட்டம் சாதாரணமாய்த் தெரியாது. இவிடம் பூமியைக் கிழித்துக்கொண்டும் சப்தித்துக்கொண்டும் ஓடுவது ரமணீயகரமாயிருக்கும்.

மோகல்சிரே ஜங்ஷன்:—ஈஸ்ட் இண்டியன் றெயில்வேயும் ஔட் அண்ட் ரோகில்கண்ட் றெயில்வேயும் இவிடம் சந்திக்கிறது. இவிடமிருந்து ஸ்ரீகாசி ஏழு மைல், ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் தர்மசாலையிருக்கிறது. ஏழைகளுக்குச்சாப்பாடு கொடுக்கிறார்கள். சமையல்செய்து சாப்பிட வசதியுண்டு.

## ஷை மேலமார்க்கத்தின் காலநிர்ணயமும் கட்டணவிகிதமும்.

சென்னப்பட்டணத்திலிருந்து இரவு 9½-மணிக்குப் புறப் பட்டு அரக்கோணத்துக்கு 10-¼" ணிக்குவருகிற பஞ்சாப்தேசத் துக்கு நேராய்ப்போகிற, மெயில், அரக்கோணத்தைவிட்டு 10½-மணிக்குப் புறப்பட்டு குத்தி, குந்தக்கல், ராயச்சூர், வாடி, டோண்ட், ஆமத்நகர், மண்மாட், சாலிஸ்கோன், புஷாவல், கண் டுவாவில் இரவு 3½ மணிக்கு இறங்கி, மறுநாள் அவிடத்தில் சமையல் சாப்பாடு செய்துகொண்டு அதே மெயிலிலேறி இடா ர்ஸி, ஜப்பல்பூர், நயினி, மொகல்சிரே மார்க்கமாய் ஸ்ரீகாசிக்குப் போகவேண்டும். ஒருவேளை ஷை காலநிர்ணயத்தை ரெயில்வே கம்பெனியார் மாற்றினாலும் ஷை வண்டித்தொடர் ஏற்பாடு எப் போதும் சாஸ்வதமாயிருக்குமென்று விளம்பரப்படுத்தியிருக்கி றார்களாகையால் இதினின்றும் நீங்களே கணித்துக்கொள்ளக் கூடும்

இந்தமார்க்கத்தின் கட்டணம் மொத்தம் ரூ 21—3—0 ஆகிறது. டோண்டிலிருந்து பம்பாய் மார்க்கமாய்ப் போனால் ரூ 3—6—0 அதிகமாகிறது. ஷை மேலமார்க்கம், கீழமார்க் கம் இரண்டையு மொத்திட்டுப் பார்க்கிறபோது கீழமார்க்கமே எல்லா விஷயங்களிலும் சௌகரியமாயிருக்கிறது. அதிலும் கீழ்சமுத்திரக்கரையிலுள்ள ஜில்லா வாசிகளுக்கு கீழமார்க்க மே சார்ஜ், பிரயாண சௌகரியம், பாஷாசௌகரியம் முதலிய எல்லாவற்றிற்கும் ஏற்றதாயிருக்கிறது. மைசூர், குடகு, தென் கன்னடம், மலையாளம்ஜில்லா வாசிகள் மேலமார்க்கமாய்ப போ வதில் சௌகரியம்.

ஸ்ரீகாசிக்குச்செல்லும் மத்தியமார்க்கம் :—முன்சொன்ன வாடி ஜங்ஷனில் பிரிந்து ஹைதராபாத்துக்குச்சென்று அங்கிருந்து நாகபூ ருக்கு (மத்தியில் சுமார் **45**-மைல் ரோட்மார்க்கம்)போய் பெங்கால் நாகப்பூர் இருப்புப்பாதைவழியாய் ஷை கட்நிஜங்ஷனில் சேர்ந்து வ்டுகிறது. இந்த மார்க்கம் கடப்பை கர்நூல் ஜில்லாவாசிகளுக்குச் சௌகரியம் இந்த மார்க்கத்தில் நேடுகேவிசேஷதருமங்களுண்டு. மற்ற எல்லாவிஷயங்களிலும் சௌகரியமே

"வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்
ஒல்வத றிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாததில்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

ஓம்சுபம்.





## V-வது அத்தியாயம் ரெயில்வே சட்டதிட்டங்கள்.

1. பிரயாணிகளின் சௌகுரியார்த்தமாக எல்லா ரெயில் வேக்களினை முக்கியமான பெரிய நகரங்களிலும் ரெயில்வேஸ் டேஷனுக்கு வெளியே டவுனுக்குள் டிக்கெட்டாபீஸ்கள் ஏற் படுத்தப்பட்டிருக்கின்றன. பெரிய ரெயில்வேஸ்டேஷன்களில் இராப்பகல் எல்லா நேரங்களிலும் டிக்கெட்கொடுக்கப்படும்.

2. திருவிழாக் காலங்களில் போய்வர ரிடரன்டிக்கட்டு களுக்கும், சில சந்தர்ப்பங்களில (ஸிங்கிள்) ஒற்றை டிக்கட்க ளுக்கும் குறைந்த கட்டண விகிதங்கள் ஏற்பாடுண்டு.

3. டிராமா முதலிய நாடகக் கம்பெனிகள், தாசிகள், கூத்தாடிகள, பாடகர் முதலானவர்கள் ரெயில்வே அதிகாரி களின் உத்தரவின்பேரில் கீழ்வகுப்பு டிக்கெட் பெற்று மேல் வகுப்பில பிரயாணஞ் செயவதற்கும், சாமான்களைக் குறைந்த சத்தத்திற்குக் கொண்டுபோவதற்கும் ஏற்பாடுண்டு.

4. தங்குதல்:—நூறுமைலுக்குக் குறைந்த தூரத்துக்கு டிக்கெட் பெற்றிருக்கும்போது டிக்கெட்பெற்ற அன்றைதினம இரவு 12-மணிக்குள்ளாகப் போய்ச் சேரவேண்டிய இடத்திற் குப போய்ச்சேர்ந்து விடவேண்டியது. அந்த டயத்துக்குள்ளாக மத்தியில் ஸ்டேஷன மாஸ்டருககுத் தெரிவித்து இறங்கி ஏற லாம். நடுராத்திரியாகிய இரவு 12-மணியோடு முதல்நாள் முடிந்து மறுநாள் பிறக்கிறபடியால் இரவு 12-மணியை பூஜ்ஜிய மென்று கணக்கிட்டு அதுமுதல் தொடர்ச்சியாகவே கணககிடப் படுகின்றது, அதாவது சாயரக்ஷை ஆறுமணியென்று சொல்லு வதற்குப் பதிலாக 12+6=18 மணி யென்றும இரவு 11 மணி க்குப்பதிலாக 12+11=23 மணியென்றும் ரெயில்வேக் கம் பெனியில் கணக்கிடப்படுகின்றது. நூறுமைலுக்கு மேற்பட்ட பிரயாணங்களில் சௌகுரியமான மத்திய இடங்களில் சமையல்

சாப்பாடு முதலியவைகளுக்காக இறங்கி ஏறலாம். ஆனால் 100 மைலுக்கு ஒருநாள் விதம் கணக்குப் பண்ணின மொத்த நாள் களுக்கு மேற்படாத காலத்துக்குள் போய்ச் சேர்ந்துவிட வேண்டியது. தாமதித்தால் அதிக சார்ஜ் கொடுக்கவேண்டும். அதாவது சென்னப்பட்டணத்தில் 15—9—12ல் காசிக்கு டிக் கெட்பெற்றால் கிழமார்க்கததின் வழியாக 1458 மைலானபடி யால் ஒரு 100 மைலுக்கு ஒருநாள் விதம் 14 தினத்தில்போய்ச் சேர்ந்துவிடவேண்டியது.

குழந்தைகள் சார்ஜ்:—மூன்றும் மூன்றுக்குக் குறைந்த வய துள்ள குழந்தைகளுக்கும் சார்ஜ் கிடையாது. 12 வயதுக்குள் ளாக உள்ள குழந்தைகளுக்கு அரைசார்ஜ் பாதிகட்டணம் சா ர்ஜ் செய்யப்படுகின்றது, முதலில் டிக்கட் எந்தக்காரணத்தாலா வது பெற்றிரா விட்டால் பிறகு இரட்டிப்புக் கட்டணம் செலு த்தவேண்டும். போய்வரரிடரன் டிக்கட்டுகள் (ஆறுமாதம் வரை யில் குறைந்தசார்ஜுக்கு கணிக்கப்படுகின்றது; அதாவது மொத் தத்தில் மூன்றிலிரண்டு பங்குக்குக்கொஞ்சம் ஏறக்குறைய ஆகி றது, முன்சொன்னபடியே அனுசரித்து மொத்தக்கூடுதல் காலத் துக்குமேற்படாத டயத்துக்குள் இஷ்டமான இடங்களில் இறங் கித்தங்கிப்போய்ச் சேரலாம்.

ஓரேடிக்கட் சிங்கிள் ஜர்னி.

| கட்டணவிதம்:—முதல் வகுப்புக்கு மைல் 1-க்கு | 0—1—6 |
|---|---|
| 2-வது ... ... ... ... | 0—0—6 |
| 3-வது ... ... ... ... | 0—0—2½ |

எல்லா ரெயில்வேக்களையும் ஒத்திட்டுப் பார்க்கிறபோது இந்தரேட்டு சராசரியுள்ள ரேட்டாகிறது; லோகல்வண்டிகளில் சார்ஜகுறையும், மேலேசொன்னது மெயில்வண்டித் தொடர் களின் விகிதமாகும்.

சுருட்டு, பீடிபிடித்தல்:—அந்தந்தக் கம்பார்ட்டுமெண்டிலிரு க்கிற மற்றப்பிரயாணிகளினனுமதியின்றி எவராயினும் புகைக் குடித்தால் (ஐரோப்பியர் முதலிய எவருயிருந்தாலும் சரியே) இருபதுரூபாய் அபராதத்துக்குள்ளாவார்.

சிவனடியார்கள் துதி.

அவிராழிச்சுடர்ப்படைகொண் டுலகுஅளிக்கு நெடுமாலு மயனுங்காணாத்
துவர்வாய்மெல்லியல் பாதன்றிருவருள் பூண்டிரங்கு திரைசுருட்டுந்தண்ணீ
ருவராழி சூழ்கிடந்த விருநிலத்திற் பாதலத்தி லும்பர் நாட்டில்
சிவவேடந்தரித்தவர் மற்றெவருளங்கவர் மலர்த்தாள் சென்னி சேர்ப்பாம்

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

ஓம்சுபம்.

## ஸ்ரீ கங்கா தியாத்ரா தீபிகையினது
## ஆறாவது அத்தியாயம்.

### பூபிரதக்ஷிண யாத்ரா மார்க்கமல்லாத இதர க்ஷேத்திர தீர்த்த மூர்த்திகள்.

1. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
   னுண்மை யறிவே மிகும்.
2. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
   சூழினுந் தான்முந்துறும்.
3. வைத்தான்வாய் சான்றபெரும் பொருள ஃதுண்ணான்
   செத்தான் செயக்கிடந்ததில்.
4. எச்சமென் றெண்ணுங் கொல்லோ வொருவரை
   னச்சப் படாஅ தவன்.

உஜ்ஜினியென்னும் அவந்திகை :—சப்தபுரிகளி லொன்றாகிய இப்புராதன பெரியபட்டணத்துக்கு மேலே பிரஸ்தாபித்த காசியின் மேல மார்க்கத்திலுள்ள கண்டுவா ஜங்ஷனில் பிரிந்து அங்கிருந்து மாவ்ஜங்ஷன், இண்டோர், பெடஹபாத் ஜங்ஷன் வழியாய் இந்நகருக்குப் போகவேண்டும். கண்டுவாவிலிருந்து இண்டோர் (சமஸ்தானம்) ராஜனிருக்குமிடம் பண்டித பாமரர்களை யாதரிக்குமிடம்) 85 மைலும் அங்கிருந்து இவ்வவந்திகை 41 மைலுமிருக்கிறது. இப்பட்டணத்தின் கண்ணுள்ள சாந்திபனமகரிஷியிடத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வேதாத்தியயனம் செய்தருளினர். கண்ணபிரான் திருச்சந்நிதியும், சங்கராலயமுமிருக்கின்றன.

காசிகாண்டத்தில் :—

ஆதியுகமொழிந் தவருமூன் றுகத்துமகாகாள மவந்திமற்றை
யோதுவளைஞ்சிறந் தோங்குமுச்சினி யெனுநகரி லுடன்கூற்றைக்
காதியிடு மாடகேசுரர் தாரகேசுரர் மகாளமென்னச்
சோதிவட தருவிமிழ வினிதுறையும் பரமனடி தொழுதுபோனன்:—

திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகங்களில், இந்நகருக்கு முறையே மகாகாளம், அவந்தி, உஜ்ஜியினியென்றும், அவிடத்தில் எழுந்தருளியிருக்கின்ற பரமனுக்கு மாடகேஸ்வரன், தாரகேசுவரன், மகா காளரெனவும் பெயர் பெறும். ஸீப்ராநதி தீரத்திலுள்ள இப்பட்டணத்து ளொரு கோட்டையும் விஸ்தாரமான வியாபாரமுள்ள கடைத்தெருக்களும் சௌகரியமாய்த் தங்க தர்மசாலையுமுண்டு.



## கிஷ்கிந்தை.

கிஷ்கிந்தை :—பல்லாரிக்கு மேற்கே ஹோஸ்பெட் ஜங்ஷன் ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கி வடகிழக்கே எட்டுமைலில் துங்கபத்திரா தீரத்திலுள்ள இதற்குப்போகவேண்டும். வானரராஜனாகிய சுக்ரீவனுடையராஜதானி யென்பதற் கடையாளமாக இப்போதும் இவிடத்தில் பல விசித்திர ரூபமான பெரிய குரங்கு

களும் ரிஷியமுக முதலிய பருவதங்களும் வானரங்கள் களிப்புற்று உண்டு பருக்கும்படியான வனங்களுமிருக்கின்றன இவிடம் ஸ்ரீராமர் சுக்கிரிவனை சிநேகித்து சரத்காலமுழுவதும்நான்கு மாதங்கள் தங்கியிருந்து சீதையினுடைய இருப்பிடத்தைத் தெரிந்துகொண்ட இடம். இவிடம் ஸ்ரீராமர் சந்நிதானமிருக்கிறது. மாகமாதத்தில் உற்சவம் பிரபலமாய் நடக்கிறது. இதற்குச் சமீபத்தில் பம்பா சரோவரமும் ராமாயணத்தில் கூறியிருக்கிற மற்றவைகளுமிருக்கின்றன. வஸிப்பதற்கு வெகு ஆசையும் மனோக்கியமாயு மிருக்கும். இதற்கருகிலுள்ள மலையின் பேரிலிருக்கும் கோடி லிங்கங்களிருக்கின்ற சிவ க்ஷேத்திரத்திற்கு ஹம்பி விருபாக்ஷமென்று பெயர்.



## ஸ்ரீபண்டரபுரம்.

பண்டராபுரம்:—காசிக்குப்போகும் மேல மார்க்கத்தில் சொல்லியிருக்கிற பார்ஸி ஜங்ஷனில் பிரிந்து 25 மைல் தூரத்திலிருக்கிறது, இவ்வூரோடு முடிவுபெற்றிருக்கும் இருப்புப் பாதையை தென்மேற்கில் 80 மைலிலுள்ள மிராஜ் ஜங்ஷனுக்கு லயன் தயாராகிறது. சந்திரபாகாநதிதீரத்திலிருக்கும் இப்பிரபலமான விஷ்ணுக்ஷேத்திரம் நாதப்பிரமம் எனவும் பாண்டுரெங்கமெனவும் சொல்லப்படுகிறது. சத்வகுண மஹாராஷ்டிர பாகவதர்களிக் கோயிலிலிருப்பதால் பூதஞ்சிகளும் மற்றவைகளுமில்லாமல் பரந்தாமனை "ஜே-ஜே-விட்டல், விட்டல விட்டல

என்று சந்தோஷமாய்ப் பூரித்து பஜனை செய்துகொண்டு ஆராதிக்கவும் தரிசிக்கவும் இருகண்களும் மனமும் ஐக்கியமாய்லகித்துவிடுகிறது. தங்குவதற்கு ஜாகா வசதி, வசிப்பதற்கு மனோக்கியம். தர்மான்ன சத்திரங்களும் தர்மங்களுமுண்டு; இவிடம் யாத்திரைக்கு ஏற்றகாலம் சாதுர்மாஸம் வெகு விசேஷம்.



## ஸ்ரீபஞ்சவடி.

பஞ்சவடி:—பம்பாயிலிருந்து (ரயில்சார்ஜ் நூ 1-13) வடகிழக்காக 117 மைலுள்ள நாசிக்ரோட் ஸ்டேஷனிலிறங்கிச் செல்லவேண்டும். ஸ்டேஷனிலிருந்து 5 மைலிருக்கிறது: தேவையான வண்டிகள் எப்போதும் தயார். இப்போது நல்ல டிராம்வேயும் போடப்பட்டிருக்கிறது. வெளியிலிருந்து வரும் யாத்திரைக்காரரிடத்தில் ஆள் 1-க்கு நாலணு இந்த முன்சிபாலிடியார் ஆள்வரி வாங்குகிறார்கள்; பிச்சைக்காரர் முதலானவர்களுக்கு வரிகிடையாது. கோதாவரிதீரத்தின் இருபக்கங்களிலும் யாத்திரைவாஸிகளுக்காக அநேக தருமசாலைகளும் நாட்டுக்கோட்டையார் அன்னதான சத்திரமும் வேறு சிலவுமிருக்கின்றன. இது மிகவும் சமசீதோஷ்ணமுடையதாய்ப் பிணியா

ளர் இங்கு சிறிதுகாலந்தங்கியிருந்தாலும் எவ்வகைப்பட்ட பிணியும் நீங்கிவிடும்; இதின் பூசாரமோ, உதாரணமாய் ஒரு செங்கரும்பு தொடையளவு பருமனும் இரண்டாள் உயரமும், ஒரு கத்திரிக்காயை (சுமார் ஒரு சுஷாக்காயளவு பெரிதாயிருக்கும்) சமைத்தால் இரண்டு மூன்று பேருக்குப் போதுமானதாயுமிருக்கிறது, விலையோ வெகுசரசம். இந்தக் கத்திரிக்காய் ஒன்று 2 பைசா அல்லது மூன்றுபைசாவுக்குமேலில்லை. இதில் எண்ணிறந்த சிவாலயங்களும் விஷ்ணுவாலயங்களும் வாபி, கூப, தடாகங்களும், தீர்த்தங்களும் நிறைந்துள்ளதாயும், ஸ்ரீ காசிக்குத்தெற்காக இதுவே காசியாகவும் கோதாவரியே கங்கையாகவும் விளங்குகின்றன. இவ்விடம் கோதாவ்ரிக்கு இரண்டு தீரங்களிலும் எண்ணிறந்த கட்டிடங்களும் அநேக (Ghats) படித்துறைகளும் கோயில்களும் (இவிடத்தில் விசேஷஜலம் வராததால் நதியின்மத்தியிலும் சில கோவில்கள் கட்டப்பட்டிருக்கின்றன) உயர்ந்த மாளிகைகளும் நிறைந்து பிரகாசிக்கின்றது. இம்மாநதிக் காலையில் புஷ்பங்களாலும், சாயரக்ஷையில் எண்ணிறந்த தீபங்களாலு மலங்கரிக்கப்பட்டுப் பார்க்கப் பதினாயிரங்கண்கள் வேண்டும். இவிடமிருக்கும் பிராமணர்கள் தலைப்பாகையும் சட்டையுமணியாது வெளிவரார். ஆனால் வெகு ஆசாரசீலர்களாயும் பிரயாகை முதலிய விடங்களிலிருக்கும் திராவிட தேசத்தாரைப்போல் பேராசையில்லாமல் ஒருபைசா கொடுத்தாலும் அதைக்கோடியாகமதித்து மனமகிழ்ச்சியடையுமியல்புடையவராயு மிருக்கின்றார்கள். சற்கால க்ஷேபஞ்செய்வதற்கு எல்லா விஷயங்களிலும் இவ்வளவு சௌகரியமுள்ள இடம் (தென்தேசத்தில் உடுப்பி—சுப்பிரமணியம் முதலிய சில ஸ்தலங்கள் தவிர) இவ்விந்தியாவுக்குள் எங்குமே கிடையாது. இப்பஞ்சவடி தீரத்தில் அநேகசாதுக்களும், சந்நியாசிகளும், சத்காலக்ஷேபம் பண்ணுகிறவர்களும், தவம்புரியும் பெரியோரும், யோகர், சித்தர்களும் வசிக்கிறார்கள். இவிடம் யாத்திரையாக வருபவர்கள் இவர்களைப் பலவிதத்திலும் நன்கு ஆதரிக்கிறார்கள். வேதமோதியப் பிராமணருக்கு இங்கு தக்க வரும்படி கிடைக்கும், ஸ்ரீ ராமச்சந்திரனுமிதை விட்டுப்பிரியமனமிலாது தங்குவாராயினர்.

ஸ்ரீமத் கம்பராமாயணத்தில் :—

ஆனையகோர் தன்மையால் அவ்அருவிநீர் ஆற்றின் பாங்கார்
பனிதரு படிவப்பஞ்சவடியெனும் பருவச்சோலை
தனியிடமதனை நண்ணித்தம்பியால் சமைக்கப்பட்ட
இனிய பூஞ்சாலை யெய்தி யிருந்தனன் இராமனிப்பால்.

ஓங்கும் மராமோங்கி மலையோங்கி மணிலோங்கி
பூங்குலைக்குலாவு குளிர் சோலைபுடைவிம்மி
தாங்குதிரையாறு தவழ்குழல்தோர் குன்றின்
பாங்கருளதாலுறையுள் பஞ்சவடி மஞ்ச.'

ஸ்ரீ ராமர் எழுந்தருளியிருந்த பஞ்சவடி, கோதாவரியின் வடகரையில் ஐந்து ஆலவிருக்ஷமுள்ள காரணத்தால் அப்பெயர் காரணமாயிற்று. இவ்விருக்ஷங்களின் மத்தியில் சுரங்கமொன் றிருக்கிறது. தாசரதி கரதூஷணாதி யுத்தஞ்செய்தகாலத்தில் திருமகளை இப்பிலத்துக்குள் எழுந்தருள வருளினர். சீதாலக்ஷ்மண பரதசத்ருக்ன ஹனுமத் சமேதராய் இங்கு எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியினது திருக்கோவில் புனு பூநீ மந்தனல் அழகான அர்த்தமண்டப மஹாமண்டபங்களோ டுங் கட்டப்பட்டிருக்கிறது. ஓங்காரேஸ்வரர் முதலிய பல சிவா லயங்களுமிருக்கின்றன. காசியினின்று இம்மார்க்கமாக் கங்கை கொண்டுவருவோர் (கிழமார்க்கத்தில் இராஜமகேந்திரம்) இவ் விடம் பூஜைகள் செய்து இவ்விருத்த கங்கையை ஆக்காசிகங்கை யுடன் விதிப்படி சேர்க்கவேண்டும். இளையபெருமாள், இராவ ணனது சகோதரி கொடிய சூர்ப்பநகியினது நாசியை அறுத்த இடமாதலால் இதற்கு நாசிகை என்னும் பெயர்காரணமாயிற்று. நாசிகையென்பது கோதாவரியாற்றின் தென்கரையில் ஒரு பெரிய பட்டணமாயும், பஞ்சவடியென்பது அந்நதியின் உத்தர தீரத்தில் ஒரு சிறு கிராமமாயுமிப்போது இருக்கிறது. இவிட மிருந்து 45 மைல் தூரத்தில் வடகிழக்கிலுள்ள மண்மாடு ஜங்ஷ னுக்கு ரெயில்சார்ஜ் பதிமூன்றணு.

திரியம்பகம்:—மேற்சொன்ன பஞ்சவடியிலிருந்து வடமேற் காக இருபது மைலிருக்கிறது. இது கோதாவரி நதியின் உற் பத்தி ஸ்தானம்; வண்டிகள் சாதாரணமாய்க் கிடைக்காது. நடந் துசெல்ல மார்க்கமுண்டு. ஜாகா ஒருவாறு கிடைக்கும். த்ரிமூர் த்திகளுக்கும் இவிடம் ஆலயங்களுள்ளனவாயினும் சிவ சந்நிதா னம்பிரசித்தம். ஆரண்யமத்தியில் குளிர் மிகுதியான விடமாயி ருப்பதால் அதிகமாய்த் தாமதித்தல் கூடாது. மார்க்கமத்தியில் ஆறுமைல் தூரத்திலுள்ள கங்காப்பூரில் ஒன்பது ஆலயங்களும் கோதாவரி மலைபுச்சியினின்று விழும் காக்ஷியும் அபூர்வமான தாய்ப் பேரானந்தத்தை விளைவிக்கிறது. திரியம்பகத்தில் கோ முகிபோன்றஒருகற்பாறையினூடேயுள்ள குகையினின்றும் கோ தாவரி உற்பத்தியாகிப் பிரவகிக்கிறது. நாசிகையிலிருந்து பன்னி ரண்டு மைலில் மத்தியில் தங்க ஒரு குப்பமிருக்கிறது.

சித்திரகூடம்:—காசிக்குச் செல்லும் மேலமார்க்கத்தில் ஜப்பல்பூரிலிருந்து 166 மைலும் பிரயாகையிலிருந்து 62 மைலுமுள்ள மாணிக்பூர் ஜங்ஷன் ஸ்டேஷனில் பிரிந்து அங்கிருந்து மேற்கே 25 மைலிலுள்ள சித்திரகூட ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கிச் செல்லவேண்டும். ஸ்டேஷனுக்குச் சமீபத்திலுள்ள சித்திரகூட பருவதத்தில் சீதாலெக்ஷ்மணருடன் ஸ்ரீராமசந்திரமூர்த்தி பத்தே சில்லரை வருஷகாலம் எழுந்தருளியிருந்தனர், அதாவது வனவாசம் பதினன்குவருடத்தில முக்காற்பங்கை இவிடம் செலவிட்டருளினர். அதாவது வைகுண்டாதிபதியே இச்சித்திர கூடத்தை உவந்து மியர்ந்து வந்திய திருவுளம் பற்றக்கூடிய அவ்வளவு மகிமைகளைப் பெற்றதா யிருக்கின்றதென்கிற விவரத்தை ராமாயணத்தில் பார்க்கலாம். இப்புண்ணிய மலையின் முற்பக்கத்தி னடிவாரத்திலுள்ள ஸ்ரீ காந்தாநாத சுவாமியை ஆராதித்து வணங்கி கிரியை பிரதக்ஷணஞ் செய்யவேண்டும். மலையின் நான்கு பக்கங்களிலும அநேக தேவாலயங்கள், மடாலயங்கள், தருமசாலைகள், சத்திரஞ்சாவடிகள், அன்னசத்திரங்களும் நிறைந்திருக்கின்றன. இப்பருவதத்துக்குச் சமீபத்தில் இலக்ஷ்மண ஜாலா யென்றொரு சிறு குன்றிருக்கிறது. இம்மலையடியில் ஒரு ஜமீன்தார் வசிக்கிறார், இவரது வருஷ வருமானம் சுமார் நாற்பதினாயிரம் ரூபாய்.

நைமிசாரண்யம்:—காசியிலிருந்து ஹரித்துவாரத்துக்குச் செல்லும் மார்க்கத்தில் 221-ம் மைலிலிருக்கப்பட்ட ஸாண்டிலி ரெயில்வேஸ்டேஷனிலிருந்து 20 மைல் தூரத்தில் கங்கா தீரத்துக்குச் சமீபத்தில் பூர்வத்தில் ஆரண்யமாயிருந்த இந்த ப்ரதேசத்தின் மத்தியஸ்தானம் இப்போது நைமிசாரண்யமென்னும் பெயருடன் கூடிய ஒரு ஊராயிருக்கிறது. இவிடத்தில் மகாவிஷ்ணுவின் கோயிலும் தீர்த்தங்களுமிருக்கின்றன. ரிஷிகள் சதுர்முகனைப் பிரார்த்தித்தபோது குசை (தருப்பை) யை நேமி (சக்கரம்) போலச் சுருட்டிச் சிருஷ்டித்த ஸ்தலமாதலின் இது காரணப் பெயராயிற்று. சமஸ்தபுராணங்களும் சூதமகாமுனிவரால் பிருகுமகரிஷியினது குலதிலகர்களான எண்பத்தெண்ணாயிரம் செளனகாதி ரிஷிகளுக்கு இப்புண்ணியபதியில் திருவாய்மலர்ந்தருளப்பட்டு வரும்போது பாரதயுத்தத்தில் பந்துகலகத்தைப் பார்க்கச் சகியாத ஆதிசேஷா வதாரமாகிய ஸ்ரீபலராமர், தீர்த்த யாத்திரையாகப் புறப்பட்டுச் சென்றுவரும் மார்க்கமத்தியில் இந்நைமிசாரண்யத்தை யடைந்த காலத்து லிந்த சூதமாமுனிவர் மட்டும் எழுந்து மரியாதை செய்யாததால் கொன்றருளினர். அப்போது மற்றரிஷிகளின் புராண சிரவணந் தடைப்பட்டதுமன்றி, பகவான்

பிரமஹத்தியையு மடைந்தன ரென்றறைதலும் பயந்து உரோ மஹர்ஷனர் புத்திரராகிய உக்கிரசிரவஸருக்கு பாக்கி புராணங் களைக் கிரமப்படி சொல்லும்படி வரமளித்து, அந்த ரிஷிகளின் பிராயச்சித்த விதிப்படி, அந்த ரிஷிகளைத் துன்பப்படுத்தி வந்த இல்வலபுத்திரன் பல்வனைக்கொன்று, மேலே சொல்லப் பட்டி ருக்கிற பாரதவருஷ (கங்காயாத்திரை) யாத்திரையை யதோக் தமாய் செய்தருளினர். ஷி சாண்டலிஸ்டேஷனில் ஜாகாவும் நைமிசாரண்யஞ் செல்ல வண்டிகளுங் கிடைக்கும்.

வான்மீகியாச்சிரமம் :—மேலே கூறியிருக்கிற சித்திரகூடத் துக்கு இந்து மைலுக்குக் கிழக்கிலிருக்கிற கர்வீ ஸ்டேஷனிலி றங்கிச் செல்லவேண்டும், வண்டிக ளகப்படும். இப்பகவானது ஆச்சிரமம் வான்மீகி நதிக்கரையில் இப்போதுள்ள வான்மீகி யாச்சிரமமென்னும் ஊரிலுள்ளது. இந்த ஆச்சிரமத்தைச் சுற்றிச் சில பாகவதர்கள் ஸ்ரீ ராம பஜனை ஸதா செய்து கொண்டிருக் கின்றனர். இம்மகரிஷி ஸரஸ்வதி அவதாரமாய் வரப்பிரசாதத் தின் பேரில் ஸ்ரீமத் ராமாயணத்தைச் செய்தருளினர். இவரது சரித்திரம் உலகப் பிரஸித்தம்.

பரத்வாஜாச்சிரமம் :—மேற்குறித்த வான்மீகி யாச்சிரமத்தி னின்று வடக்கே சுமார் 35 மைலில் யமுனு தீரமுள்ளது, இவ் யமுனையின் உத்திர தீரத்தில் இப்பரத்வாஜாச்சிரமமுள்ளது; இதற்கு மேற்குறித்த மாணிக்பூர் ஜங்ஷனின்று வடகிழக்காய் பிரயாகைக்குப் போகும் மார்க்கத்திலுள்ள சங்கர்கார் ஸ்டேஷனி லிறங்கிச் சென்றால் சுமார் பதினெட்டு மைலாகிறது, வண்டிகள் சொல்ப விசாரணையின்மேல் அமர்த்தலாம், இவிடத்தில் சீதா லெக்ஷ்மண ஸ்ரீ ராமசந்திரனும் பரிவாரங்கள் சகிதமாய் இம் மாமுனிவரால் தேவலோகத்து காமதேனுவைக்கொண்டுப் பல வித அபூர்வ விசித்ர சித்ர பகவான்னங்களுடன் விருந்தளிக்கப் பட்டார்கள்.

தலைக்காவேரி என்னும் காவேரி உற்பத்தி:-மைசூருக்கு இரு ப்புப்பாதை வழியாய்ச்சென்று அங்கிருந்து சற்று வடமேற்குத் திசையில் சுமார் 76 மைலுள்ளகுடகும்டிகேரிக்கு, ஹான்சூர், குசால் நகரம், பெரியாபட்டணம், ஸொண்டி குப்பங்களின் வழி யாய் இரண்டு குதிரைகள் கட்டின டோங்காவண்டி, அல்லது கட்டை வண்டிகளின் வழியாய்ச்சென்று (ஷி டோங்காவண்டி 12-மணி நேரத்தில் போய்ச்சேர்ந்துவிடுகிறது. கட்டைவண்டி களானல் மூன்று நான்கு நாட்செல்லும், ஆனுல் மரங்களடர்ந்த விஸ்தாரமான கப்பி ரோட்டாயும் மார்க்க மத்தியில் தர்மான்ன சத்திரங்கள் முதலிய பிரயாண சௌகரியமுண்டு) மடிகேரியி

லிருந்து வண்டிகள் போகாத கால்மார்க்கமாய் மலைக்கணவாய் களின் வழியாய்ச் சென்றால் இருபது மைல், வண்டி ரோட்டு மார்க்கமாய்ச் சென்றால் 50 மைல், தலைக்காவேரி உற்பத்தியா கும் மலையினடிவாரமாகிய பாகமண்டலம் வரையில் வண்டிகள் செல்லும், அங்கிருந்து அம்மலையின்மேல் நான்கு மைல் ஏறிச் சென்றால் அவிடத்தில் மலைப்பாறையிலுள்ள ஒருவாவியினின் றும் காவேரி மாதா பிரவஹிக்கிறாள். துலா மாதப்பிறப்புக்கு ஆயிரக் கணக்காய் யாத்திரை செய்வார்கள். துலா காவேரி புராணத்தினால் மற்ற மஹிமைகள் விளங்கும்.



## ஸ்ரீ சுப்பிரமணியம்.



ஸ்ரீசுப்பிரமணியம்:—ஆறுமுகக் கடவுளுக்குரிய இம்மஹா ஸ்தலம் காடாரண்யத்தின் மத்தியில் நிர்மலமான சரவணநதியால் சூழப்பெற்றதாயும், தர்மசத்திரங்கள், மடாலயங்கள் நிறைந்து வாஸ யோக்கியத்துக்கு மிகவு மேற்றதாயும் திரு முருகக்கடவு ளின் பூர்ணுமிசம் விளங்கும்படியான திவ்ய க்ஷேத்திரமாயும் பிரகாசிக்கின்றது. ஷை தலைக்காவேரியிலிருந்து வடமேற்குத் திசையாய் காட்டுமார்க்கமாய் சுமார் 35 மைல் தூரமும் வண்டி மார்க்கமாய் 50 மைல் தூரமுமிருக்கிறது. இச்சுப்பிரமணிய

ரது கோயில் பிரகாரத்துக் குள்ளாகவே பிரதிதினம் யாத்திரை வாஸிகள் ச்மாராதனைகள் செய்து அப்பிராமண உச்சிஷ்டங்க ளில் ஆனந்த பரவசமாய்ப் புரண்டு கந்தனது திருவருளையடை வா. இத்தலம்புக்தி முக்தி யிரண்டினையுங் கொடுப்பதாயும் அரிய தவமியற்றுவதற்கு ஏற்ற க்ஷேத்திரமாயு மிருக்கிறது. இங்குசில பெரியோர்கள் பஞ்சவடி தீரத்தில் போலவே வசிக்கின் றனர். தென்னிந்தியாவில் பவபாஸ பந்தத்தைப்பற்றற ஒழித்த ஞானிகளுக்குத் தவமியற்றுவதற்கு ஏற்ற வசதிக ளமையப் பெற்ற க்ஷேத்திரம் வேறு கிடையாது. வேதமோதிய அந்த ணர்கள் குடும்ப சமேதராய் சுககால க்ஷேபஞ்செய்ய (தக்க வரும்படியுடன்) மார்க்கமுண்டு.



## தர்மஸ்தலம்.

தர்மஸ்தலம்:—இத்தலம் ஷை சுப்பிரமணியத் தினின்று மேற்காய் உடுப்பிக்குச் செல்லும் மார்க்கத்தில் சுமார் 30 மைலி லிருக்கிறது வண்டிகள் கிடைக்கும், இப்பபாதைக ளெல்லாம் காட்டுமார்க்கமா யிருந்தாலும் திருடர் துஷ்டமிருகங்கள் முத லியபயமில்லை. ஆங்காங்குஊர்களும், யாத்திரைக் காரர்களிடம் அன்புகூர்ந்து தங்களாலியன்ற எவ்வகை யுதவியும் செப்யும் மனதுடையவர்களாயு மிருக்கிறார்கள். இத்தரும ஸ்தலத்தில் விசேஷ தருமம் நடந்துவராநின்ற அன்னசத்திரமும் மற்ற தருமங்களும் உண்டு. இச்சந்நிதானத்தில் சுற்றுப்புறங்களி லுள்ளவர்கள் தங்கள் ஸிவில் கிரிமினல் விவகாரங்களை பூசாரி யின் பேரில் ஆவேசம்வர அவரது உத்திரவின்படி தீர்த்துக் கொள்ளுகிறார்கள். இதன் மூலமாய் இத் தேவாலயத்துக்கு விசேஷ வரும்படி கிடைக்கின்றது. இவை கன்னடராச்சியம்,

தலைக்காவேரி யிலிருந்து இதுவரை மலைநாடு. இவ்விடமிருந்து இனி மேற்காக நம் சோள தேசத்தை எல்லா விஷயங்களிலு மொத்ததா யிருக்கின்றது.



# திருக்குற்றாலம்—பாபநாசம்.

குற்றாலம்:—தென்காசி ரெயில் ஸ்டேஷனுக்குத் தென் மேற்கில் மூன்றுமைல் தூரத்திலுள்ள இவ்வரிய க்ஷேத்திரம் மலையின் பேரிலுள்ள நீர் வீழ்ச்சியின் அழகாலும் தீர்த்த மஹிமையினாலும் அதிக சிறப்புடையதா யிருக்கிறது. பிணியாளர் முதலானோர் தேகசௌக்கியத்தின் பொருட்டும் பற்பல இயற்கை விநோத கண்காக்ஷிகளாற் பெறக்கூடிய மனோற்சாகத்தின் பொருட்டும், அநேக சுகவாசிகள் இதைத் தங்கள் பிரியமான கோடை வாஸஸ்தானமாக்கி வருகின்றார்கள்.

பாபநாசம்:—அம்பா சமுத்திரம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கில் ஐந்துமைல் தூரத்திலுள்ள இவ்வரிய சிவ க்ஷேத்திரம் சமீபத்து மலையிலுள்ள பாண தீர்த்தவிசேஷ மஹிமையினால் அதிகப் பிரசித்தி யடைந்தது. இவ்விடத்தில் ஆடி, தை, அமாவாசைகளுக்கு விசேஷஜனங்கள் யாத்திரை செய்வார்கள். மேற்கூறிய மூன்றிடங்களிலும் வண்டி, ஜாகா முதலிய சௌகுரியங்களும் அன்னதானங்களு முண்டு இவைகளைத் தரிசிக்கத் தவறவிடக்கூடாத மாண்புடையன.

தென்னாட்டுப்புலி தீர்த்தபதி H. H. சிங்கம்பட்டி ஜமீன்தாரவர்கள் இவிடம் விசேஷ தருமங்களை மிகச்சிரத்தையுடன் செய்துவருகிறது மெச்சத்தகுந்தது. கர்னனுக்கொப்பான H. H. எட்டயபுரம் மகாராஜா அவர்கள் ஸ்ரீ காசி முதலிய க்ஷேத்திரங்களிலன்றி இவிடமும் சமயோசித தருமங்களை நடாத்திவருகின்றனர்.



# ஸ்ரீபத்திராசலம்.

பத்திராசலம்:—பெஜவாடா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து வடமேற்காய் 93 மைல் தூரத்திலுள்ள எல்லண்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு டோர்னக்கல் ஜங்ஷன் வழியாய்ச் சென்று அங் கிருந்து நேர்வடக்காய் கோதாவரி தீரத்தில் சுமார் 62 மைல், அல்லது இராஜமஹேந்திரத் திலிருந்து வடமேற்காய்ச் செல் லும் கோதாவரி நதிக்கரையின் பேரிலேயே 120 மைல் தூரத்தி லுள்ளது. எல்லண்டு ரயில்வே ஸ்டேஷனிலிருந்து செல்ல வேண்டிய 62 மைலும் காட்டுப் பாதையாகையால் வண்டி வாட கை ஜாஸ்தியாயிருக்கும், இராஜமஹேந்திரத்திலிருந்து நதி யிலேயே போகும் படகுகளில் சென்றால் சார்ஜுமும் சௌகரி யம், பத்திராசலம் வரையில் படகிலேயே போகலாம்; இந்த மார்க்கத்தில் ஆங்காங்கு தங்குவதற்கு அக்கிரஹாரங்களும் வசதியான ஜாகாக்களுமுண்டு. இப்போது இந்த மார்க்கம் ரெயில் போட்டு வருகிறார்கள். பரம பாகவத பக்தசிரோன் மணியான இராமதாஸ் சுவாமிகளால் ஆராதிக்கப்பட்டு முத்தி யீந்த ஸ்ரீ ராமசந்திர மூர்த்தி திருக்கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் திவ்ய க்ஷேத்திரம்; இவிடத்தில் நடக்கும் ஸ்ரீ ராம நவமி பிரம்மோற் சவத்துக்கு தெலுங்கு தேசம், ஐதரா பாத் சீமை முழுமையும் திரளான ஜனங்கள் யாத்திரை வருகிறா ர்கள்; இம்மகானது திவ்யசரித்திரம் லோகப் பிரசித்தம்.







# திருப்பதி-ஸ்ரீ காளாஸ்தி.



திருப்பதி-காளாஸ்தி :— முன்னது ரேணிகுண்டா ஸ்டேஷனுக்கு, எழு மைல் மேற்காகவும், மற்றது பதினுன்குமைல் கிழக்காகவுமிருக்கிறது. முன்னது உலகப்பிரசித்தமான ஸ்ரீ வெங்கடாசல ஸ்வாமியாகிய விஷ்ணுஸ்தலம். எல்லாக் காலங்களிலும் யாத்திரை வருவார்களானுலும் புரட்டாசி மாதத்தில் நடக்கும் பிரம்மோற்சவம் மிகவும் விசேஷம் ஸ்ரீ காளஹஸ்தி வாயுஸ்வாயம்புலிங்க பிரசித்த சிவக்ஷேத்திரம். மகாசிவராத்திரிக்குப் பிரம்மோற்சவம். ஆயிரக் கணக்கான ஜனங்கள் யாத்திரை செய்வார்கள். இது சுவர்ணமுகிநதி தீரத்திலுள்ளது. காளாஸ்தி ஸ்டேஷனிலிருந்து ஒரு மைலிருக்கிறது. பிரவாக காலத்தில் ஷை ஆற்றைப் படகுகளால் தாண்டிச் செல்லவேண்டும். இவிடத்தில் ஒரு ராஜா வசிக்கிருர். இரண்டு ஸ்தலங்களிலும் ஜாகா முதலிய எல்லா சௌகுரியங்களும் உண்டு. திருப்பதி மலையின் பேரிலும் மைசூர் மஹாராஜா அன்னதான சத்திரமும், காளாஸ்தியில் அன்ன சத்திரங்களு முண்டு. மற்றப்படி ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் சந்நிதான விசேஷம் ஒவ்வொரு இந்துவுக்கும் தெரிந்ததே. திருப்பதி மலையேறுவதற்கு முன் அடிவாரத்திலுள்ள புண்ணிய தீர்த்தமாகிய பாபநாச மென்னும் கபில தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்யாமலிரார். அடிவாரத்திலிருந்து திருச்சந்நிதானம் 7 மைல்.

அமிருத சரஸ் :—டில்லியிலிருந்து வடமேற்காய் 278-மைல் தூரத்தில் பஞ்சாப் தேசத்தைச் சேர்ந்த இருப்புப்பாதையிலுள்ள சிங்—ஸீக்ஜாதியாருக்கு முக்கிய ஸ்தலமாகிய ஒருபெரிய பட்டணம்; இந்நகரிலுள்ள சந்திரகாந்தக் கற்களினுல் கட்டப்

பட்டிருக்கிற விஸ்தாரமான அமிருதசரஸ் என்னும் தடாகமத்தியிலுள்ள ஸ்வர்ணம்-தங்கக்கோயிலுள் ஸீக்கியர்களின் மத சம்மந்தமான கிரந்தங்கள் காப்பாற்றிவைக்கப்பட்டிருக்கின்றன. இதை ஆதரித்துப்பூஜித்துவரும் மதாசாரியர்களிங்கு அறுநூறு பேருக்குமேல் இவிடத்திலேயே வசிக்கின்றனர். இச்சுவர்ண தேவாலயத்தைப்போல் சுவர்ணத்தாலாகிய தேவஸ்தானம் இவ்விந்தியாவிலாவது உலகத்திலாவது வேறெங்குமில்லை; இது பச்சிமகாசியாகக் கொண்டாடப்பட்டுவருகிறது.

டோல்பூர் :— ஆக்ராவிலிருந்து தெற்கே க்வாலியருக்குப் போகும் மார்க்கமத்தியில் இருப்புப்பாதைவழியாய் 42 மைல் தூரத்திலுள்ள இச்சமஸ்தான பட்டணத்திலிருந்து இரண்டு மைலில் ஸ்ரீ கிருஷ்ணபகவானால் பிரத்தியக்ஷத்தில் சிருஷ்டிக்கப்பட்ட மகத்ஸரோவர தீர்த்தமிருக்கிறது.

ஜாமல்பூர் :—கல்கத்தாவிலிருந்து நேர் வடமேற்குத் திசையில் (இருப்புப்பாதை வழியாக 297 மைலில் கங்காநதியின்பேரிலுள்ள இந்நகருக்கு மூன்றுமைல் தூரத்திலுள்ள சீதாகுண்ட தீர்த்தவிசேஷம்; நேர்விரோதமாக இத்தீர்த்தம் உஷ்ணோதகத் (வெந்நீர்ச்சுனைகள் வெந்நீரூற்றுகள்)தால் நிறைந்திருக்கிறதையும் தவறாமல் தரிசிக்கத்தவிர்க்கத்தகாதது.

## டேராடூன், ஹிமாசலம் அல்லது ஹிமோத்கிரி.

டேராடூன் :– ஹரித்துவாரத்தினின்று சற்று வடமேற்குத் திசையாக இருப்புப்பாதைவழியாக 32 மைலில் இமயகிரியினடிவாரத்திலுள்ளதோர் பட்டணம், இதற்குச் சுற்றிலுமுள்ள காடுகளில் காட்டானைகள் புலி, கரடி முதலியவைகள் ஜாஸ்தி, இவிடத்தில் ஸ்ரீராமர் தம்பி லெட்சுமணருடன் இராவணாசுரனை வதைக்கத்தவம்புரிந்தார்; அது பரமசிவனுடைய முக்கிய வாசஸ்தானமாகியகேதாரகண்டத்திலுள்ளது; இவிடத்திற்றான் பாண்டவர்கள் சுவர்க்கம்புகுதற்குமுந்தித்தங்கிப்போனவிடம். கோபாத பள்ளத்தாலுண்டாகிய ஸரோவரத்தைத்தாண்ட இங்கு தபசுசெய்துகொண்டிருந்த 60000 ரிஷிகளையும்பார்த்து இந்திரன்பரிகாஸஞ்செய்ய அந்தரிஷிகள் கோபங்கொண்டு அவ்விந்திரனைத் தொலைக்கும்படியாக வேறு இந்திரனைத் தங்கள் தபோபலத்தால் சிருஷ்டித்துக்கொண்டிருப்பதைப்பார்த்து பிரம்ஹா (நம்மொழிலும் போய்விடுமோ வென்று) அவர்களிடம் பிரத்தியக்ஷமாய் அவர்களைச் சமாதானப்படுத்தி வேண்டிய வரமளித்ததும் இந்த இடமே. இவிடம் தவசித்தி சீக்கிரம். இதற்குக் குருத்துவாரமென்றும் பெயர், ஏனெனின் சற்குருவின் கிருபா கடாக்ஷம் வெகு சீக்கிரத்திலிவிடத்தில் பெறப்படுகின்றமையால்.

கார்நல்:—டில்லியிலிருந்து அம்பல்லாவுக்குச் செல்லும் ரெயில்மார்க்கமத்தியில் டில்லியிலிருந்து வடக்குத்திசையில் 76 மைலிருக்கிறது; குருக்ஷேத்ரயுத்த பூமியில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் நடந்த மஹாபாரத யுத்தத்துக்கு முக்கிய காரணமாயிருக்கின்ற கர்னமகாராஜனுல் உற்பவிக்கப்பட்ட இந்நகரத்தில் கர்னனுடைய சரித்திரசம்பந்தமான இடங்களிருக்கின்றன.

பாகல்பூர்:—கல்கத்தாவிலிருந்து வடமேற்காய் 265 மைலில் இருப்புப்பாதையில் கங்காநதியின் பேரிலிருக்கிற இப்பட்டனாத்துக் கருகிலோடும் கங்காநதி மத்தியில் ஒருமலைக்குன்றிலிருக்கப்பட்ட கோபிநாத் தேவஸ்தானம் பேர் பெற்றது.

வினுகோண்டா:—குண்டக்கல்—பெஜவாடா இருப்புப்பாதையில் குண்டக்கல்லிலிருந்து வடகிழக்காய் 208 மைல் தூரத்திலுள்ள இந்த ஸ்டேஷனுக்குச் சமீபத்திலுள்ள இதேபெயருள்ள மலையின் பேரில், ஸ்ரீராமர் எழுந்தருளியிருந்தனர்; சீதையை இராவணன் தூக்கிக் கொண்டுபோனதாக முதல் முதல் கேட்ட இடம். தங்க மிக்கசௌகரியம்.

கோரிபிட்னூர்:—குண்டக்கல் பெங்களூர் இருப்புப்பாதையில் குண்டக்கல்லிலிருந்து தெற்கே 126 மைலில் உத்திரபினுகினி தீரத்திலுள்ள இவ்வூர் பாண்டவர்களின் மாமாவான விதுரமகாராஜனுக் குரிய இடம்.

டோட்டகுருகாட்:—மேலே சொன்ன கோரிபிட்னூருக்கு அடுத்த ஸ்டேஷனுகிய இவ்வூர் ஷை நதிதீரத்தில் ஷை விதுரனுல் சுமார் 4000 வருஷங்களுக்குமுன் வைத்துப் பயிராக்கப்பட்ட விதுராஸ்வத்தமென்னும் பழமையாகிய அரசமரத்தின் அஸ்வத்த நாராயணன் சந்நிதிக்கு யாத்திரை செய்வோரது தீராதவியாதிகளெல்லாம் தீர்ந்துவிடுகின்றன; இத்தலத்திற்கு யாத்திரை செய்யும் எண்ணிறந்தோரால் ஏராளமான காணிக்கை இத்தேவஸ்தலத்துக்கு வசூலாகின்றது.

பம்பாய்:—சென்னையிலிருந்து அரக்கோணம் ராயச்சூர், டோண்டு ஜங்ஷன், புனு கல்யாணி ஜங்ஷன்களின் வழியாய் 794 மைல் தூரமும் மெயிலானுல் ரூ 11—8—0வும் ஆர்டினெரியானுல் ரூ 8—5—0வும் ரயில்சார்ஜ்; இதுமேலசமுத்திரக்கரையிலுள்ள பலதீவுகளால் கட்டப்பட்டு மூன்று பக்கம் சமுத்திரத்தையுடைய ஒரு தீபகல்பமாக விருக்கிறது. இந்நகரின் துறை முகத்தைப்போல் உலகத்தில் வெகுசொற்பம்; மற்றெல்லா

விஷயங்களிலும் கல்கத்தாவுக் கடுத்த படியாயிருக்க துறைமுக த்தினழகு அதனிலும் மேன்மையுள்ளது. இம்மாநகரில் திராவிடரநேகர் மற்ற வடதேயத்தாரைப் போலவே குடியேறி பலதொழில்களையும் புரிகின்றனர். இந்நகரத்தில் செல்வத்தால் மேம்பட்டவர்கள் பார்ஸிஜாதியார். கல்கத்தாவைப் போலல்லா மல் ஆங்காங்கு அநேக தர்மசாலைகளும் அன்னசத்திரங்களும் தேவாலய மடாலயங்களு மிருக்கின்றன. ஏழைகளுக்கு விசே ஷதருமங்கள் செய்யப்படுகின்றன. சிலபிரபுக்கள் காசியாத்திரை போவோருக்கு ரெயில் சார்ஜ் பூராவும் கொடுத்தும் வேறுசிலர் பாத்திரங்கள் ஆடைகள் முதலியவுமினும் கொடுக்கின்றனர். கொஞ்சம் நல்ல சாரீரத்துடன்கூடி ஸ்ரீ மத் ராமாயண, பாரதங் களை வாசித் தருத்தஞ்சொல்ல வல்லோருக்கு அதிகமான திரவி யலாபங்கிடைக்கும். இம்மாபுரியில் பார்க்கவேண்டிய விடங்களா வன:—டவுன்ஹால், தங்கசாலை, ஸெண்ட்தாமஸ் கதீட்ரல், துறைமுகம், மாளுமிக் கட்டிடங்கள், இஞ்சினீரிலாகா கட்டிடங் கள் தபால் தந்தி ஆபீஸ்கள், ஹைகோர்ட், கவர்மெண்டு ஹவுஸ் கட்டிடங்கள், விக்டோரியா டெர்மினஸ் ரெயில்வேஸ்டேஷன். கைத்தொழில் கலாசாலையும் மண்வேலை செய்யுங்கட்டிடங்களை யும் பார்க்கத்தவறவேகூடாது க்ருபோர்ட்மார்க்கெட்டினழகை க்காலைவேளையில் பார்க்கவேண்டும், தவிரவும்மிருகாசயமியூஸிய மும், கிழவர்களுக்கும் வயதுசென்ற மற்றஜீவப் பிராணிகளுக்கு மேற்பட்டிருக்கும் தர்மசாலையும் வெகு விநோதமானது. பார்ஸி ஜாதியார் தங்கள் பிணங்களை கழுகு முதலியபறவைகளுக்கு எறி யும் (இவர்கள் சுடுவதுமில்லை புதைப்பதுமில்லை) டவர் ஆப்ஸை லென்ஸ்-மவுனகிரியென்னும் மலையிலிருந்துபம்பாய பட்டணம் முழுமையும் நன்றாய்ப்பார்க்கலாம்; மற்றப்படி இதுஒருபெரிய இராஜாங்க தேவேந்திர நகராதலான் சாதாரணஜனங்களுக்கு ஒவ்வொன்றும் (ஒருபிரபுவின் வீடுகூட) அதிசயமாய்த்தோன் றும்.

ஜெய்ப்பூர்:—துவாரகை-மதுரா இருப்புப்பாதை மார்க்கத் தில் மதுராவிலிருந்து தென்மேற்காக 160 மைல் தூரத்திலுள்ள இந்நகரின் அழகுக்காகவே பார்க்கவேண்டியதா யிருக்கிறது. இவிடத்தில் தர்மாத்மாவான மகாராஜா வசிக்கிறார், அநேக கோ யில்கள், குளங்கள், மியூஸியம் அரண்மனை, ஜெய்ப்பூரிலிருந்து ஏழுமைலிலுள்ள ஆம்பர்என்னும் புராதன இராஜதானி, புலி, கா டி கட்டிடசாலைகள் முதலியவைகள் பார்க்கத் தகுந்தது, ஜாகா முதலியவைகளுக்கு தர்மசாலைகள் முதலிய சௌகுரியங்க ளுண்டு. இது இந்தியாவின் தற்கால சுதேச ராஜ்ஜியங்களில்

அதி அழகுள்ளதாய் மேற்சொன்ன பட்டணங்களைப்போல் எல்லா விஷயங்களும் பொருந்தி பார்க்கத்தகுந்ததாயிருக்கிறது. இவி டத்தில் மகம்மதியரும் இந்துக்களும் சமபாகமாகஇருக்கிறார்கள். இதில் ஒரு பெரிய மிலிடெரி கண்டோன்மெண்டிருக்கிறது.

## அட்டாக்:—ஸிந்து தீரம்.

அட்டாக்:—ஸப்தநதிகளி லொன்றாகிய ஸிந்துநதி தீரத்திலு ள்ள இந்த ரெயில்வேஸ்டேஷன், டில்லியிலிருந்து வடமேற்காக 591 மைலிருக்கிறது. ஸிந்துஸ்நாநத்துக்காக இந்த ஊரைப்பற்றி ப்பேசுகிறோமேயல்லது வேறில்லை. மேற்குறித்தலாகூரிலிருந்து இங்கு வரும் மார்க்கத்தில் பஞ்சநதிகளிலொன்றாகிய ஜீலம்ஸ்டே ஷனிலோடும் ஜீலம்நதியில் தங்கியும், அவசியமானால் ராவல்பி ண்டி ரெயில் ஸ்டேஷனிலுமிறங்கி வரலாம்; இந்த அட்டாக்கு க்கு மேற்கில் 58 மைல் தூரத்திலுள்ள பெஷாவர் வரையி லும் இருப்புப்பாதை சென்று அதோடு முடிந்துவிடுகிறது. இந் தியாவின் 56 தேசங்களுள் அங்க, வங்க, கலிங்க, சௌராஷ்டர, மகதமென்னும் இவ்வைந்துக்கும் க்ஷேத்திர தீர்த்தயாத்திரைக் காகவன்றி வேறுகாரணத்தால் போகக் கூடாதென்றும் ஸிந்து நதியைத் தாண்டினால் மதப்ரஷ்டத்வம் சம்பவிக்கிறதென்றும் நம்மதாசாரியர் கூறுகின்றனர். ஏனெனில் ஸிந்துநதிக்கு மேற் கில் மிலேச்சரதுதேசம்; ஷை ஐந்து தேசங்களிலும் ஆசாரங்க ளொன்றுமே கிடையாது. தவிரவும் வடக்கில் இமயமலை, கிழக் கில் முன்சொல்லப்பட்டிருக்கிற த்வாரகை—மதுரா இருப்புப் பாதை லைன், தெற்கில் த்வாரகை—அதாவது குஜராத்திதேசம், மேற்கில் சிந்துநதி, இதற்குட்பட்ட தென்வடல் சுமார் 800 கிழ மேல் 400 மைல் அதாவது 320,000 சதுரமைல் விஸ்தீரண முள்ள இப்ரதேசத்தில் எவ்விதமான தீர்த்த, மூர்த்தி விசேஷங் களுமிருப்பதாகத்தெரியவில்லை; (இப்பரதகண்டத்தைச்சேர்ந்த தாயிருந்தாலும்) அப்படி ஏதாவதொன்றிரண்டிருந்தாலும் இப் பிரதேசத்தில் மகமதியர்மூன்றிலிரண்டுபங்கும், ஹிந்துக்கள் மூன்றிலொரு பங்குமாயிருக்கிறார்கள். மகம்மதியர் ஜாஸ்தியா யிருத்தலால் அவிடத்திலுள்ள இந்துக்களும் பாதி இஸ்லாமாகி விட்டனர். ஆனால் இப்பிரதேசத்துக்கு ஷை ஐந்து தேசங்களைப் போல் தடைப்படுத்தப்படவில்லை.

லக்னௌ:—ஸ்ரீகாசியினின்று ஹரித்துவாரத்துக்குப் போ கும் மார்க்கத்தில் 190 மைல் தூரத்திலுள்ள லக்ஷ்மணபுரி என்னுமிந்நகர் இவ்விந்தியாவின் கல்கத்தா, பம்பாய், சென்னை நகரங்களுக் கடுத்த, நான்காவது மாநகரமாயிருக்கிறது. இது

கௌமதிநதி தீர்த்திலுள்ளது. பார்க்கவேண்டிய அநேகவிஷயங்களிம்மா நகரிலடங்கியுள்ளன.

நண்ரோ:—காசி மேலமார்க்கத்தில் புஸாவால் ஜங்ஷனிலிருந்து கிழக்கே நாகப்பூருக்குச் செல்லும் ரெயில் மார்க்கத்தில் ஷெ. ஜங்ஷனிலிருந்து 49-மைலிலுள்ள இவ்வூரில் பூமிக்குள் கட்டப்பட்டிருக்கிற காளிகா தேவிக்குரிய ஒரு கோயிலிருக்கிறது! இவ்விந்தியாவில் வேறெங்குமில்லை, பார்க்கத்தகுந்தது.

கஸ்ரா:—இகட்புரி:—பம்பாயினின்று மன்மாடுக்குச் செல்லும் இருப்புப்பாதையில் முறையே 75-85 வது மைல்களிலுள்ள இந்த இரண்டு ஸ்டேஷன்களுக்கும் மத்தியில் அநேக இடங்களில் மலைகளைக் குடைந்து ரெயில் உள்ளே செல்லுகின்றது. இதில் அதிக நீளமானதும் உயரமானதும் எஹிகெயான் என்னும் டன்னல், இது இவ்விந்தியாவிலுள்ள டன்னல்களுக்கெல்லாம் அதிக நீளமுள்ளதும் உயரமுள்ளதுமாயிருக்கிறது.

பூன்பூன்—புனப்புன:(இதற்குவடக்கே கங்காதிரத்திலுள்ள பாடலீபுரம் 9மைல்) ஸ்ரீமத்கயாவிலிருந்து வடக்கேஇருப்புப்பாதைவழியாய் 49மைலிலிருக்கிற இப்புண்ணிய க்ஷேத்திரத்தில் ஓடும் பூன்பூன் என்னும்நதியில் ஸ்ரீமத்கயாவில் பிதிரர்களுக்குப்பிண்டம் போடுவதற்கு முன்னுல் இந்நதியில்தீர்த்த சிராத்தம் செய்யவேண்டும் இவிடம் இந்நதியில் போடும் பிண்டங்கள் பிதிரர்களின் கோடிபபாதகங்களை யொழித்து கயாபிண்டங்களை யேற்கும்படியான பரிசுத்தராக்குகின்றன.

ஜெர்ஸப்பா நீர்வீழ்ச்சி:—சிவமொக்கா(மைசூர் ராச்சியம்) ரெயில்ஸ்டேஷனிலிருந்து 64 மைல் தூரத்திலிருக்கிற இதற்குப் போக 15மைலிலிருக்கிற ஸாகர் என்னும் சிறியபட்டணம் வரையில் குதிரை டோங்காவண்டிகள் கிடைக்கும் (ஆள் 1 க்கு சார்ஜ் ரூ 3) அங்கிருந்து வாடகைவண்டிகள் அமர்த்திக்கொள்ள வேண்டும். இந்நீர்வீழ்ச்சியைப் போன்றது உலகத்தில் வெகு சொற்பம். இந்தியாவுக்குள் இதுவே முதன்மையானது; இதற்குச்சமீபத்தில் காட்டுப்பாதையாக ஸ்ரீங்கேரிமடம் இருக்கிறது. இந்நீர்வீழ்ச்சியினழகைப் பார்த்தாலொழிய சொல்லிமுடியாது சர்வேஸ்வரனுடைய சிருஷ்டியில் இதுஒரு அபூர்வதிருவிளையாட்டு! இதைவிட நேத்ராநந்தம் இவ்வுலகில் வேறு இல்லை.

வைதரணிரோட்:—காசிகீழ மார்க்கத்தில் ஸ்ரீ ஜகந்நாதத்துக்குப்பிரியும் கூர்டா ஜங்ஷன் ஸ்டேஷனுக்கு வடக்கே 82 மைலில் இருக்கும் இந்த ஸ்டேஷனிலிருந்து இந்நதி பத்துமைலிருக்கிறது. தீர்த்த மூர்த்தி விசேஷம். இந்நதியில் ஸ்நாநஞ்செய்பவர்கள் பரலோகத்துக்கு (வேதத்திற் கூறியுள்ளவாறு)வைதரணீநதியைத் தேவாம்ஸம் பெற்று இனிதில் கடப்பர். வண்டிகள் கிடைக்கும் ஜாகை உண்டு.

புவனேஷ்வர்.



புவனேஷ்வர் :—ஷை கூர்டா ஜங்ஷனுக்கு அடுத்த வடக்கில் 12 மைலிலுள்ள இந்த மகா சிவக்ஷேத்திரம் மிகவும் பிரசித்தி பெற்றது. ஒரு காலத்தில் 7000 கோயில்கள் இப்போதிருக்கும் கோயில்களைச் சுற்றிலுமிருந்தன. இப்போது அவைகளில் நல்ல ஸ்திதியில் 500-க்கு மேலிருக்கின்றன ; என்ன அற்புதகாக்ஷி ! ஏககாலத்தில் தனித்தனி விமானங்களோடு கூடிய ஐந்நூறு கோயில்களைத் தரிசிப்பது யாருக்குக் கிடைக்கும்!! இவைகளில் முக்கியமான தேவாலயம் ஐந்நூறு அடி சச்சதுரமுள்ள வெளிப் ப்ராகாரத்துள் விளங்கா நிற்கும் இலிங்கராஜ் மஹாதேவ். ஷை கம்பவுண்டுக்குள் மற்றுமநேக சில்லறை சிவா

லயங்களிருக்கின்றன. அவைகளில் முக்தேஸ்வர் சிவாலயத்தில் செய்திருக்கும் கருங்கல் வேலை, இழைப்பு வேலைகளின் நாணயமும், சிறப்பும் இவ்விந்தியாவி லெங்குமே யில்லை. மதுரை மீனாக்ஷிகோயில், ஆவுடையார் கோவில், சிதம்பரம், இராமேசுவரம் இவைகளெல்லாம் இதற்கப்புறந்தான். இவைகளைக் கட்டின மகராஜ ரின்னாரென்றும், கட்டப்பட்ட சரியான காலமும் விளங்கவில்லை, மேற்குறித்த இலிங்க ராஜ்மகதேவ் தேவாலய கம்பவுண்டுக்குள் ஐரோப்பியர் விடப்பட மாட்டார்கள். மற்ற கோயில்களுக்குள் போகலாம்; ஷை இலிங்கராஜ் மகதேவ், முக்தேஷ்வர் முதலான கோயில்களி னழகையும் மஹிமையும் ஐரோப்பியர் முதலானோர் பார்க்கும் பொருட்டு அவர்களின் வேண்டுகோளின்படி ஷை கோயில் கம்பவுண்டின் ஈசான்யத்தில் ஒரு பிளாட்பாரம் (உயர்ந்த மேடை) கட்டப்பட்டிருக்கிறது.

சம்பா:—கல்கத்தாவிலிருந்து நாகப்பூருக்குப் போகும் இருப்புப்பாதையில் கல்கத்தாவிலிருந்து 412 மைலிலும், நாகப்பூரிலிருந்து 289 மைலிலும், ஹஸ்த தேவ் நதி தீரத்திலிருக்கப்பட்ட மஹாதேவ் சந்நிதானத்தில் எவ்வித வியாதிகளும் தீர்க்கப்படுகின்றன வென்பது வெகு பிரசித்தமான சுவானுபவம்.

டன்டன்:—கார்க்பூர் ஜங்ஷனிலிருந்து தெற்காக 32 மைலிலுள்ள இக்ஷேத்திரத்தில் போஜராஜாவினால் கட்டப்பட்டிருக்கிற சிவாலயத்தின் சந்நிதியில் மிகவும் பெரிதும் உயரமுமான கருங்கல்லாலாகிய நந்தி யொன்றிருக்கிறது சமாளேஸ்வரி சந்நிதி விசேஷம், இதிலிருக்கிற வித்தியாதர், ஷஸங்கர் என்னுமிரண்டுபெரிய அழகிய ஸரோவரங்களும் பூமிக்கு உள்ளாகவே கட்டப்பட்டிருக்கும் ஒரு மைல் தூரமுள்ள சுரங்கத்தினால் சேர்க்கப் பட்டிருக்கிறதைப் பார்க்கத் தகுந்தது.

கோலாகாட்:—கார்க்பூர் ஜங்ஷனிலிருந்து கல்கத்தாவுக்குப் போகும் இருப்புப் பாதையிலுள்ள, கார்க்பூரிலிருந்து 38 மைலிலும் கல்கத்தாவினின்று 34 மைலிலுமுள்ள இந்த ஸ்டேஷனுக்குப் பத்து மைலுக்குத் தெற்கில் ரூபநாராயண நதி தீரத்திலும் இந்நதி சமுத்திர சங்கமமாகு மிடத்திலுமுள்ள தம்லூக் என்னும் கிருஷ்ணார்ஜுன க்ஷேத்திரம் பிரசித்திபெற்று விளங்குகிறது; அவிடத்திலரசாண்ட கைவர்த்த ராஜவம்ச மகாராஜாக்களால் சுமார் மூவாயிரம் வருஷங்களுக்கு முன் கட்டப்பட்டவைகளாயிருந்தாலும், அவைகளை வெகு ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்துப் போற்றிவரும் காரணத்தினால் பழுதடையாம லிருக்கிறது. இவிடத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்கும் தனித்தனி இரண்டு கோயில்கள் வெகு பிரசித்தமா யிருக்கின்றன.

இதன் வரலாறு:—யுதிஷ்டிர மகாராஜா அஸ்வமேதயாகம் செய்யும் பொருட்டு ஸ்ரீ கிருஷ்ணன், அர்ச்சுன னிருவர்களின் பாதுகாப்பின்மேல் பூப்பிரதக்ஷிண திக்விஜயத்துக்காக விடப்பட்ட அஸ்வமானது, இந்நகரின் அரசகுமாரனால் பிடித்துக்கட்டப்படவே சதுரங்க சைனியங்களுடன் கூடிய அந்த ராஜகுமாரனுக்கும் அர்ஜுனனுக்கும் மிகவும் கடுமையான யுத்தம் வெகுநேரம் நடந்தும் அர்ஜுனனால் அந்த ராஜகுமாரனை ஜயிக்கமுடியாமல் சமீபத்திலிருந்த கிருஷ்ணபரமாத்மாவினிடம் சென்று இதற்கு யாதுகாரணமென்று வினவ, ஹே அர்ஜுனா, நீ யுத்தஞ்செய்பவனுடைய பிதா மிகவும் உறுதியுள்ள விஷ்ணு பக்தனாகையால் உன்பலம் அவனைவெல்லாது, வேறு உபாயத்தால் தான் ஜயிக்கவேண்டுமென்ற ரகசியத்தைச் சொன்னவுடனே, கிருஷ்ணார்ஜுன ரிருவர்களும் பிராமணர்களாக மாறுவேடம் பூண்டு தந்திரத்தால் ஜயிக்க எண்ணங் கொண்டு அந்த விஷ்ணுபக்த ராஜ னரண்மனைக்குள் சென்றார்கள். அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு அந்த மகாராஜா விஷ்ணுபக்தி செய்யும் விதத்தையும் அவனது வைராக்கியத்தையும் குறித்துக் காண்பித்தபோது ஆ!இவ்வளவு பக்தியுள்ள அடியானை மோசம் செய்ய உத்தேசித்தது மிகவும் பாதகமான தென்று அர்ஜுனன் சொல்லவும், அவ்விருவரும் தங்கள் சுயரூபத்தை யடைதலும் மஹாராஜன் திடுக்கிட்டு "நான் இதுவரையில் எந்த பரமாத்மாவின் திருவருளுக்காகத் தவம் பக்திபுரிந்து வருகிறேனோ அந்தப் பரம்பொருளே பிரத்தியக்ஷமாய் விட்டதென்று மன மகிழ்ந்து அவர்கள் சரணாரவிந்தத்தை யடைந்து "தங்கள் தரிசனம் எப்போது மெனக்குக் கிடைத்துக் கொண்டு தங்கள் சந்நிதானத்தி லிருக்கும்படியான வரத்தைக் கொடுக்கவேண்டு" மென்று பிரார்த்தித்தபடி வரமளிக்கப்படலும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனர்களின் திருக் கோயில்கள் கட்டப்பட்டு அது முதல் வெகு பிரசித்தமாய் விளங்கிவருகின்றது.

நருமதை உற்பத்தி:—ஜப்பல் பூரிலிருந்து பிரயாகைக்குப் போகும் இருப்புப் பாதையிலிருக்கும் கட்நி ஜங்ஷனிலிருந்து, தென் கிழக்காக பிலாஸ்பூர் இருப்புப்பாதையிலுள்ள பெண்ட்ரா ரோட் ஸ்டேஷனிலிருந்து 25 மைல் மேற்கே அமரகண்டக் ப்ரதேசத்திலிருக்கிற அமரநாத் தேவஸ்தானத்துக்குச் சமீபத்தில் இம்மஹா நருமதை நதி உற்பத்தியாகிறது. பச்சிமவாகினியாகிய இந்நதி, இக்கலி யையாயிரத்துக்கு மேல் கங்கையினும் மேன்மை யுடைத்தென்று மத்திய இந்தியா ஜனங்க ளெல்லோரும் ஏராளமாய் யாத்திரை செய்கிறார்கள். இதே ஸ்தலத்தில்

ஸோணபத்திரை, மகாநதிகளு முற்பத்தியாகி ஒவ்வொன்றும் தன் தன் மார்க்கமாய் இம்மூன்று நதிகளும் பிரிந்தோடும் காக்ஷி அற்புத வானந்தத்தினு மாநந்தம். சூரிய, சந்திர கிரஹண புண்ய காலங்களில் ஆயிரக் கணக்கான யாத்திரிகர்கள் வெகு தூரங்களி லிருந்து வருகிறார்கள் வெகுப் பிரஸித்த புண்ணிய தீர்த்த விசேஷம்.

அஹியரி:—கல்கத்தாவுக்கு நேர்வடமேற்கில் 320 மைல் தூரத்திலிருக்கிற "காம்டௌல்" ரெயில்வேஸ்டேஷனிலிருந்து ஒரு மைலிலிருக்கிற இந்த யாத்திரை ஸ்தலத்தில் கௌதம பத்னியான அகல்யை பரகதி யடைந்தவிடம், ஸ்ரீராமர் தேவாலயம் பிரபலம்.

அஹோபலம்:—கர்நூல்ஜில்லா நந்தியால் ரெயில்ஸ்டேஷனிலிருந்து 30 மைலிலுள்ள இத்தலத்தினது மலையின் அடிவாரத்தில் ஒன்று, மத்தியில் ஒன்று, உச்சியில் ஒன்று ஆக மூன்று தேவாலயங்களும் ஒரு பிரசித்த ஆதீனமடமுமிருக்கின்றன.



## புஷ்கரம்.

புஷ்கரம்:—மதுராவிலிருந்து தென்மேற்கில் 220 மைலிலிருக்கிற ஆஜ்மீர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு ஏழுமைல் தென்மேற்கிலிருக்கிற இந்த சதுர்முகப் பிரம்ஹா க்ஷேத்திரம் மிகப் பிரபலமானது, இவ்விந்தியாவுக்குள் தனி பிரம்ஹாலயம் வேறெங்குமில்லை.

அமரகண்டக்.—கல்கத்தாவுக்குத் தென்மேற்கில் 508 மைலிலுள்ள பெந்த்ராரோட் ஸ்டேஷனிலிறங்கிச் செல்லவேண்டும்; இது நருமதையி னுற்பத்தியுடன், ஸ்ரீ காளிதாஸ மஹாகவியினுற்பத்தி ஸ்தலமாயுமிருக்கிறது.

அமர்நாத்:—பரமசிவன் சதா வசித்துக் கொண்டிருக்கிற இப்புண்ணிய க்ஷேத்திரம் காஸ்மீரத்தி லிருக்கிறது. கல்கத்தா

யினின்று வடமேற்கில் 1393 மைலிலுள்ள ராவல்பிண்டி வரையில் இருப்புப்பாதையாலும் அங்கிருந்து காஷ்மீர ராஜதானியாகிய ஸ்ரீ நகர்மார்க்கமாய் $227\frac{1}{2}$ மைல் குதிரை டோங்காவண்டி மூலமாயும் செல்லவேண்டும்.

அம்பர்நாத்:—ஆதியந்த மில்லாதவன் — இச்சிவ க்ஷேத்திரம் பம்பாயிலிருந்து ராய்ச்சூர் மார்க்கத்தில் 38 மைலுள்ளது, இக்கோயிலின் அழகுக்கு நிகர் இவ்விராஜதானியிலில்லை.





## அம்ரோட்டி.



அம்ரோட்டி:— பம்பாயிலிருந்து வடகிழக்காய் 419 மைலில் (நாகப்பூர் சமீபம்) உள்ள இவ்விடத்தில்தான் விதர்ப்ப தேசத்து ருக்மின் ராஜா தன் சகோதரி ருக்மணியை சிசுபாலனுக்கு விவாகஞ் செய்யுமுன்னர், விவாக பூர்வாங்கங்கள் நடத்தின போது விக்னேஸ்வர பூஜைசெய்ய மறந்துவிட்டதினால் ஸ்ரீ கிருஷ்ண பகவானால் ருக்மணியைத் தூக்கிக்கொண்டு போக நேரிட்டு விவாகம் விக்னத்தை யடைந்தது.







## அம்ரேஷ்வர்.

அம்ரேஷ்வர்:—முன் சொன்ன ஆஜ்மீரிலிருந்து தென்கிழக்காய் 356 மைலும், கண்ட்வா ஜங்ஷனிலிருந்து வடமேற்காய் 37

மைலிலுமுள்ள மொர்டாகா ஸ்டேஷனிலிருந்து 7 மைலில் நருமதா தீரத்திலுள்ள இப்பிரபல சிவக்ஷேத்திரம் ஹோங்கார்ஜி மஹாதேவருக்குரியது; இதற்கு ஹோங்காரமென்னும் பெயருமுண்டு. இப்புராதனப் பிரஸித்த தேவஸ்தானம் ஸ்ரீ மஹாபாரதகாலத்தில் கட்டப்பட்டது.

அந்தர்வேதி:— மதிராஸ் ஸ்டேஷனிலிருந்து வடக்கில் 347 மைலில் நிடதவோலு ஸ்டேஷனிலிறங்கிச் செல்லவேண்டும். இவிடம்மாகசுத்த ஏகாதசியில் நடக்கும் "சப்தசாதனயாத்ரா" வெகுவிசேஷம்.



# அரியபாத் அல்லது ஹரிபாத்.

அரியபாத் அல்லது ஹரிபாத்:—கொல்லம் செயிவேஸ்டேஷனிலிருந்து 36 மைலிலுள்ள இவ்வேலாயுதர் க்ஷேத்திரத்தில் வருஷத்தில் பிரிபலமான மூன்று உற்சவங்கள் நடந்தேறி வருகின்றன.

அதிரலா:—மதிராஸிலிருந்து 137 மைல் வடமேற்கிலுள்ள ராஜம்பேட்டை ரயில்ஸ்டேஷனிலிருந்து 6 மைலில் செய்யாற்றங்கரையிலிலுள்ள இத்தல தேவாலயத்து ளமையப்பெற்றிருக்கிற புஷ்கரணி தீர்த்தத்தில் தான், ஸ்ரீ மஹாவிஷ்ணுவினவதாரமாகிய பரசுராமர் தன்" மாதுர்ஹத்யை" தாயைக் கொன்ற கொடும்பாவத்தை நிவர்த்தித்துக் கொண்டனர். மஹாசிவராத்திரி ஸ்நாநவிசேஷம்;

அவநி—:மதிராஸிலிருந்து பெங்ளூர் மார்க்கத்தில் 176 மைலில் பௌரிங்பேட் ஸ்டேஷனிலிருந்து 22 மைலிருக்கிறது, இவ்விடத்தில் ஸ்ரீ ராமர் ராவணவதஞ் செய்து திரும்புகாலில் தங்கியருளின ஸ்தலமுமன்றி, சீதாபிராட்டியார் ஸ்ரீ ராமரால் ஆரண்யத்தில் கொண்டுபோய் விடப்பட்ட பிறகு இவ்விடத்துள்ள ஸ்ரீ வால்மீக மகரிஷி ஆச்சிரமத்தில் தான் தங்கியிருந்து குச, லவாள் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றது, தவிரவும் ஸ்மார்த்த மடம் விசேஷமாய் ஒன்றுண்டு

பலிகட்டம்:—சென்னபட்டணத்திலிருந்து வடகிழக்காய் 439 மைலில் நரஸப்பட்டணம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 23 மைலிருக்கிறது; வராஹநதிக்கரையிலிருக்கிற இவிடத்தில்தான் பலி சக்கிரவர்த்தி யாகஞ்செய்து மோக்ஷமடைந்தது; ஷ்டி யாக சாலையில் நாளைக்கும் யாகச்சாம்பல் வெட்ட வெட்ட வந்து கொண்டேயிருக்கிறது.

பத்ட்ராஸ:—அயோத்தி ஸ்டேஷனிலிருந்து தெற்கே 12 மைலிலுள்ள இவிடத்தில் தான் ஸ்ரீராமன் பரதனைச் சந்தித்த விடம்; இத்தலம் மஹாரா நதிக்கரையிலிருக்கிறது. இதற்குச் சமீபத்திலுள்ள "பரதகுண்டத்தில் ஸ்ரீராமநவமியில் ஒருமேலா" உற்சவம் நடத்தப்படுகிறது.

பாண்டக்:—பம்பாயிலிருந்து நாகப்பூருக்குப் போகும் மார்க்கத்தில் வார்டா ஜங்ஷனிலிருந்து தென்கிழக்கில் 72 மைலிலிருக்கிற சண்டாஸ்டேஷனிலிருந்து, மேற்கில் 18 மைலிலுள்ளது, இவ்விடத்தில்தான் ஸ்ரீ மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிற " ஸம்கர்ஞ என்னும்" அஸ்வமேதயாகக் குதிரை யுத்தம் நடத்த பத்ராவதி பட்டணமிருந்தது ; இதற்குச் சான்ருக சமீபத்திலிருக்கிற திவாலா விஞ்சஸனி பர்வதங்களில் பத்ராவத் தேவஸ்தானமும் ஸ்ரீ பீமனுடைய பிரம்ஹாண்டமான பாதங்களும், இடிந்துபோன கோட்டை கொத்தளங்கள், வாபி, கூப, தடாகாதிகளு மிருக்கின்றன.

டாகர்:—பம்பாயிலிருந்து வடக்கே காசிமார்க்கச் சமீபத்தில் 289 மைலிலுள்ள ஆநந்த் ஸ்டேஷனிலிருந்து 20 மைலிலுள்ள இத்தலத்தில் த்வாரகையினின்று கொண்டு வரப்பட்டிருக்கிற ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் தேவாலயம் வெகு பிரசித்தம் ; இவிடமிருந்து வடக்கே 10 மைலில் உஷ்ண நீர்ச்சுனைகள் வெகு விசேஷம்.

டாம்ரேயன்:—கல்கத்தாவிலிருந்து காசிக்குச்செல்லும் மார்க்கத்தில் 411 வது மைலிலிருக்கிற பக்ஸார் ஸ்டேஷனிலிருந்து

10 மைலிலுள்ள இவிடத்தில்தான் கௌதமபத்நியான அஹல்யைசிலே=கல்ரூப சாபத்தினின்றும் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியினது ஸ்ரீ பாதஸ்பரிசத்தினுல் விடுபட்டு திவ்யமங்கள தேஜோரூபத்தைப் பெற்று சுவர்க்கஞ் சார்ந்தது

தேவ்பந்த்:—டில்லியிலிருந்து வடமேற்கில் 90 மைலில், இவிடத்திலுள்ள தேவிகுண்ட மென்னும் ஒரு அழகான சிறிய ஏரிக்கரைகளில் அநேகஸ்நாநகட்டங்கள், தேவாலயங்கள், (ஸதி பர்த்தாவுடனுயிர்துறத்தல்) ஸதிமடாலயங்களால் சிறப்புற்று விசேஷபுண்ணிய தீர்த்தயாத்திரையாகவிளங்குவதற்கு முக்கிய காரணம்; இவ்விடத்தில் தான் பஞ்சபாண்டவர்கள் முதல் அஞ்ஞாத வனவாஸஞ்செய்தக்ஷேத்திரம்.



## டிவால்வாரா.

டிவால்வாரா:—புனுவிலிருந்து 97 மைல் தெற்கிலிருக்கிற அர்வி ரோட்ஸ்டேஷனிலிருந்து மேற்கே வரதாநதிதீரத்திலுள்ள இச்சிறு கிராமத்தில், ருக்மணிதேவியின் அதி அழகான தேவாலயம் மிகப்பரிவாகக் கொண்டாடப்பட்டுவருகிறது. இக்கிராமத்துக்கு நேர்அக்கரையிற்றுன் ஸ்ரீமத் பாகவதம் தஸமஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிற குண்டினீபுரம் பூர்வத்தில் பிரகாசித்தது; இக்குண்டினீபுர அரசனும் விதர்ப்பதேச ராஜ

னுமாகிய பீமக்ராஜனுடைய செல்வக்குமாரிதான் நம் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு விவாகஞ்செய்து கொடுக்கப்பெற்றது.

எற்ராண்டல் ரோட்:—பம்பாயிலிருந்து 311 மைல் வடக்கிலிருக்கிற இந்த ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 25 மைலில் "அநபதேவ்" உஷ்ணநீர்ச்சுனைகளும், அதற்குமேல் சச்சதுரமான ஒருரேரிய அழகான குகைக்கும் யாத்திரைசெய்வோர் மிகுதி.

குருமுக்தேஷ்வர்:—டில்லியிலிருந்து வடகிழக்கே ஹரித்துவாரத்துக்குப்போகும் மார்க்கத்தில் 54 மைலில் கங்கா தீரத்திலிருக்கப்பட்ட இக்ஷேத்திரம் பூர்வம் ஹஸ்தினபுரத்தின் ஓர் பாகம்.

கௌஹடி:—கல்கத்தாவிலிருந்து வடகிழக்கில் 545 மைலில் பிரம்ஹபுத்திராநதி தீரத்திலிருக்கும் இப்பட்டணம், மஹாபாரத்தில் சொல்லப்பட்டிருக்கிற நரகமஹாராஜனு மவன் குமாரன் பாகதத்த ராஜனுடையவும் பிரதான நகரமாகிய ப்ரயாகஜோதீஷ்புர மாயிருக்கிறது. இமமாநதியின் நீரோட்டமத்தியில் இயற்கையழகு பெற்றிருக்கும்பர்வதத்தில், அதிவிநோதமாயுமழகாயுமமைக்கப்பெற்றுள்ள உமாநந்தா என்னும் ஈஸ்வர தேவாலயம். இந்த அஸ்ஸாம் தேசத்தில் ஸ்ரீ காசியைப்போல் யாத்திரை செய்யப்படுகின்றது.

ஹஸ்தினபுரம்:—டில்லியிலிருந்து வடகிழக்கில் 51 மைலிலிருக்கிற மீரட்ஸ்டேஷனிலிருந்து 22 மைலிலுள்ள இப்போதையஇச்சிறு கிராமந்தான் பூர்வத்தில் ப்ரக்யாதி பெற்றிருந்த மாக்ஷிமைதங்கிய ஹஸ்தினபுரத்தின் பாக்கியாய்த் தங்கிநிற்க மற்றதை கங்காநதி பிரவாஹத்தில் கொண்டுபோய்விட்டது. "ஹஸ்தின்" என்னும் பாரத அரசனால் கண்டுபிடிக்கப்பட்டமையாலிந் நகர்க்கு இப்பெயர் காரணமாயிற்று; இவிடம் பாண்டவ கௌரவ மஹாபாரத யுத்தகாக்ஷிவிசேஷம்.

ஜாஜ்பூர்:—கல்கத்தாவிலிருந்து ஸ்ரீஜகந்நாதத்துக்கு வரும் மார்க்கத்தில் 202 மைலிலிருக்கிற இப்புண்ணிய புராதனக்ஷேத்திரம், வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற "வைதரணீ" நதி தீரத்திலுள்ளதும், ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகளின் விசேஷ மடாலயங்களுள்ளதும், பிரசித்திபெற்ற திவ்விய சிவக்ஷேத்திரமாயுமிருக்கிறது.



# ஜ்வாலாமுகி

ஜ்வாலாமுகி:—டில்லியிலிருந்து வடமேற்கில் 284 மைலிலிருக்கிற பாதன்கோட் ஸ்டேஷனுக்குச் சமீபத்திலிருக்கிற இப்பிரசித்திபெற்ற மஹாதேவிக்ஷேத்திர தேவஸ்தானத்தினடியிலிருந்து ஓயாத்தீ எரிந்துகொண்டேயிருக்கிறது! இவ்வக்னிஜ்வாலை "ஜாலந்தரா' வென்னும் ராக்ஷஸனுடைய வாயினின்றும் வெளிப்பட்டு வருகிறதாக தேவிபுராணத்தில் சொல்லப்படுகிறது; இவிடத்துக்குச் சமீபத்தில் சுற்றிலும் ஆறு உஷ்ண நீர்ச்சுனைகளிருக்கின்றன இதற்கு ஜெல்லண்டர் ஸ்டேஷனிலிருங்கி ஹோஸியர்பூர் மார்க்கமாயுஞ் செல்லலாம் ஏராளமாய் வரும் யாத்திரிகர்களுக்காக எண்ணிலா தர்மசாலைகளும், சத்திரங்களுமிவிடம் கட்டப்பட்டிருக்கின்றன.

புஷ்பகிரி:—மதிராஸிலிருந்து வடமேற்கில் 176-வது மைலிலுள்ள கமலாபுரம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கில் 5 மைல் தூரத்திலுள்ள இச்சிவ க்ஷேத்திரத்தில் ஒரு பிரபலமான மடம் இருக்கிறது.

கம்பில்:—பிரயாகையிலிருந்து மதுராவுக்குப்போகும்மார்க்கத்திலுள்ள கான்பூரிலிருந்து மேற்கே 82-வது மைலிலுள்ள பேடகார் ஸ்டேஷனின்றும், 28 மைல் தூரத்திலுள்ள இத்தலம், கங்கைமாநதியின் பேரிலமையப் பெற்றிருக்கிற ஒரு பிரம்ஹாண்ட செங்குத்தான கற்பாறை மலையின் மீது உளது.

இக்கிராமம் பூர்வம், தக்ஷிணபாஞ்சால அரசனாகியத்ரௌபதாராஜனுக்கு இராஜதானி. இவிடத்தில் தான் த்ரௌபதாதேவி பஞ்சபாண்டவர்களை ஸ்வயம் வரத்தால் விவாகஞ்செய்து

கொண்டது. இதன் அறிகுறிகள் யாவும் விசிதமாய் நாளைக்குங் காணப்படுகின்றன. இப்பட்டணத்தை ஆதியில் கம்பில ரிஷியால் இயற்றினமையான் இப்பெயர் காரணமாயிற்று. இவ்விராஜ்ஜியத்தை ஷெடி த்ரௌபதாராஜனுக்கு முந்தி, பிரம்ஹதத்தாவென்னும் அரசனுல் ஆளப்பட்டு வந்தது.



## கன்யா ஆச்சிரமம்.

சன்யா ஆச்சிரமம்:—ஹரித்துவாரத்தினின்று தெற்கே 30 மைலிலுள்ள இவிடத்தில் தான் "சகுந்தலா" பிறந்த இடம்; இதன் சிதோஷ்ணஸ்திதி வெகு ரமணீயகரமானது ஹரித்வாரத்தில் தேவையான வண்டிகள் கிடைக்கும்

கர்நல்:--டில்லிக்கு வடக்கில் 76-வது மைலிலுள்ள இவ்விருப்புப்பாதை பட்டணம், மஹாபாரத குருக்ஷேத்திர யுத்தத்தில் கௌரவ பக்கத்துக்கு முக்கிய சூத்ரதாராயிருந்து நடாத்தின "கர்னமஹாராஜா" வின் பிரதான பட்டணம். கர்னன் கொடை=ஈகையால் சிறந்தவன். கர்னம்=காது, இவர் ஜனிக்கும் போதே மகர தண்டலங் தரிக்கப்பெற்ற காதுடன் விளங்கினமையா விப்பெயர் காரணமாயிற்று

கஸூர்:- ஸ்ரீராமரின் குமாரனை குஸலருக்குரிய இப்பெரிய வர்த்தக சம்மந்தமான ரெயில்வே பட்டணம், லாஹூரிலிருந்து 42 மைல் இது இப்போது பஞ்சாபில் லாஹூருக்கடுத்தது ஸ்ரீராமராலயம் வெகு பிரஸித்தம்

கடஸ்=கடாக்ஷம்:—லாகூரிலிருந்து வடமேற்கில் 163 மைலிலுள்ள சீவ்ரா ரெயில்ஸ்டேஷனிலிருந்து $11\frac{1}{2}$ மைல் தூரத்திலுள்ள இப்பிரசித்த சிவக்ஷேத்திரமானது குருக்ஷேத்திரத்துக்கும், ஜ்வாலாமுகிக்கும் இரண்டாவதாயிருக்கிறது. பஞ்சபாண்டவர்கள் வனவாசத்தில் கொஞ்சகாலம் இவிடம் தங்கியிருந்தார்கள்.

பரமசிவன் தக்ஷகுமாரியான தன் பாரியாவியோகத்தினுல் தன்னிருகண்களினின்றும் பெருகிய நீரானது ஆருகப் பிரவஹித்து இக்ஷேத்திரத்திலும், மேலே சொல்லியிருக்கிற 'புஷ்கர'' க்ஷேத்திரத்திலும் போய்த் தங்கி, இரண்டு ஸரோவரங்களாயின பருவகால ஸ்நாநங்கள் மஹா விசேஷம்.

கெண்டுலி: — கல்க்த்தாவுக்கு வடகிழக்கிலுள்ள இக்கிராமத்தில், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் பேரிலெழுதப் பட்டிருக்கிற "கோவிந்த கீதை'' கிரந்த கர்த்தாவாகிய ஜயதேவகவி ஜனித்தனர். ஸ்ரீ கிருஷ்ணன்கோவில் மிகப்பிரபலம்.

கோணரக்:— ஸ்ரீ ஜகந்நாதத்தினின்று வடமேற்கில் சமுத்திர தீரத்தில் 19 மைலிலுள்ள இக்ஷேத்திர தேவாலயத்தைக் கட்டும்போது, ஸ்ரீ கிருஷ்ணனுடைய 16000 கோபஸ்திரீகளுடன் "சாம்பன்'' அளவுக்கு மிஞ்சி பழகிவந்ததை முன்னிட்டு நாரதமஹாமுனி அவனைக் குஷ்டரோகியாகச் சபித்தனர். பின்னர் அச்சாம்பன் சூரியபகவானைக் குறித்துத் தவஞ்செய்து குஷ்டரோகந் தீர்ந்த மறுநாள் ஸ்நாநஞ் செய்யும்போது விஸ்வகர்மாவினுலியற்றப்பட்ட சூரியவிக்கிரஹத்தைக்கண்டெடுத்து, தேவாலயங் கட்டுவித்தனன்; இச்சந்நிதானத்தில் குஷ்டரோகம் சேஷமின்றி நிவர்த்தியாகிறது

க்ஷைமதை: — மதிராஸ்க்குத் தென்மேற்கில் 328 வது மைலிலுள்ள இந்த ஸ்டேஷன் ஒரு பிரசித்திபெற்ற விஷ்ணு ஸ்தலமாயும் சுவாயம்பு சிவக்ஷேத்திரமாயுமிருக்கிறது, கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ள இத்தலம் இப்பிராந்தியத்தில் மிகப் பிரபலமானது.

மகாபலிபுரம்: —செங்கல்பட் ஸ்டேஷனிலிருந்து 18 மைலிலுள்ள இத்திவ்யசிவ விஷ்ணு க்ஷேத்திரத்திலுள்ள கல்வேலைகளும், மண்டபவேலைகளும், ரிஷி குகைகளும், கற்பாறைப் பிரதிமைகளும், பிம்பங்களும், இவ்விந்தியாவில் முதற்றரத்திலுள்ளன.

மஹஸ்தான்கார்: கல்கத்தாவிலிருந்து வடகிழக்காய் 216 வது மைலிலுள்ள இவ்விருப்புப்பாதை ஸ்டேஷன், விஷ்ணுவினுருவதவதாரமாகிய ஸ்ரீ பரசுராமரின் பிரதானபட்டண . இவ்விடத்திலிருந்து 22 தேசக்ஷத்திரிய ராஜாக்களையும் தனக்குள்ளடக்கி யாண்டார்.

மஜௌரா:—காசியிலிருந்து ஹரித்வாரத்துக்குச் செல்லும் மார்க்கத்திலுள்ள லக்நௌவிலிருந்து 116-வது மைலிலுள்ள

அக்பர்பூர் ஸ்டேஷனின்றும் 10 மைலிலுள்ள இவிடத்தில் தான். தசரதமகாராஜா அந்த முனியின் புத்திரனான ஸர்வன் ரிஷியை, மானுக்குப்பதிலாகத் தவறிக்கொன்றடைந்த சாபத்தினால் ஸ்ரீ ராமராகிய தனது புத்திரனும் வனவாஸஞ் செய்ய நேரிட்டு புத்ரசோகத்தையடைந்தனன்.





## மாந்தாதா.

மாந்தாதா:—முன் சொன்ன அம்ரேஷ்வருக்கு $\frac{1}{2}$ மைலில் நருமதாநதியின் தீவிலுள்ள இப்பிரஸித்த சிவக்ஷேத்துரத்திக்கு பூர்வநாமம் " பைதுரியமணி பர்வதம் " ; பிறகு, ஸ்காந்தபுராணம் நருமதா கண்டபடி, சூரியவமிஸத்தின் 17-வது அரசனான " மாந்தாத்ரி" யினது அரியதவத்தினால் அவ்விடத்துள்ள "ஹோங்காரேஸ்வர " ரதுவரமகிமையால் இப்பெயர் காரணமாயிற்று.

பின்னும் யமுனையில் ஏழுநாளும், ஸரஸ்வதியில் மூன்று நாளும், கங்கையில் ஒருநாளும் ஸ்நானஞ்செய்வதினாலொருவன் பரிசுத்தனாகவும், கங்கையின் பரிசுத்த சக்தி வடகரையோடு வரையறுக்கப்படவும், இந்நருமதையைத் தரிஸித்த மாத்திரத்திலேயும், இதன் வடக்கில் முப்பதுமைலும், தெற்கில் 18 மைலும் வீசி ஜீவகோடிகளைப் புனிதராக்குகின்றதெனவும் ஷை நருமதா கண்டத்தில் கூறுநின்றது.

ஆகவே ஹோங்காரம், அம்ரேஷ்வர், மாந்தாதா இம்மூன்று சிவத்தலங்களும், சிலவிஷ்ணுஸ்தலங்களும் கூடி ஸ்ரீ காசிக்கு

இரண்டாவதாய் விளங்குகின்றது. சத்திரம் தருமசாலை முதலிய எவ்வித சௌகுரியங்களுக்கும் குறைவில்லை.



# மிஸ்ரிக்.

மிஸ்ரிக்:—லக்னௌ என்கிற லக்ஷ்மணபுரியிலிருந்து வடக்கில் 55 மைலிலுள்ள ஸீதாபூர் ஸ்டேஷனிலிருந்து 13 மைலிலுள்ள இப்பிரசித்த க்ஷேத்திரத்தின் அதிசுந்தர, வெகுபுராதன ஸரோவரத்தில், சமஸ்த தீர்த்த விசேஷங்களும் கலந்திருப்பதால் "மிஸ்ரிதா =கலப்பு" இப்பதியின் பெயர் காரணம்.

இத்தலத்தில் மஹாபரிசுத்தததீசராஜமகரிஷி,மிகவரிதாயதவமியற்றிவருநாளில் தேவாஸுரயுத்தத்தில் தேவதைகள் முறியடிக்கப்படவே, அவர்கள் சதுர்முகப்பிரமாவினிடஞ் சென்று முறையிடலும், அவ்வயன் நீங்கள் ததீசமாமுனிவரது எலும்புகளை ஆயுதங்களாக வேற்று யுத்தஞ்செய்யின் ஜயமடைவீர்கள் என திருவாக்களிக்கவும் ,தேவர்கள் அம் மாமுனிவரிருப்பிடஞ் சார்ந்து அவர்நந்நிலைமையோடு முயிர்வாழ்ந்திருப்பதைக்கண்டு ஆச்சரியத்தையுந் துக்கத்தையுமடைந்து சதுர்முகனதுகட்டளையைத்தெரிவிக்கவே, இம்மஹா அரிய தேவகாரியத்துக்காகவென் உயிரை இக்ஷணமே கொடுக்கமிகவும் சந்தோஷமுடையவனுயிருக்கிறேனுயினும், என் உயிரை விடுமுன் இப்பரதகண்டத்தின் சமஸ்ததீர்த்தங்களிலும் நீராடி சர்வமூர்த்திகளையும் தரிசிப்பதாக பிரதிக்ஞைசெய்திருக்கிறே" னெனலும் தேவர்கள் மனக்லேஸமடைந்து தெரிவித்துக்கொள்ளவும் தேவேந்திரன்முதல், பிரஹஸ்பதிக்கடவுளினது ஆக்ஞைப்படிஎல்லாத் தேவர்களும் தங்கடங்கள் தீர்த்த விசேஷங்களுடன் இத்ததீசமாமுனிவரது

இருப்பிடத்தை அத்தியந்த சந்தோஷத்துடனடைந்து, ததீச மஹா ரிஷிக்குத் தரிசனந்தந்து, தங்கடங்கள் திருக்கரங்களாலேயே ஸ்நாநமும் செய்வித்தனர்; உத்தரக்ஷணத்தில் திவ்யதேவவிமானத்திலேறி அம்மஹரிஷி சாயுஜ்ஜியத்தையடையவும், தேவர்கள் அவரது அஸ்திகளை ஹஸ்திரங்களாக் வேற்றுத்தேவாஸுரயுத்தத்தில் அஸுரர்களை முற்றிலும் முறியடித்து ஜயப்ரதாபத்தைப்பெற்றனர். அத்தீர்த்த விசேஷங்க ளக்காலமுதலிவிடமே தங்கி ஒரு ஸரோவரமாயிற்று.

மாங்கிர்:—கல்கத்தாவுக்கு வடமேற்கில் 296-வது மைலில் கங்கைமாநதியில் நீட்டிக்கொண்டிருக்கும் ஒரு கற்பாறையின் மீதமைக்கப்பெற்றிருக்கும் அழகிய கோட்டையோடுங் கூடிய இவ்விருப்புப்பாதை பட்டணத்திலிருந்து மூன்றுமைல் தூரத்தில் "சீதாகுண்ட" மென்னும் உஷ்ணநீர்ச் சுனைகளும், ஐந்துமைலில் "ரிஷ்யஸ்ரிங்க" மென்னும் ஷ்ரிங்க முனிவரது ஆச்சிரம மலையுமிருக்கிறது.

முஞ்ச்:—கான்பூரிலிருந்து மேற்கில் 87 மைலிலிருக்கிற இடாவாஸ்டேஷனிலிருந்து வடகிழக்கில் 14 மைலிலுள்ள இப்புராதன கிலமானகிராமத்தி (பூர்வம் இராஜதானி) ல் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் யுத்தம் நடந்தது. யுதிஷ்டிர ராஜனுடைய பக்கத்தில் இம்முஞ்ச் ராஜனாகிய க்ராணிச் சண்ட்ராஜனும் அவனுடைய இரண்டு குமாரர்களும் யுத்தஞ் செய்ததாக மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

  

## நாதத்வாரம்.

நாதத்வாரம்:—பம்பாயிலிருந்து த்வாரகைக்குப் போகும் இருப்புப்பாதையில் 403-வது மைலிலுள்ள மியுலி ஸ்டேஷனுக்குச் சமீபத்திலிருக்கிற இப்பிரசித்த விஷ்ணுக்ஷேத்திரம், வைகுண்டத்திலிருந்து பூர்வம்மதுராவுக்குக கொண்டுவரப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி விக்கிரஹத்தை இவிடத்துக்கு எடுத்துவந்து ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது. இப்பதியும் வைகுந்தமாகவே இப்போது விளங்குகிறது. இக்ஷேத்திர எல்லைக்குள் யாவரும்

எவ்வித ஜீவவதையும் எக்காரணத்தாலும் என்றும் செய்யக்கூடாது.

பால்வால்:—டில்லிமாநகரிலிருந்து 37 மைலிலுள்ள இந்த ஸ்டேஷன்நகரம், பூர்வம் பாண்டவராஜ்யமாகிய இந்திரப்ரஸ்தத்தின் ஓர்பாகம், இதினின்றும் 24 மைலிலுள்ள ஸோஹானு கிராமத்தில், நான்கு இயற்கை உஷ்ணநீர்ச்சுனைகளிருக்கின்றன.

பாபநாசம்:—மதிராஸிலிருந்து 205 மைலில் தஞ்சைஜில்லாவில் காவேரிதீரத்திலுள்ள இத்தலத்தில் ஸ்ரீ ராமர் ராவணவதஞ் செய்த பாவத்தை நிவர்த்தித்துக்கொண்டனர்.

பிஹீவா:—டில்லியிலிருந்து 97 மைலிலுள்ள ஸ்தானேஸ்வரிலிருந்து 13-மைல் மேற்கில் ஸரஸ்வதி நதிதீரத்திலுள்ள இ க்ஷேத்திரம் ஷை குருக்ஷேத்திரத்துக்கு இரண்டாவதாயும் குருக்ஷேத்திர எல்லைக்குட்பட்டதாயுமிருக்கிறது. இவிடத்தில் வெகு புராதனமானவும் ஆச்சரியமானவும், அழகானவும், பூதாகாரமானவுமான ஹஜாரவாயில்களும், பிரதிமைகளுமிருக்கின்றன.

ராஜக்ரஹம்:—கல்கத்தாவிலிருந்து 304மைலில்ஜமுவாவான் ஸ்டேஷனுக்குச்சமீபமான மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிற பர்வதமத்தியில், இப்பதிக்கருகிலுள்ள குஸநகராபுரத்தண்டையிலுள்ள உஷ்ணநீர்ச்சுனைகளுக்கு, ஹிந்துக்கள், ஜெயினர்கள் மஹம்மதியரும் யாத்திரைசெய்கின்றனர்.

ஸஹ்டல்:-மேலமார்க்கத்தில் கட்நிஜங்ஷனுக்குக்கிழக்கில் நருமதா உற்பத்தி மார்க்கத்தில் 79 மைலிலுள்ள இப்பட்டணத்தில் (வேறுபெயர்- ஸோஹாஜ்பூர் பூர்வம் விராடநகரம்) கீசகராக்ஷஸாலயமும், பங்கங்கா என்னும் விசேஷ புண்ணிய தீர்த்தமுமுண்டு, இவ்விராடராஜ சபையிற்றான் பஞ்சபாண்டவர்கள் ஒரு வருஷம் தங்கள் அக்ஞாத வனவாஸ காலத்தைக் கழித்தது; மேலும் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் நடந்த மஹாபாரத யுத்தத்தில், பிரதமபலியாக ஸ்ரீ பீமன் இக்கீசகனை வதஞ் செய்த இடமும் இதுவே, பாண்டவர்கள் தங்கள் யுத்தாயுதங்களை ஒளித்துவைத்திருந்த விருக்ஷத்தை இவிடத்தில் "டோகோரா" என்னும் பிரபலமான உற்சவம்நடாத்தி மிகப்பரிவுடன் கொண்டாடுகின்றனர்.

ஸகிகோபால்:—கூர்டா ஜங்ஷனிலிருந்து ஸ்ரீ ஜகந்நாதத்துக்குப் போகும் இருப்புப்பாதையிலுள்ள இப்பதி ஸ்ரீ கோபால்ஜி விஷ்ணு தேவாலயத்தால் சிறந்தது.

ஸக்ராயபட்னா:—மைசூர் ராஜ்ஜியத்திலுள்ள. சிக்மங்களூருக்கு 15 மைல் வடகிழக்கிலுள்ள இக்கிராமம், மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிற ருக்மாங்கத மஹாராஜாவின் ராஜதானி நகரம்.

ஸரஸ்வதி:—குருக்ஷேத்திர (தானேஸர்ஸ்டேஷன்)த்திலிருந்து வடமேற்கிலுள்ள ஸிர்முர்ராஜ்ஜியத்தில் அதாவது ஹிமாசலத்தின் கைலாஸபர்வதத்துக்குத்தெற்கில் உற்பத்தியாகிற இப்புண்யநதி தீரத்திற்றான் பூர்வம், நம்முன்னோரான ஆரியர்கள் முதல் முதல் குடியேறினது. இப்புண்ணியநதி மலைப்ரதேசத்தினின்றுமிழிந்து "ஜடபத்திரி" என்னும்மைதான புண்ணியப்ரதேசத்தில் விரிகிறது.

இச்சரஸ்வதி மகதேவனாகிய பரமசிவன் புத்திரி, ஒருநாள் குடிவெறியில் ஜயந்தனென்னுமிராக்ஷஸனிவ்வம்மைமீது காதலுற்றுச் சமீபித்தவுடன், நடுநடுங்கி ஓடிமறைந்தும், பிறகு அநேமாதிரி மற்ற எந்தசமயத்தில் பார்த்தாலும் மறைந்தும் வந்தனள்; இதினாற்றான்ஸரஸ்வதி உற்பத்திப்ரதேசங்களில் த்ரிஸ்யமாயும், மத்தியில் அந்தர்வாஹினியாயும், இறுதியில் பிரயாகையில் கங்கை, யமுனைகளுடன் சங்கமமாகும் திரிவேணிக்குச்சமீபத்திலுள்ள சிரஞ்சீவியான வடமஹாவிருக்ஷவாலயத்தின்கீழ் (இவிடம்ஜலம் கசிந்துஊர்வது நன்றாய்த்தெரியும்) மார்க்கமாகச்சென்று ஸங்கமமாகிறது.

ஸர்நாத்:—ஸ்ரீகாசிக்கு 3½மைல் வடகிழக்கிலுள்ளவிது, பௌத்தமதஸ்தர்களுக்கு முக்கியஸ்தானமாயும் நம்மவர்களுக்கு நேத்திரானந்தமான அநேகதேவாலயங்களும் கட்டிடங்களும் ஸ்தூபிகளும் உள்ளன.

ஸயால்கோட்:—டில்லியிலிருந்து வடமேற்கில் 438 மைலிலுள்ள இவ்விருப்புப்பாதை நகரம், பூர்வத்தில்பாண்டவர்களுக்கு ஒருமாமனான ஸல்ய ராஜனுடைய ராஜதானியாயும், பிறகுசாலிவாஹன (விக்கிரமாதித்யராஜனென்ற வேறுபேருமுண்டு) னுடையராஜதானியாயுமிருந்தது; சாலிவாஹனசகம் கிறிஸ்தவசகத்துக்கு 78-வருஷம் முந்தியுள்ளது; இந்நகரத்துக்கு 10-மைல் வடகிழக்கிலுள்ள ஷாநூர்ஜமாலில் ஒரேமரத்தில்பலவித இலை,பூ காய், பழங்களுள்ள அநேகமரங்களும், அநேகவாசயோக்கியமானகுகைகளுமிருக்கின்றன. பூர்வத்திலிவிடத்தில் அநேக பிரபல யோகிகளிருந்திருக்கிறதாகவும், இப்போதுஞ் சிலரிருப்பதாயும் சொல்லப்படுகிறது.



# ஸித்தேஷ்வர்.

ஸித்தேஷ்வர்:—கல்கத்தாவுக்கு வடகிழக்கில் 529மைலிலு ள்ள பாதர்பூரிரெயில்ஸ்டேஷனுக்குச்சமீபத்திலும், ஸரஸ்பூர் பர்வதத்தினடிவாரத்திலும், பிரமபுத்ராநதியின் உபநதியாகிய பாரக் நதிதீரத்திலுமுள்ள இத்தலம், நம்அறுவகை தத்துவசாஸ்திரத் திலொன்றை இயற்றிஸ்தாபித்தவரான பதஞ்சலி மகரிஷியுடன் கூடப் பாடுபட்டு உழைத்தவராகிய கபிலமாமுனிவரதுவாசஸ்தல மாயிருக்கிறது. பங்குனிமாதத்திலிவிடம் நடந்தேறிவரும் உற்சவத்துக்கு யாத்திரைசெல்வோர் பலர்.

ஸித்தபூர்:—பம்பாயிலிருந்து நேர்வடக்கில் இருப்புப்பாதையில் 374-வது மைலிலிருக்கிற இப்பிரசித்த சிவக்ஷேத்திரத்திலிருக்கும் ருத்ரமாலாவுக்கும், ஸரஸ்வதிநதிஸ்நாநத்துக்கும் (திரிவேணியில்சங்கமமாகிறஸரஸ்வதி அல்ல) விசேஷயாத்திரைசெய்கின்றனர்; இத்தேவாலயத்தின் மிகவுன்னதமான கட்டிடவமைப்பும் அழகும் பார்ப்பவர்களைப் பிரமிக்கச்செய்து, அவர்களாயுட்காலம் வரையில் மனதிற்பதிந்துவிடுகிறது

சீதாகுண்டம்:—கல்கத்தாவுக்குக்கிழக்கில் இருப்புப்பாதையில் 359மைலில் இதேபெயருள்ள மலையின்பேரிலுள்ள இக்ஷேத்திரத்தை ஸ்ரீ ராமரும், பரமசிவனுமிருவரும் அடைந்ததாயும்

பரமசிவனுக்கு இப்பூமியில், மிகவுமானந்தத்தைத்தரக்கூடிய இருப்பிடங்களிலொன்றாயுமிருக்கிறது. இவிடத்தில் மஹாசிவராத்திரி உற்சவம் மிகப்ரசித்தம்; தவிரவும் இதேபெயருள்ள புண்ணிய உஷ்ணநீர்ச்சுனைகளுமிருக்கின்றன.

சீதாமர்ஹி:—கல்கத்தாவுக்குவடமேற்கில் 357-மைலிலுள்ள இந்தரெயில்வேஸ்டேஷன் பட்டணத்தில், ஜனகமஹாராஜா உழுதுகொண்டிருக்கையில் பூமிக்குள்ளிருந்து சீதையாகிய ஸ்ரீ ஜானகிவெளிப்பட்டனள். இவிடத்தில் சீதா, ஹனுமானமுதலியோருக்குரிய ஒன்பதுபிரசித்ததேவாலயங்களும், ஸ்ரீராமநவமிஉற்சவமும் பிரசித்தம்.

ஸோநேபூர்:—கல்கத்தாவுக்கு வடமேற்கில் 344-வது மைலிலுள்ள பாங்கிபூர் (இவிடமிருந்துநேர்தெற்காக ஸ்ரீமத்கயாவுக்குப்பிரிகிறது) இஜ்ஜங்ஷனுக்குநேர் அக்கரையில் கண்டகிநதி, கங்காநதியுடன்கூடுகிற இடத்திலுள்ள இப்புராதனபுண்ணியஸ்தலத்திற்றான் "கஜேந்திரமோக்ஷம்" நடந்தஇடம்; அதாவது ஸ்ரீ மகாவிஷ்ணு, யானையை முதலையினின்றும் விடுவித்து ரக்ஷித்தது; தவிரவும் ஸ்ரீராமர் சீதையைவிவாகஞ்செய்ய ஜநகபுரத்துக்குப்போகும்மார்க்கத்திலிவிடம் ஒருதேவஸ்தானம் கட்டியிருக்கிறார். இவிடம் அதுமுதல் (மேலா=உற்சவம்) ஆரம்பிவித்து நடந்துவரும் இம்மேலாவே இவ்விந்தியாவில்மற்றவைகளைக்காட்டிலும் அதிகபுராதனமானது. கிர்த்திகாபௌர்ணமியில் நடக்குமிவ்வுற்சவம் ஒருபக்ஷம் (15-நாள்)பிரபலமாய்நடக்கிறது.

ஸோரன்:—மதுராவிலிருந்து வடகிழக்கில் ஹரித்துவாரத்துக்குப்போகும் புகைரதமார்க்கத்தில் 102-வதுமைலிலுள்ள இதற்கு, பூர்வத்தில்உகாலக்ஷேத்திரமென்றும், பிறகு ஹிரண்யகஸ்யபராக்ஷஸனை ஸ்ரீ மகாவிஷ்ணு வராஹாவதாரஞ்செய்து கொன்றருளியதின் பின் ஸூகரக்ஷேத்திரமென்றும் பெயர். இக்ஷேத்திரத்தில் அநேகபிரபலமான தேவாலயங்களும்,பகீரதகங்கைக்குப்பூர்வத்திலுள்ளகங்கையும், யாத்ராவிசேஷம்' பகீரதரிஷி வர்த்தமானகங்கைக்காக ஆயிரக்கணக்கான வருஷங்கள் அருந்தவமியற்றின விடங்களி லிதுவுமொன்று.

   

# ஸ்ரீங்கேரி.

ஸ்ரீங்கேரி:-பெங்களூரிலிருந்து வடமேற்காக ஹுப்ளிக்குச் செல்லும் லைனில் 128 மைலிலுள்ள கடூர் ஸ்டேஷனிலிருந்து மேற்கில் 55 மைலிலும், பிரூர் ஜங்ஷனிலிருந்து மேற்காகவே 35 மைலிலும், சிவமொக்காவிலிருந்து சற்று தென் மேற்காக 19 மைலிலும் துங்கபத்ரா என்னும் இரண்டு நதிகள் சேரும் ஜங்ஷனிலுமுள்ள இப்புண்ணிய கிராமம், ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிற ரிஷ்ய ஸ்ரீங்கரென்பவரது ஜெனனபூமியாயும் விபந்தகரிஷி தபஸ்செய்த ஸ்தலமாயுமிருக்கிறது. சுமார் 1200 வருஷங்களுக்கு முன் ஸ்ரீமத்ஆதி சங்ராசார்ய ஸ்வாமிகளிவிடத்தில் காஷ்மீரத்தி லிருந்து கொண்டு வந்த சாரதாம்பாள் (ஸரஸ்வதி) விக்கிரஹத்தைப் பிரதிஷ்டை செய்து ஸ்தாபித்து சைவ ஸ்மார்த்த மதஸ்தர்களுக்கு ஒப்புயர்வற்ற ஆசாரியராயும், "ஜகத்குரு" என்னும் பட்டமாகிய மதசம்மந்த தெய்வீகக் கிரீடாதிபத்தியத்தை (ஸாரதாபீடம்) யும் அடைந்து, அது முதல் தொடர்ச்சியாய் சிஷ்யபரம்பரையில் நடந்தேறி வருகிறது. இப்போதிருக்கும் ஜகத்குரு இவ்வரியபீடத்துக்கு ஏற்றவித்வத்முதலியவைகளைச் செவ்வனே அப்பியஸித்துவருகின்றனர். இம்மடத்துக்கு மைசூர் மஹாராஜா அவர்களால் இந்த ஸ்ரீங்கேரி மாகாணத்தைச் சேர்ந்த பூமிகளனைத்தும் சர்வமானியமாய் விடப்பட்டிருக்கிறதுமல்லாமல், மாதத்துக்கு நூறுபவுன் சாஸ்வத கொடை ஜாரிசெய்துமிருக்கிறார்; தவிரவும் சிஷ்ய கோடிகளால் ஏராளமான வருமானமும் கிடைத்து அநேக உற்சவங்களும் தருமங்களும் விசேஷமாய் நடந்தேறி வருகின்றன இக்ஷேத்திரத்தின் மத்தியிலுள்ள ஸ்ரீங்ககிரி மலையில் ஸ்ரீ சாரதாம்பாள் தேவஸ்தானமும், சுற்றிலுமுள்ள 4 தெருக்களி லொன்றில் மட்டும் வீடுகள் நிறைந்துமுள்ளன.

# ஸ்ரீங்கேரிமடத்து மடாதிபதிகளின் ஜாப்தா.

| வரிசை எண். | படாதிபதிகளின் திருநாமம். | கி-பி-வருஷ. | | வரிசை எண். | மடாதிபதிகளின் திருநாமம். | கி-பி-வருஷ | |
|---|---|---|---|---|---|---|---|
| | | முதல் | வரை | | | முதல் | வரை |
| | | கி. மு | கி. மு. | | | கி. மு | கி மு |
| 1 | ஸ்ரீ சங்கராசாரியார்-கி-மு. | 36 | 24 | 18 | 2வது நரசிம்ஹபாரதி | 1464 | 1479 |
| | | கி. மு. | கி- பி | | | கி. மு | கி பி. |
| 2 | சுரேஸ்வராசாரியார்-கி-மு. | 28 | 773 | 19 | 2வது புருஷோத்தமபாரதி. | 1472 | 1517 |
| 3 | நித்யபோத ஞானாசாரியார். | 758 | 848 | 20 | இராமசந்திரபாரதி | 1508 | 1560 |
| 4 | ஞானஞானாசாரியார். | 846 | 910 | 21 | 3வது நரசிம்ஹபாரதி | 1557 | 1573 |
| 5 | ஞானோத்தமசிவாசாரியார். | 905 | 953 | 22 | நிருஸிம்ஹபாரதி. | 1563 | 1576 |
| 6 | ஞானகிரியாசாரியார். | 949 | 1038 | 23 | இம்முடி நரசிம்ஹபாரதி. | 1576 | 1599 |
| 7 | சிம்ஹகிரியாசாரியார். | 1036 | 1098 | 24 | 2வது இம்முடி நரசிம்ஹபாரதி. | ஷை | ஷை |
| 8 | ஈஸ்வரதீர்த்தர். | 1097 | 1146 | 25 | அபிநவநரசிம்ஹபாரதி. | 1599 | 1622 |
| 9 | நரசிம்ஹதீர்த்தர். | 1145 | 1228 | 26 | அபிநவ சச்சிதானந்தபாரதி | 1622 | 1663 |
| 10 | வித்தியாசங்கரதீர்த்தர். | 1228 | 1333 | 27 | 3வது நரசிம்ஹபாரதி. | 1663 | 1705 |
| | இவர்காலத்தில் தான் வித்தியாரண்ய சுவாமிகள் படாதிபதியாய் நியமிக்கப்பட்டார். | | | 28 | சச்சிதானந்தபாரதி | 1705 | 1741 |
| | | | | 29 | 2வது அபிநவசச்சிதானந்தபாரதி | 1741 | 1767 |
| | | | | 30 | 2வது அபிநவநரசிம்ஹபாரதி. | 1767 | 1770 |
| 11 | பாரதிகிருஷ்ண தீர்த்தர். | 1328 | 1380 | 31 | 3வது அபிநவசச்சிதானந்தபாரதி. | 1814 | 1817 |
| 12 | ஸ்ரீவித்யாரண்ணியர். | 1331 | 1386 | 32 | 4வது நரசிம்ஹபாரதி. [கி. | 1817 | 1879 |
| 13 | சந்திரசேகரபாரதி. | 1368 | 1389 | 33 | சச்சிதானந்த சிவாபிநவநரஸிம்ஹபாரதி | 1879 | 1912 |
| 14 | நரசிம்ஹபாரதி. | 1387 | 1408 | 34 | 7—4—1912 முதல், வர்த்தமான ஸ்ரீநரஸிம்ஹசுவாமிகள், மடாதிபதியாகவிளங்குகிறார். | | |
| 15 | புருஷோத்தமபாரதி. | 1406 | 1448 | | | | |
| 16 | சங்கரானந்தர். | 1428 | 1454 | | | | |
| 17 | சந்திரசேகரபாரதி. | 1449 | 1464 | | | | |

* மேற்கூறிய க்ஷேத்திர தீர்த்தங்களிற் பெரும்பான்மையும் ஹிந்துஸ்தானி தேசத்தி லிருப்பதால் ஹிந்துஸ்தானி தேசத்தோருக்கு நத்திராவட தேசதிவ்ய க்ஷேத்திரங்களின் பத அர்த்தங்கள் (உதாரணமாக திருவையாறு, திருவாரூமலை முதலானவைபோல) விளங்காதிருக்குமாறு, நந்தக்கண தேசத்தாருக்குமே யன்றி, அனேவக ளோவ்வொன்றிருதம் அவ்வப் பாஷைகளில், அவ்வவ் வ்வாரங்களைக் குறிக்கும் மேன்மையான மதசம்பந்த விசேஷ அருத்தங்களுண் டேனும்மறிக.

நிற்க, பாரத, பாகவத, ராமாயணாதிகளிற் கூறப்பட்டிருக்கிற ஒவ்வொரு விஷயத்திற்கும் சான்றாக க்ஷேத்திர தீர்த்தாதிகளுள்ளன வென்பது மேற்கூறியிருக்கிற பல க்ஷேத்திர தீர்த்தாதிகளால் விளங்கும்; இதிற் சொல்லப்படாத மற்றவைகளையும் யாத்திராக் கிரமத்தில் விசிதமாகும். இப்பரதக் கண்டத்தில் மட்டுமல்ல, விண், மண், பாதாளமென்னும் மூன்று லோகங்களுள்ளும், கங்கைமா நதியாற் சூழப்பட்ட ஸ்ரீ காசியம்பதிக் கொப்பாய தொன்றுமில்லை. அந்தந்த க்ஷேத்திர தீர்த்தமான்மியங்களுள் அவையவைகளைப் போற்றிச்சொல்வதும் ஸ்வபாவமேயாகும்; குருக்ஷேத்திரம், ஆதிசேது முதலானதும் முக்தியைத் தவிர்த்து மற்ற சுவர்க்கேந்திராதி போகங்களை யினிதிலளிக்குமே யல்லது அவைகளுடன் ஸாயுஜ்ஜியத்தையு மடைவினிற் கொடுப்பது ஸ்ரீ காசியம்பதியே யல்லது வேறில்லை-வேறில்லை; இது சத்தியத்தினும்-சத்தியம், என்று பகவதாம்ஸரான சூதமாமுனிவர் நைமிசாரண்ய வாஸிகளானசௌனகாதி மஹரிஷிகளுக்குத் திருவாய் மலர்ந்து அருளுகின்றார்.

> பொருவில்கடவுணிலங்க டம்மிற்புகலுங் குருக்கேத்திரஞ் சிறந்த
> துஷிசாணேம்மி சாரணிய மதனிற்சிறந்த தொலிக்குநெடுந்
> திரைசேர் பிரயாகை யாங்கதனிற் சிறந்ததனிற் றெய்வநன்னீர்க்
> கரைசேர் கங்கைசூழ்கிடந்த காசிப்பதியே சிறந்தனவால்.

இன்னநற்காதை கேட்டவர் துறக்கத்தெய்துவ ரெனவெடுத்தியம்பிக் [ண்
கன்னலிற்பழுத்தகனிமொழித்துவர் வாய்க்கதிர் முலைக்குறக்கொடி கணவ
றென்னவன்மகிழச்செழுந்தமிழ்க்கவிதை பொழிதருந்தென்வரைமுனிவன்
மன்னியமுத்திசேர் ஞானமுநல்குமென வகுத்தினிதுரைத்தனமாதோ.



உ



ஏழாவது அத்தியாயம்.

## ஹிமோத்கிரியின் க்ஷேத்ர தீர்த்தங்கள்.

---

நம்பரதக் கண்டமாகிய இந்தியாவுக்கு வடக்கெல்லையாக அமைந்திருக்கும் இம்மாமலை கிழ மேல் நீளம் சுமார் 1500 மைலும் தென் வடல் 200 மைலுமுள்ளது. இம்மலையில் இப்பூவுலகத்தின் கண்ணுள்ளவைகளி லெல்லாம் மிகவும் உன்னதமான கௌரிஷங்கர் அல்லது தேவதுங்கா (இதற்கு இங்கிலீஷ்காரர் எவரெஸ்டு என்று பேரிட்டிருக்கிறார்கள்) என்னும் அக்ர சிகரத்துடன் கூடிய ஆயிரம்சிகரங்களும், கைலாஸபருவதம் முதலிய நூற்றெட்டு பருவதங்களும், காஸ்மீரம், நேபாளம் முதலிய இப்பரதக் கண்ட மொழிந்த மற்ற எட்டுகண்டங்களும், கங்கை முதலிய சப்த மாநதிகளும், மா, பலாமுதலிய பலவிருக்ஷங்

களோடும், சந்தனம், தேவதாரு முதலிய உயர்ந்த விருக்ஷ வகைகளுடனும் கூடிய வாசயோக்கியமான ஆரண்யங்களும், குகைகளும், புலி, கரடி, யானை முதலிய துஷ்ட மிருகங்களோடுங் கூடிய சாதாரண மனிதர் வாசஞ் செய்யக்கூடாத மகதாரண்யங்களும், அழகான பக்ஷி ஜாதிகள், சுகந்த புஷ்பவகைகள், நேத்திரானந்தமான தீதில்லா மான் முதலிய விநோத மிருகங்களும், வாழை, கொய்யா, மாதுளை, முதலிய அதிமதுரமான பலவகைகளுடன் கூடிய அருவிகள் நிறைந்த பள்ளத்தாக்குகளும், மனிதரால் இதுவரையில் கண்டு பிடிக்கப்படாத அநேக ஆச்சரியங்களும் நிறைந்துள்ள இம்மஹா கிரியிலுள்ள க்ஷேத்திர தீர்த்த விசேஷங்களை நேரில் போய்ப் பார்த்துத் தெரிந்தமட்டில் ஒருவாறு விளம்புகிறோம், ஆனால் இதில் எழுதப்படுவதற்கு ஆயிரம் பங்கு மேலாக எல்லா விஷயங்களிலு மிருக்குமென்று நம்பப்படுகிறபடியால் நேரில் போய்ப் பார்க்கிறவர்களுக்கு ஒன்றுக்கு ஆயிரம் பங்கு அதிகமாகக் காணப்படுமென்பதில் சந்தேகமில்லை.

சிறிது தூரத்திற்குள்ளாக அநேகவிதமான சீதோஷ்ணங்களையும் அதாவது ஒரேகாலத்தில், ஓரிடத்தில் அதிகடுமையான வெயிலடித்தலும், வேறோரிடத்தில், பெருமழை பெய்தலும், மற்றோரிடத்தில் பனி மூடியிருத்தலும், பிறிதோரிடத்தில் சூரிய வெளிச்சமென்பதே யில்லாமலிருப்பதும், இயல்பா யிருக்கிறது. இம்மலையின் சராசரி உயரம் 4 மைலாயிருக்க கௌரீ சங்கரசிகரம் சுமார் 6 மைலாகிறது. இந்த மைல்கணக்கு செங்குத்தா யெனக்கொள்க. இதில் எண்ணில்லாப் பெரியோர் அருந்தவ மியற்றுகின்றனர். இவிடத்திலுள்ள ஜனங்கள் கபடு, சூது அற்றவர்களாயும், சத்தியம், சௌசம், தயை, ஈவது, இரக்கம், பரோபகாரமுதலிய குணவிசேஷங்களைப் பெற்றவர்களாயு மிருக்கிறார்கள் ; என்ன ! ஆச்சரியம் புலி முதலிய துஷ்ட மிருகங்களும், பாம்பு முதலிய விஷ ஜெந்துக்களுங்கூட மனிதருக்கு எவ்வித கெடுதியும் செய்வதில்லை ஏனெனில் இது முற்றிலும் தேவபூமி யாதலால் இவிடமுள்ள 84 லெக்ஷம் ஜீவராசிகளுள்ளும் ராஜஸம், தாமதமிரண்டு மொழிந்து சுத்த சத்துவ மொன்று மட்டுமே எஞ்சிநின்று விளங்குகிறது, இம்மாமலையைப் பற்றிய ஒவ்வொரு விஷயமும் விரிவாய் ஸ்ரீமத் பாகவதம் தசமத் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறதை ஒருவாறு இதனடியிற் கூறுகிறோம்.

மா, பலா, கோங்கு, மாதுளை, வன்னி, அரசு, ஆல், வேங்கை கற்பகம், தெங்கு, பனை, தேக்கு, ஜாதிக்காய், பாரிஜாதம், புன்னை, சண்பகம், ஆரம், சந்து, அகில், பிண்டி, பாடலம், கொன்றை, புன்னை, சண்பகம், பாதிரி, பொற்கொன்றை, அசோகு தாழை,

புரசு, சரபின்னை, புன்கு, காட்டாத்தி, மஞ்சாடி, பொன்வாகை பன்னீர், கருங்காலி, நாரத்தை, எலுமிச்சம், சந்தனம், காரகில், வெண்ணாவல், களா, வில்வம்,பஞ்சவில்வம்,கதலி,கன்னல், காஞ்சி, செவ்வந்தி, குரா, செச்சை, மல்லிகை, ஜாதி, முல்லை, மருக்கொழுந்து,முதலிய பல புஷ்பவிருக்ஷ ஜாதிகளிற் பெரும்பான்மை வானுற வோங்கி சந்திரசூரியர்கட்கு அயரவிடந்தந்து களைதீர்க்கவும், சிறுபான்மையாகிய மா, பலா, கமுகு, பொன்னிற இதழி பாதரி, மருது, உலவை, பனை முதலியவற்றோடு புன்னை, சாதி கூவிளம் முதலியன நீரில்தாழ்ந்தெழும் விதமானது குளிர்ந்த நீரில் குளித்தெழும் பறவைகளைப்போல் விளங்கிற்று எம்பெருமானுக்கருச்சிக்க யோக்கியமான பாதரி, கொன்றை, வில்வம், பஞ்சவில்வம், எருக்கு ஆத்தி, சூதம், சூரியகாந்தம், மத்தம், சரபுன்னை, சாதிப்பூ, சண்பகப்பூ சந்தனப்பூ தும்பைப்பூ மந்தாரை, நெய்தல், வாகை, நாயுருவி, நெல்லி,கோங்கு, இலந்தை எலுமிச்சை, அறுகு, காரகில் தேவதாரம்,நந்தியாவர்த்தம், மகிழ், முல்லை, கத்தரி, கடம்பு, வாழை, தாழை, நாவல், காந்தம் தாமரை, தெற்பை, சாலியிலை, மல்லிகை, மருக்கொழுந்து, வெட்டிவேர், குங்குமப்பூ, மலர்வழி, கையாந்தகரை துளசி, முதலிய பல வகை மலர் தளிர் வேர்களும் சிவபெருமானுக்காரு மென்றும் கொன்றை வில்வமாலிகை, பஞ்சவில்வம், வெள்ளெருக்கு, ஊமத்தை, வன்னி, அறுகு, ஆத்தி, பாதரி, வெண்தும்பைகள் பரமசிவனுக்கும், கடம்பு சந்தனம் மருக்கொழுந்து, சண்பகம், குங்குமப்பூ, செங்கழுநீர் முல்லை இவைகள் அம்பாளுக்கும்: மகிழ், துளவு, நெல்லி மஹாவிஷ்ணுவுக்கும், அறுகு, கொன்றை, சத்தரி மகாகணபதிக்கும், கடம்பு, வெட்சி, வாழைப்பூ சுப்பிரமணியக் கடவுளுக்கும் அதிக விருப்பமென்பதையும் சிவன் தாழையையும் விநாயகர் துளசியையுந் தரியார், விஷ்ணுவுக்கு வில்வம் இன்று என்பதையும் தெரிந்து பூஜிப்பதற்கேற்ற பல்பல வகைகளும் நிறைந்துப்பிரகாசிக்கின்றன.

மேலும் இம்மாகிரியின்கண் அருந்தவ முனிவர்கள் சூழ்ந்துள்ள கூட்டத்தாலும், அங்குள்ளோர் தேகத்தில் அணிந்துள்ள வெண்மைத்திருநீற்றின் பிரகாசத்தாலும் மிகவுன்னத சோலைகளாலும், விளங்கும் வேதங்களாலும். அவ்விமாசலம் சாக்ஷாத்பரசிவத்தின் திருமேனிபோலவும், ஆதிசேஷனால் சுமக்கப்படுதலாலும், பச்சை நிறத்தாலும், உலகத்து உயிர்களைக் காப்பதினாலும் பெருந்தவத்தோர் சார்தலானும்,பொன்மணியாலும், நறுமணம் பொருந்துதலானும் மஹாவிட்டுணுவைப் போலவும், மேகங்கள் மீதுசெல்லுதலானும், பல்லாயிரங்கண்களாலும், செவ்வியராகத்

தைப்பாடும் அரம்பை மாதர்கள் தம்மிடத்திற் சேர்தலானும் அதுவே தேவேந்திரனைப் போலவும், குற்றமற்றதும், துகளையறுப்பதுமான மேன்மைக் குணத்தாலும் நீதியினாலும் பூலோகத்தோரனைவரும் புகழுந் தன்மையாலும் போதகம் பொருந்தியிருத்தலானும் இமமாமேரு மாதவர்கள் போலும் விளங்குகின்றது. மேலும் இம்மேன்மையுற்ற கிரியில் நீலோற்பலமர் சூழ்ந்துள்ள வாவிகளிலெல்லாம் அழகிய வண்டினங்கள் கீதங்களைப் பாடிக்கொண்டிருக்கவும், புஷ்ப வகைகள் நிறைந்துள்ள சோலைகளிலெல்லாம் அழகியப் பலவகைக் கிளிக்கூட்டங்கள் வேதங்களை உச்சரித்துக் கொண்டிருக்கவும், மாமரங்களிலெல்லாம் குயிலினங்கள் பஞ்சாக்ஷர மந்திரங்களை ஓதிக்கொண்டிருக்கும் சிறப்பின் சிறப்புற் றோர்ந்தோர்க்கே நன்குவிளங்கும். பின்னும்ஞான மாமுனிவர்கள் வாழும் பூஞ்சோலைகணிறைந்துள்ள இவ்விமயத்தின் அழகியமலர்கள நிறைந்த தருக்கள் கற்பக விருக்ஷத்தின் மலர்களையணியும் தெய்வப்பெண்களின் கூந்தலிற் பரிமளமுண்டாகும்படி வானுலகினும்மீண்டு அளாவும். கானத்தைச் செய்கின்ற யாழைதம்தவர்களும், தெய்வப் பெண்களும் பாடக் களிப்போடுகூடியமயிலினங்கள் நர்த்தனஞ் செய்யுமிம் மிமயமலையில் வசிட்டாதிமுனிச்சிரேஷ்டர்களும், உரோமேசர், கபிலர், கற்கர் அத்திரி, புலகர்; வச்சிரங்கிராசு, சோமர், நத்தியர் பரத்துவாஜர் வாமதேவர், சிததர், கங்கணர், ததீசு, கௌதமர், மார்க்கண்டர் பவுத்திரர், பாவநாசர், பராசரர், காமசித்து, வக்யர், கமந்து, சிவததர், கண்ணுவர், பிருகு, கிகாசடி, மிருகண்டர், நவத்திரிசடி வியாக்கிரமபாதர், நற்கலியர், வாலகில்லர் புலத்தியர், மறைக்குமாரர், சிவபத்தர் முதலானவர்களுமின்னு மெண்ணுங்காற்கோடானுகோடி யென்னுங்கணக்கினுமடங்காத முனிச் சிரேஷ்டர்களும் தபோதனர்களுஞ் சூழ்ந்து நண்ணி எந்நாளும் வாழ்கின்றார்கள்.

மேலும் நவமணிச்சிகரங்களும் பொற்கோபுரங்களும் மஹாமேருவைபபோலும் விமானக்கனகமண்டபங்களும் கனக மாளிகைகளும் நெருங்கியுள்ளதும், மணிநெடுவீதி இருமருங்கிலும் மருவிய பொனனுலு மணியாலும் அமைக்கப்பெற்ற தேவர் ஆலயங்களும மாதவர்களின் ஆச்சிரமங்களுஞ்சோலைகளுஞ் சாலைகளும வாவிகளுந்தூபிகளும், மிகப்பெருககககவின் செயவதும் மகரதோரணங்களும வானளாவும உயர்நதகேதனங்களும் மேடைகளும் நெருஙகிப்பொலிவதும் உருத்திரகணங்களும உரகர் கின்னரர் கிம்புருடர்களும் யோகர் முனிவர்களும் அனபர்களும் கூடிககுழுமித் துதிககபபெற்றதுமானவளமெலாம்நிறைந்தகைலை மலையின மத்தியிலமிகச்சிறப்பாக விளங்கும்உயர்ந்தசித்திரமணி மணடபத்தில அரம்பையர்கள் ஆனந்தத்தோடுமாடிப்பாடவும்,

விஞ்சையமாதர்கள் வீணைவாசிக்கவும், மற்றவுலகமாதர்கள் தீபமும் ஆலத்தியுமெடுக்கவும், அருந்தவர்கள் ஆரணமொழியவும் துந்துபிமுதலிய வாத்தியங்கள் முழங்கவும், கொடி, குடை முதலியனவிளங்கும் நற்றொண்டர்கள் போற்றவும், பல்லாயிரங் கோடி சூரியர்கள் ஒருங்கே கூடிப்பிரகாசிப்பது போல உமாதேவியாரோடும் மாலாதி தேவர்கள் சூழ்ந்துபோற்றித் துதித்து இறைஞ்சவும், நந்திதேவர்கள் பந்திசெய்துகட்டியங்கூறவும், மற்றைத்தேவர்கள் ஏவல்கள் செய்யவும், கணங்கள் போற்றிப் புகழவும், பூதகணங்கள் பல்லியங்களை முழக்கி ஆடிப்பாடவும் ஸிமஹறங்கள் சுமந்த நவமணியாசனத்துத் தம்மிருமக்களொடு மிடைவிடாது தம் பூரணும்ஸத்துடன் அண்டபிண்ட சராசரங் களெல்லாம் விளங்கும் படிக்கும் துஷ்டநிக்ரஹசிஷ்டபரிபாலனஞ் செய்து அண்டகோடிகளை ஈன்றருளும் தேவாதி தேவன் முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்திடும் இயல்பினாலே நீதி தழைத்து ஓங்கும் இவ்விமயம் ஆதியாகியும் அந்தமாகியும் அளவில்லாத பிரளயகாலத்திலுஞ் சோதியாகவும் நித்தியமாகவுந் துலங்கிப்பிரகாசிக்கும். திருமகள் வளரப்பெற்றுள்ள மார்பையுடைய திருமாலும் வாசனை மிகுதியும் பொருந்திய தாமரையின் மீது வீற்றிருக்கும் பிரம்மாவு முறையே கருடன், அன்னம் என்னும இருபுளளினமேலும் ஏறி வந்து எம்பெருமானை வணங்கித் தம்மடியார்களோடும் தங்கியிருக்கப் பெறுதலினாலே இவ் விமாசலம் பிரம்ஹலோகமும் வைகுந்தமும் சிவலோகமுமாகும். அதற்குமேலும்மனத்திற்கெட்டாத அரியத்தலமுமிதுவேயாகும்.

தேவேந்திரனு மிந்திராணியும் மற்றைத் தேவர்களும் அரம்பையர்களும், மற்றுமறிவுடைய முனிவர்களும், எண்டிசைக் காவலர்களும், இயக்கர்களும் இசைபயிலுங் கந்திருவர்களும், சித்தர்களும மிகுந்த ஆவலோடுவந்து தினமுந் தொழுவார்கள். தேவர்கள மற்றுமுள்ள எல்லா வுலகத்திலுள்ளவர்களும் பரிசுத்த எல்லாப் பொருள்களும் பொருந்தி யிருத்தலினாலும், சிவபெருமானும் பார்வதி தேவியாரும் பரிவுடன் கோயில்கள் பல கொண்டிருப்பதினாலும், இத்தலம் ஒப்பற்றதாய் எப்பதிகளுக்கும் உயர்நததாயிருப்பது மல்லாமல் மன்னும் பகிரண்டங்களெல்லாம் வகுத்து உயிர்களைக் காத்தருளுந் தன்மை யுடையவரான சிவபெருமான் அனவரததான நாயகராகி எப்பொழுதும் வீற்றிருக்கும தலைவராக அமர்ந்து அரசுபுரியும் சிறப்பைப் பெற்று விளங்காநின்றது. இதன் மஹிமைகளை ஒருவாறு முடிக்க ஈராயிரம நாவினைப் பெற்ற ஆதி சேடனாலு மியம்புத லரிதாகவும்

என்னுருநாவால் எம்மட்டாகு மென்றதைக்கணித்து மற்றதை நேரிற் றரிசித்தும் பரமசிவனது திருவிளையாடல் சிருஷ்டி பேதங் களைக் கண்ணுற்றுக் களிப்புற்று சிவசாயுச்சிய நித்தியானந் தத்தை யினிதிலடைவராக.

ருஷிகேசம், தேவப்பிரயாகை :—ஹரித்வாரத்தினின்று கங் கோற்பத்திக்குப் போகும் மார்க்கத்தில் முன்னது ஹரித்வாரத் திலிருந்து 14-மைலும், பின்னது 30-மைலுமிருக்கிறது. ருஷி கேஸத்திலிருக்கும் பரதாழ்வார் ஆச்சிரமத்துக் கருகில் அநே கம் பெரியோர் மேனோக்கி வசிக்கிறார்கள். தேவப் பிரயாகை யில் கங்காநதியுடன் அளகநந்தை வந்து கூடுகிறது. இவை தவம், யோகாப்யாச முதலியவைகளுக் கேற்ற விடம். இவை இமயமலைச் சாரலிலிருப்பதால் ஹரித்வாரத்தினின்று இப்பால் ரோட்டுகள் கிடையாது. வண்டிகள் போகமுடியாது. எல்லாம் ஒத்தடிப் பாதைதான். ஹரித்வாரத்துக்குவடக்கில் இமயமலையின் பேரில் செல்லும் யாத்ரிகர்களுக்காக இவைகளும் இவ்வத்தியா யத்தில் சொல்லப்படும் மற்றவைகளும் மஜிலிகளுக்காக ஏற்பட்ட ஸ்தலங்களே யன்றி மற்றப்படி, கடை கண்ணிகள், கோயில் குள ம், சாகுபடி முதலியவைகளுடன் கூடிய சரியான ஊர்களல்ல.



## பதரிகாச்சிரமம்.



பதரிகாச்சிரமம் :—இதற்குச் செல்ல இமயகிரியின் அடிவார மாகிய ஹரித்வாரத்துக்கு மேலே சொன்னபடி இருப்புப்பாதை மார்க்கமாய்ச் சென்று அங்கிருந்து சுமார் 200-மைல் தூரத்தில் ஈசான்யத்தில் இம்மஹா க்ஷேத்திரமிருக்கிறது. இதில் இலந்தை மரத்தின் கீழ் பத்மாசனராய் ஜீவர்களுக் குபதேசிக்கும் பொ ருட்டு எழுந்தருளியிருக்கும் விஷ்ணு மூர்த்திக்கு பதரிநாராயண னென்றும், அரவிந்தவல்லித் தாயாரென்றும் பெயர். இதற்கு, ஹரித்வாரத்தினின்று ருஷிகேஸம், தேவப் பிரயாகை, நந்திப் பிரயாகை, கருணப்பிரயாகை, இந்த்ரப்பிரயாகை ஜோஷி மடம் விஷ்ணுப் பிரயாகை, பண்டிகேஸ்வரம் முதலிய புண்ணிய ஸ்தலங்களாகிய மஜிலிகள் வழியாகச் செல்லவேண்டும், மார்க் கத்தில் நேபாள முதலிய ராஜாக்கள் யாத்திரைக் காரர்களின் சௌகரியத்துக்காக அரிசி முதலிய சாமானகள் விற்பதற்கும தங்க ஜாகைகளும் தர்மத்துக்காக ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

புதரிகாச்சிரமம் செல்வோர் பதரிகேதாரம் செல்லாவிட்டால் குளிர்காய்ச்சல் வரும். இக்ஷேத்திரத்தில் அதிசீத நீர்ச்சுனையாகிய நாரதகுண்டமும், அதி உஷ்ண நீர்ச்சுனையாகிய தப்தகுண்டமுமிருக்கின்றன. இக்ஷேத்திர புராணம் 12 அத்தியாயத்தில் தனியாயிருக்கின்றது. இங்கு தேவஸ்தானத்தில் ஆராதனஞ் செய்வோரும் சுயம்பாகிகளும் பக்கத்தில் கிருஷித்தொழில் செய்வோரும் உண்டு. இவரெல்லாம் பனிக்காலம் வந்தவுடனே அதாவது ஐப்பிசி மாதம் பௌர்ணமியில் அபிஷேகாதிகளுடன் வெண்ணெய்ப் பூச்சிட்டு பூஜை செய்தும் தானியாதிகளை யெல்லாம் பூமிக்குள் புதைத்தும் போய் சமீப கிராமங்களாகிய பண்டிகேஸ்வரம் முதலிய விடங்களிலிருந்து, பனிகாலஞ் சென்றபிறகு அதாவது சித்திரா பௌர்ணமியில் தேவஸ்தானக் கதவுகளைத் திறந்து பூஜைகள் செய்துவந்து வசிப்பார். இது காரணத்தால் தான் மானுஷ பூஜை ஆறுமாதமென்றும் தேவ பூஜை ஆறுமாதமென்றுஞ் சொல்லப்படுகிறது. ஷை பனிகாலத்தில் தேவஸ்தானங்கள் முதலியவை முற்றிலும் பனியால் உருத் தெரியாமல் மூடப்பட்டிருக்கும் ஆ! என்ன ஆச்சரியம்! என்ன தேவப்பிரசன்னம்! மூடப்பட்டிருக்கிற ஆறுமாத காலத்தில் தேவபூஜை நடத்தப்படுகின்ற தென்பதற்கு சாக்ஷியமாக அர்ச்சகர்கள் ஐப்பிசி பௌர்ணமியில் பூஜித்த புஷ்பங்கள் மேனி நலுங்காமல் சித்திரா பௌர்ணமியில் காணப்படுகின்றன. இது சத்தியம்! நேரில் பார்க்கலாம்.

உத்தரதேசத்தார் எப்பாடு பட்டாயினும் இந்த யாத்திரைகள் செய்யாமலிரார். நடக்க அசக்தர்கள் மனிதர்களால் 'திருப்பதி மலைமேலேறுவது போல' சுமக்கப்பட்டுள்ள டோலிகளிலாயினும் மனிதர் முதுகிலாயினும் ஏறிச் செல்லலாம். ஹரித்துவாரத்திலிருந்து சுமார் 80 மைலிலுள்ள கருணப் பிரயாகைவரையில் தேவையான சாமான்கள் கிடைக்கும். அப்புறம் அவ்வளவு ஜாஸ்தியாய்க் கிடைப்ப தரிதாகையால் அவரவர்களுக்குப் பிரியமான உணவுகளைச் சேகரித்துக் கொண்டுபோவது நலம்.

**பதரிநாராயணம் பிரம்ஹ கபாலம்:**—முன் சொன்ன கருணப் பிரயாகையிலிருந்து சுமார் 120மைலிலும் ஹரித்வாரத்தினின்று 260-மைலுமிருக்கிறது ஷை கருணப்ரயாகையிலிருந்து பிரிந்து சிவநந்தி, நந்திப்ரயாகம் லாலாசங்கம் பிப்பல்கோடி, கருடகங்கை, பாதல கங்கை குமாரசட்டி, ஹனுமான் சட்டி மார்க்கமாய் பதரி நாராயணத்துக்கும், அதன் சமீபமுள்ள பிரமகபாலத்துக்கும் போகலாம். பதரிநாராயணத்தில் மஹாவிஷ்ணுவின் திருவருள் அனுமதி பெற்று பிரம்ஹகபாலத்தில் ஆத்மபிண்டம் போடுவது யதோக்தமாகிறது.





# ஸ்ரீ கேதாரம்.

ஸ்ரீ கேதாரம்-ஹரித்துவாரத்தினின்று சுமார் 170 மைலிலுள்ள இம்மஹா க்ஷேத்திரத்துக்கு முன்சொன்ன மார்க்கமாய் கருணப்பிரயாகை சென்று அங்கிருந்து அகஸ்தியமுனி, குப்த காசி, பாடாசட்டி, த்ரியுகிநாராயணம், சூர்ணப்பிரயாகை, கௌரீ குண்டம்,, பீமகுண்டம் ராமபாடாமார்க்கமாய்ச் செல்லவேண்டும்.

உருத்திரப்பிரயாகை:—ஹரித்துவாரத்திலிருந்து சுமார் 280 மைலிலுள்ள இப்புண்ணிய முத்திஸ்தலத்திற்கு ருஷிகேஸம் சத்திய நாராயணம், சத்ருக்னம், லக்ஷ்மணஜூலா, தபோவனம், (இவிடத்தில் இளையபெருமாள் சந்நிதி) புலாலிசட்டி, பிஜிலிசட்டி, (துண்டல்சட்டி, வியாஸகங்கா, பந்தர்வேல், கந்தர்சட்டி கண்டேசட்டி, மஹாதேவ்சட்டி, கோவிந்கோடா; ராண்பாக், பில்வ கேதாரம், கலியாண்கோடி, கர்ஜூர்சட்டி, முதலிய மஜிலிகளாற் சௌகரியமாய்ச் செல்லலாம்.



# கங்கோற்பத்தி.

கங்கோற்பத்தி:—இயற்கனவே விளக்கப்பட்டிருக்கிறது டன், இமயமலையில் சாதாரணமாய் இந்த கங்கோற்பத்திப் பிரதேசத்தில் கூடிவரும் அருவிகளெல்லாவற்றிற்கும் கங்கோற்பத்தியென்றும் சொல்லுவர், இக்கங்கோற்பத்தி ஹரித்துவாரத்தினின்று சுமார் 180 மைல் தூரத்திலிருக்கிறது, கங்கோற்பத்திக்கு உத்தரபாரிசத்தில் சுமார் எண்பது மைலில் கைலாச பருவதம் பார்வதிநாயகனுடன் விளங்குகிறது. குறிப்பு,—மேற்குறித்தவைகளுக்கு ரோட்டுகள் மைல்களொன்றும் கிடையாதாகையால் ஓர் உத்தேசமாய்மதிப்பின்பேரில் தூரத்தைக்கணித்துச்சொல்லப்பட்ட

வைகளுமன்றி, மேற்சொன்ன மஜிலிமார்க்கங்களும் நிஷ்கரிஷை யானவையல்ல—அதாவது அந்தமார்க்கத்தைத் தவிர்த்து வேறு மார்க்கமின் றென்பதல்ல; யாதாமொருவர் ஒருவழியாய்ச்செல்லக்கூடும், அப்பிரஹ்மத் கிரியிலுள்ள மஹாதாரண்யங்களின்வழியே தனியாய்ச் செல்லுதல் கூடாது; 8 பேர் 10 பேர்சேர்ந்து சேர்ந்து கூட்டங்கூட்டமய்ப் போகவேண்டும். அக்கூட்டத்தாரெல்லோரும், எப்படிப்போகும்படி நேரிடுகிறதோ அதுவேமார்க்கமாகும். ஆகையால் மேற்சொன்னவைகளுள் ஆங்குள்ளோரையும் விசாரித்துக்கூட்டத்தோடுசேர்ந்து செல்லவேண்டும். மேலே விவரித்தபடி அடியேன் சென்றமார்க்கம், ஆனால் வேறு யாரெவ்வழி போனாலும் வித்தியாசப்பட்டால் ஜாஸ்திகம்மி 100க்கு 10க்கு மேற்படாது.

இமயமலை யடிவாரத்துக்குச் செல்லும் இருப்புப்பாதை டெர்மினஸ்—கோடிஸ்டேஷன் துறைகள் வடமேற்கிலிருந்து வரிசைக்கிரமமாகக் காஷ்மீர தேசத்து ராஜதானியாகிய ஸ்ரீநகர், பஞ்சாப் தேசத்திலுள்ள டெல்ஹவுஸி, தர்மசாலா, பாலம்பூர், சுல்டான்பூர், ஸிம்லா:—வடமேற்கு மாகாணங்களிலுள்ள மஸ்ஸுரி: கோடவாரா, நயினிடால், பர்மிதவ், சண்டன்சௌக் கடர்கபன்காட். நெய்பல்கன்ஞ்ரோட், ஜார்வெயோ, பிக்ஞுத்துறீ,ஜெய்நகர், வங்காளதேசத்திலுள்ள அன்ச்ராகாட், டார்ஜிலிங், மால்பஜார், பக்ஸா, அஸாம்தேசத்திலுள்ள பலிபாரா, ஸைகோவா என்னு மிவ்விருபத்திரண்டு இருப்புப்பாதை டெர்மினஸ்ஸ்டேஷன்களினின்றும் ரெயிலிலிருந்திறங்கி இமயமலையின் பேரில் செல்லல்வேண்டும் ; மேற்குறித்த இடங்களுக்கு அப்பால் காடுகளும் மலைகளும் நிறைந்து உயர்ந்துவிடுகிறபடியால் வண்டிமுதலியவை செல்லாது. ஷை டெர்மினஸ் பிக்ஞுதொறீ ரெயில்வேஸ்டேஷனிலிறங்கி (இதற்குவர கயாவுக்கு வடக்கிலுள்ள பாங்கிபூர் ஜங்ஷனிலிருந்து பிரிந்து நேர்வடக்காய் சகௌலி, பெட்டியா ஜங்ஷன்களின் வழியாய் வரவேண்டும்) அங்கிருந்து நேர்வடக்கே சுமார் 50 மைலிலுள்ள நேபாள தேசத்தின் ராஜதானியாகிய காட்மாண்டுவுக்குச் செல்லல் வேண்டும்; இது தர்மராஜ்யம். இந்த ராஜாயாத்திரைக்காரர்களை மிக்க அன்புடனும் பயபக்தியுடனும் வரித்து வேண்டிய உதவிகளைச் செய்கின்றனர். இந்த நேபாளதேசம் இமயமலையின் சிகரபாகத்திலும் மத்தியிலுமமையப் பெற்றிருக்கிறது. ஷை காட்மாண்டு நகரத்துக்கு மூன்று மைலில் இந்த்ர நீலகிரி சிவ க்ஷேத்திரமிருக்கிறது. இதற்குச் சமீபத்தில் உருத்திராக்ஷம் விளையும் மோரங்கிமலை யிருக்கிறது. இதற்கு வடகிழக்கில் சுமார் 80 மைலில் ஷை கௌரீஷங்கர்சிகர

மிருக்கிறது. இந்நகருக்கு மேற்கில் சமீபத்தில் சாளக்கிராம மசப்படுகிற கண்டகி நதிஉற்பத்தியாகி ஷை பாங்கிபூருக்குச் சமீபத்தில்கங்காநதியில்சங்கமமாகிறது. இந்நகரத்திலிருந்து சுமார் ஐந்நூறு மைல் மேற்காகவிருக்கிற கங்கோற்பத்திக்கும், அங்கிருந்து மேலேசொல்லப்பட்டிருக்கிற மற்ற க்ஷேத்திரங்களுக்கும் இமயமலையின் பேரிலேயே போவதற்கு மார்க்கமிருக்கிறது. இமயமலைக்கு ஏறிப்போகும் மார்க்கங்களில்மட்டும் அதிக வருத்தந்தோன்றுமேயல்லது மலைமேலேபோய்விட்டால் எந்தவிஷயத்திலும் எவ்வளவேனும் குறைவில்லை. உதாரணமாக அவ்வளவு பனியுள்ளமலையில் பாறைகளின்மத்தியில்மழை, வெயில், காற்று, பனி முதலியவைகளால் பாதிக்கப்படாமல் சமசீதோஷ்ண முடையவைகளாயும் (அப்பாறைகள் மத்தியில் சிலவிடங்களில் உஷ்ணோதகச் சுனைகளிருக்கின்றன.) எவ்வித துஷ்டமிருகங்கள் அல்லது விஷஜந்துக்களின் உபாதை முற்றிலுமில்லாமலும் ஆகாரத்துக்குத்தேவையான காய், கனி, கிழங்குவகையறுக்கள் கிடைக்கக்கூடியவைகளாயும், திருடர் முதலிய மானிட உபத்திரவ மில்லாதவைகளாயும், இருக்கும்படியான ஜாகாக்கள் எவ்வளவோ விருக்கின்றன. எத்தனையோ மகாத்மாக்கள் திரிசியமாகவும், அதிரிசியமாகவும் வசித்துக்கொண்டிருக்கிறார்கள். அவரவர்கள் மனோபாவத்துக்குத்தக்கபடி சத்குருமார்களும், சிஷ்ய கோஷ்டிகளும வரித்தடையலாம். இம்மாமலையைப்பற்றி எத்தனை பக்கங்களெழுதினாலு மிடங்கொடுக்கும், ஆனாலதற்கிடமிங்கின்றதலின் பூர்வபுண்ணியவசத்தால் இவ்விமயகிரிக்குச் செல்வோர் மற்றவைகளைத் தங்கள் சுவானுபவத்தில் தரிசித்து மகிழலாம்.

இன்னுமாங்கு பலகோடியிலிங்க முள வித்துணையிலிங்க,
மன்னுகூபமணி குண்டமின்ன வென்ன வகுத்தெம்மால்
பன்னியுரைப்பதரிது பசும் பராரைக்க முகின் மிடறொடியக்,
கன்னிப்பருக்கன் வாலுகளு மிமய லிங்க வுருவாமால்.

புண்ணிய தீர்த்தங்கள் பொருந்தி யாடினோர்
மண்ணிடைப் பறவைகள் விலங்கு மற்றுள
வெண்ணறு மியோனிகள் யாவு மெய்திடார்
விண்ணுலகடங் கடவு ளாகி மேவுவார்.

அறத்திறம் திறம்பினோ ரருளிலாதவர்
துறக்க மொன்றில் லெனச்சொல்லும் புன்மையோர்
சிறப்புடைப் பயனுறுத் தர்க்கஞ்செய்குநர்
பெறற்கருந்தீர்த்த நற்பயன் பெற்றார்களே.

இமயமலையின் க்ஷேத்ர
தீர்த்தங்கள்.
முற்றிற்று.





உ

## ஸ்ரீ கங்காயாத்திரை நாட்டு மார்க்கம்.



இருப்புப்பாதை யேற்படுவதற்கு முந்தி சுமார் நாற்பது வருஷங்களுக்கு முன் இராமேஸ்வரத்தி (தென்ஜில்லாக்களுள்பட)லிருந்து நேர்வடக்காக மதுரை, ஸ்ரீரங்கம், சிதம்பரம், காஞ்சீபுரம், திருப்பதி, கடப்பை, கர்நூல், நாகத்கர்நூல், ஹைதராபாத், சிக்கந்திராபாத், மேதக், பிஸ்கயான், வரோரா, சீதாபால்டி, நாகப்பூர், காம்ப்டி, தேவ்லபர், ஸெய்மி, ஜப்பல்பூர், கட்கி, மெய்ஹார், கர்வி, சித்திரகூடம், யமுனநதி உத்தரதீரமாகிய ராஜ்பூர் மார்க்கமாய் பிரயாகைக்குச் சென்று அங்கிருந்து கிழக்கே கங்காதீரத்தின் வழியாய் மீர்ஜாபூர் மார்க்கமாய் ஸ்ரீகாசிக்குக் கால்நடைமார்க்கமாக யாத்திரை செய்துகொண்டிருந்தனா. பாதசாரிகளுக்கு இதுமிகவும் சமீபமானவும் சௌகரியமானவுமான மார்க்கம்; இப்போது பாதசாரிகளாய் யாத்திரை செய்யும் புண்ணியாத்மாக்கள் வெகு சிலர். இம்மார்க்கத்தில் மேலே குறிப்பிட்ட மஜிலிகளிலும் மற்றும் சில்லறை மஜிலிகளிலும் சதாவர்ர்த்தி முதலியவைகள், விரும்பி யாத்திரிகர்களுக்குக் கொடுக்கின்றனர். ஹைதராபாத், நாக்பூர் முதலிய விடங்களில் யாத்திரிகர்களுக்குத் தேவையான செமபு, போர்வை, மார்க்கச்செலவுக்குப் பணம்முதலானவைகளுங் கொடுத்து நாளைக்கும் ஆதரித்து வருகின்றனர். எல்லா சௌகரியங்களும் விருத்தியடைந்து நாகரிகம் மேற்பட்டிருக்கும் இக்காலத்தில் முன் அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கிற மேல, கீழமார்க்கங்களில் இருப்புப்பாதை செல்லும் மார்க்கமாகவும் யதார்த்த பூபிரதக்ஷிணமாயும்

நடந்து செல்வதற்குள்ள எல்லாவித சௌகரியங்களும் அவ்வவ் வத்தியாயங்களிற் கூறியிருக்கிறபடிக்கும் இன்னும் அதிகமாயு மேற்பட்டிருக்கின்றன.

பூர்வத்தில் கால்மார்க்கமாயிருந்த விடங்களெல்லாம் இப்போது இருப்புப்பாதை மார்க்கமாய் விட்டபடியால் மேலே முன்பக்கங்களிற் காட்டியிருக்கிற இருப்புப்பாதை மார்க்கமாக வே பூபிரதக்ஷணமாக ஆங்காங்குள்ள சௌகரியங்களைப் பெற்றுக்கொண்டும் க்ஷேத்திர தீர்த்தாடனங்கள் செய்துகொண்டும் மிகவும் சௌகரியமாய் யாத்திரை செய்யலாம். இவ்வத்தியாயத்திற் பிரித்துச் சொல்லவேண்டியவைகளெல்லாம் முன் அத்தியாயங்களிலேயே அடங்கி விட்டபடியால் இனி இங்கு அதிகமாய்ச் சொல்லவேண்டியவைகளில்லையாதலால், இவ்வத்தியாயத்தைப் பூரணம் செய்யும் பொருட்டு.—

சைவவாராணசிக் கூர்ந்து செல்வோர் சிவனய னெமொலான
மூவருமகிழ நோன்புமுழுவதுஞ் செய்து ஜன்ம
பாவனமாஞ ரென்று பலமறை முழங்குவிப்பான்
மேவருமுத்தியு முடிவுலெய்துவர் காமிகளுஞ் சுவர்க்க வழியால்.

அதாவது :—பாதசாரிகளாய்க் காசி யாத்திரை செய்வோர் வாகனயாத்திரிகர்களைக் காட்டிலும் ஆயிரம்பங்கதிகமான, மும்மூர்த்திகளும் மகிழ விருதாதிக ளனைத்துஞ்செய்து முடித்த பலனாகிய சுவர்க்காதி போகங்களுடன் முத்தியையு மினிதில் இறுதியில் அடைவர் என்று சூதமா முனிவர் சௌனகாதி நைமிசாரண்ய மகரிஷிகளுக்கு ஸ்ரீ ஸ்காந்தத்தில் திருவாய் மலர்ந்தருளுகிறார்.

ஸ்ரீகங்காயாத்திரை நாட்டு
மார்க்கம்
முற்றிற்று.





திருஞானசம்பந்தர்.



திருநாவுக்கரசர்.



சுந்தரமூர்த்தி.



மாணிக்கவாசகர்

தெய்வீக-திராவிடவேத கர்த்தாக்கள்.



திருச்சிற்றம்பலம்.

# தென்னாட்டின் க்ஷேத்ர தீர்த்தங்கள்.

## காப்பு—நேரிசை வெண்பா.

ஒன்றாதி யோரெழுபத் தொன்றீரும் மூவர் தமிழ்ச்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சரமுகனேர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சரமுகனே காப்பு.

## சபாபதி.

ஆதிநடு வந்தமிலா வளவில் சோதி
யருண்ஞான மூர்த்தியா யகிலமீன்ற
மாதினையு மொருபாகத் தடக்கி வானோர்
மகுட சூளாமணியாய் வையம் போற்றப்
பாதிமதியணி பவளச் சடைகடாழப்
படரொளி யம்பலத்தாடும் பரனார்பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தே வைத்துத்
தளராத பேரன்பு வளராநிற்பாம்.

## உமாமஹேஸ்வரி.

ஈசனருளிச்சை யறிவியற்றலின்ப
மிலையமொடு போக மதிகாரமாகித்
தேசருவ மருவுருவ முருவமாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வமாகிப்
பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்
டாசகலு மடியருளத் தப்பனுடனிருக்கும்
அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

## சுப்பிரமணியக்கடவுள்.

அருமறையாகம மங்கமருங்கலை நூறெறிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங்குருவை
திருமறைமாமுனிவர் முனிதேவர் கடந்தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர் தெய்வம்
பொருமறையார் கழல்வீரர் வீரன்கையிற்
பூ நீர்கொண்டோவாது போற்று மடியவர்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன்
கழலிணைகளென் சிரத்திற் கருத்தில் வைப்பாம்,

### சமயாசிரியர் நால்வர்.

ஞானத்தாய் திருமுலைப்பா னன்கயின்ற மறைக்கொழுந்தை நலிகற்றாணும்
பீனத்தாற் கடல் கடந்த பெருந்தகையை யிடங்கரின்வாய்ப் பிள்ளையீய்ந்த
தானத்தான் றனை நரியைப் பரியாக்குஞ் சித்தனைத்தன் றனிநாவார
மோனத்தாம் பாசுரங்கண் மொழிந்துயர்ந்த மாமணியை முன்னிவாழ்வாம்.

### அறுபத்துமூன்று நாயன்மார்.

அத்திமான் கலைமானைந்தருநிழன்மானயில் விழிக் கஞ்சனமைத்த
புத்திமானென்றே கவேடையாளம் பொறித்த சுந்தரமுளப்பெம்மான்
சத்திமான்காழித் தடவரையம்மான் றனடி நீழலையடைந்த
முத்திமானனவோ ரறுபத்து மூவர்தாள் சிரமிசை முடிப்பாம்.

## அவதாரிகை.

பிரகாசத்துடன் பொலிவுற்ற பேரலைகளையுடைய கடலால் சூழப்பெற்ற நம்மாரியர்களுக் குறைவிடமாயிருக்கிற இப்பரத கண்டமென்னும் வர்த்தமான இந்தியா தேசமானது வடக்கே ஹிமாசல முதல் தெற்கே கன்னியாகுமரிவரையில் வியாபித்திருக்கிறதை:—முதலில் கங்காநதிக்கு வடக்கிலுள்ள ஹிமாசலப்ரதேசம், கங்காநதிக்கும் விந்தியபர்வதத்திற்கும் மத்யப்ரதேசம், விந்தியமலைக்கும் கன்னியாகுமரிக்கு மிடையாயுள்ள தக்கணதேசம் என மூன்று பெரிய பிரிவுகளாகப்பிரித்து; மறுபடியும் கடைசிபிரிவை, விந்தியத்துக்குங் கோதாவரிக்கு மத்தியப்ரதேசம், கோதாவரிக்குங் கன்யாகுமரிக்கு மத்யதேசம், பச்சிம சமுத்ர தீரத்துள்ள நூதன பரசுராமசிருஷ்டியாகிய கேரளாதிதேசம் என்பதாய்ப் பிரிக்கப்பட்டிருக்கும் உட்பிரிவுகள் மூன்றினுள் பெரும்பான்மையும் செந்தமிழும் மற்றும் நற்றமிழுமோங்கிவழங்காநின்ற மேற்கூறிய தக்கணத்தின் றென்னாட்டுப்ரதேசத்தில்.—ஸ்ரீவேதாகம விபவானந்த சாக்ஷாத்காரமாயும் பரிபூரணராயுஞ் சச்சிதானந்தராயும் விபுவாயும் அருவாயும் உருவாயும் அருவுருவாயும், ஆதிமத்யாந்தரகிதராயும் விளங்கு மெண்குணக் கடவுளாகிய நம்மிறைவரான பரமேஸ்வரன் தனதடியார்களுடைய பக்குவா பக்குவத்துக்குத் தக்கபடி, சாலோக, சாமீப, சாரூப, சாயுஜ்ஜிய பதவிகளையளித் தாள்வதற்கான திருவுருவுடனெழுந்தருளியிருக்கின்ற திவ்ய க்ஷேத்ரங்களினது திருநாமங்களு மத்தலங்களிற் கருணுமூர்த்தமா யெழுந்தருளியிருக்குஞ் சிவபிரானது காரணப்பெயராகிய திருநாமமும், அச்சிவபிரான் றிருவாமத்தமைந்த உமாமகேஸ்வரியாய அருட்சத்தியின்றிருநாமமும், அத்தலதீர்த்தமும், விருக்ஷமும், முக்யமான்மியங்களும், அங்ஙனம் பேருற்ற நாயன்மார்களின்றிருநாமமும், சமயாசாரியர்களில் மூவரருளிய திருப்பதிகமுள்ள தொகையும்,

நேரில் யாத்திரைசெய்தறிந்தவா றியம்புவா னெடுத்துக்கொண் டங்ஙனங் கூறியபடியே, எந்நாட்டினுஞ் சிறப்புற்றோங்கிய தென்னாடாகிய சோழவளநாட்டிற் காவேரியின் வடகரையில் திருக்கோயிலென்னுஞ் சிதம்பர மாதிபாகக் கூறுவான் றொடங்கி, சிவநேசச்செல்வர்களி னுபயோகத்தின் பொருட்டு, இங்கெடுத்தெழுதப்படுவதால், அறம்பொருளின்பம் என்னும் இவ்வுலகத்துக்குரிய இம்மூன்றினையு மெளிதிற்றந்து வரவா அடைவினில் மோக்ஷ சாம்பிராச்சியத்தையு மினிது நல்கும் திறத்தினையுடைய சிவக்ஷேத்திரதரிசனமும், புண்ய தீர்த்தயாத்திரைகளும் செய்து பக்தவத்ஸலராயுங் கருணாநிதியாயும் பக்தகோடிகளை இப்பவ சாகரத்தினின்றுங் கரையேற்றிரக்ஷிக்க உமையவள் சமேதராய் வீற்றிருக்கும், சர்வஜீவகாருண்யரான பரமசிவனை மனோவாக்குக் காயங்களால் வழிபட்டு, ஐயாறப்பர், செம்பொற்சோதீஸ்வரர், பிரணதார்த்திஹரர், பஞ்சாபகேசர், பஞ்சனதீசர் முதலாய எண்ணிலாக் காரணப்பெயர்களாற் பிரஸிதிதுபெற்று விளங்கா நின்ற திருப்பரஞ்சுடரது திருவருட் கிருபாகடாக்ஷத்துக்குப் பாத்திரராகும்படி சமயாசாரிய குரவர் பாறையறை விக்கின்றனர்.

## தேவார திருப்பதிகளின் றொகை.

திருஞானசம்பந்த ரருளிச் செய்த
திருப்பதிகம் பொது வகையா லேழதாகு
மருண்ஞானத் தவமுனிவர் முப்பத்தேழா
மாரூரனம்பியொரு நான்காமாக

வருஞானத் திருப்பதிக நாற்பத்தெட்டா
மற்றுமிந்தப் பதிகமொடு மறைதேர் மூவர்
இருநாவான் மொழிந்த திருப்பதிகம் யாவு
மியம்பி லெழுநூற்றுத் தொண்ணூற் றேழன்றே

## தேவார திருப்பதிகமுள்ள சிவத்தலங்களின் தொகை.

ஈண்டுபுகழ்ச் சோணாட்டி லொருநூற்றுத் தொண்ணூ றீழத்திரண்டு
பாண்டியிலீரேழ் மலைநாட்டொன்று கொங்கேழ் மகதமிருபத்திரண்டு
பூண்டதொண்டை நன்னாட்டெண்ணான்கு துளுவொன்று வடபுலத்தைத்
வாண்டசிவஸ்தல மிருநூற்றெழுபத்துநான்கு தொகையாகுமன்றே. [தாக

அஃதாவது :—

| | | | |
|---|---|---|---|
| 1. | காவேரிக்கு வடகரையி லுள்ளவை, ஷை தென்கரையி லுள்ளவை | தஞ்சை, திருச்சி ஜில்லாக்கள். | 63<br>127 |
| 2. | ஈழநாட்டு (இலங்கைத்தீவு) ஸ்தலங்கள் | | 2 |
| 3. | பாண்டியநாட்டு (மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்கள்) ஸ்தலங்கள் | | 14 |
| 4. | மலைநாட்டு (மலையாளம் ஜில்லா) ஸ்தலம் | | 1 |
| 5. | கொங்குநாட்டு (சேலம், கோயம்புத்தூர்ஜில்லாக்கள் ஸ்தலங்கள் | | 7 |
| 6. | நடுநாட்டு (தென்னாற்காடுஜில்லா) ஸ்தலங்கள் | | 22 |
| 7. | தொண்டைநாட்டு (செங்கற்பட்டு, வடவாற்காடு ஜில்லாக்கள்) ஸ்தலங்கள் | | 32 |
| 8. | துளுவநாட்டு (தென்கன்னடம் ஜில்லா) ஸ்தலம் | | 1 |
| 9. | வடநாட்டு (ஹிமோத்கிரிகண்டம்) ஸ்தலங்கள் | | 5 |
| | ஆக சிவஸ்தலங்கள் | | 274 |

குறிப்பு:—இதனடியில் ஷை பாடல்பெற்ற ஸ்தலவிவரங்களுடன் சில வைப்புஸ்தலங்களுஞ் சேர்க்கப்பட்டிருக்கிறதைக் காண்க.



திருச்சிற்றம்பலம்.

☞ குறிப்பு :—இதனடியிற் குறித்த திருவருளட்டவணையில் 4-வது கலத்தில் வடக்கு, வடகிழக்குமுதலிய எட்டுத் திக்குகளையும் முறையே அவ்வவற்றின் முதலெழுத்தாகிய "வ," "வ-கி" முதலாய சங்கேதங்களாலும், 10-வது கலத்தில், திருஞானப்பதிகம், திருநாவுப்பதிகம் சுந்தரப்பதிகம் என்பனவற்றிற்கு முறையே "ஞா" "நா" "சு" என்றுள்ள சங்கேதங்களாலும் அந்தந்த க்ஷேத்திர மான்மியங்களினளவை 11-வது கலத்தில் ஒன்று அல்லது இரண்டு, மூன்று ஸ்டார்மார்க்குகளாலும் குறித்துக் காட்டப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு ரெயில்வே ஸ்டேஷனிலிருந்தும் அந்தந்த திருச்சிவஸ்தலங்களுக்குச் செல்லவும், யாதாமொரு சிவஸ்தலத்தினின்றும் அருகாமையிலுள்ள மற்றோர் சிவஸ்தலத்துக்குச் செல்ல கற்சாலை அல்லது மட்சாலை மார்க்கங்களும் எங்கெங்கும் தவறுமலிருக்கின்றன; அவைகளினிடையேயுள்ள தூரம் அங்கங்குள்ளோரால் சாதாரணமாய்த் தெரிந்து கொள்ளக்கூடிய தாகையால் அவற்றை அனுவசியமாய் இங்கெடுத்துக் குறிப்பிடாது விலக்கினம்.

| நெ. | ஸ்தலங்களின் பெயர். | இன்ன ரெயில்வேஸ்டேஷனிலிருந்து. | இன்ன திசையில் | இத்தனை மைல். | சுவாமி பெயர் | அம்மன் பெயர். | தீர்த்தம். | விருக்ஷம். | பதிகங்கள். | மான்மியம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| | | | கரவீர்க்கு வடகரையிலுள்ள ஸதலங்கள் 63. | | | | | | | |
| 1 | சிதம்பரம் (தில்லை) | சிதம்பரம் | மே | 1 | சபாநாயகர்திருமூலநாதர் | சிவகாமவல்லி உமையம்மை | சிவகங்கை முதலாய 10 | ,, | ஞா 2, நா-8 சு 1 அ_1¦1 | *** துவாதசாந்தஸ்தலம். |
| 2 | திருவேட்களம் | ஷை | கி | 1 | பாசுபதீசர் | நல்லநாயகி | சிவகங்கை | ,, | ஞா 1, நா-1 | |
| 3 | திருநெல்வாயில் (சிவபுரி) | ஷை | தெ-கி | 1½ | உச்சிநாதீசர் | கனகாம்பிகை | கிருபா சமுத்திரம் | ,, | ஞா-1 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | திருக்கழிப்பாலை | ஷை | ஷை | 2 | வண்ணீசர் | பொற்பதவேத நாயகி | கொள்ளிடம் | ,, | ஞா-2, நா 5சு 1 ஆ 8 | |
| 5 | திருப்பெருமாளம் (ஆச்சாபுரம்) | கொள்ளிடம் | கி | 3 | சிவலோகத்தியாகேசர் | நங்கையுமை | பஞ்சாக்கரம் | ,, | ஞா-1 | * |
| 6 | திருமயேந்திரப்பள்ளி (கோவிலடிப்பாளையம் | கொள்ளிடம் | வ-கி | 6 | திருமேனியழகர் | வடிவாளம்மை | மந்திர புஷ்கரணி | ,, | ஞா-1 | |
| 7 | திருமுல்லைவாயில் | சீர்காழி | கி | 3 | முல்லைவன நாதர் | கோதையம்மை | சக்கரதீர்த்தம் | ,, | ஞா-1 | |
| 8 | திருக்கலிக்காமூர் (அன்னப்பன் பேட்) | மாயூரம் | வ-கி | 15 | சுந்தரேஸ்வரர் | அழகுவன முலையம்மை | அம்புலி தீர்த்தம் | ,, | ஞா-1 | |
| 9 | சாயாவனம் | ஷை | கி | 12 | சாயாவனேசுரர் | குயிலினி மொழி யம்மை | சங்கமுக தீர்த்தம் | ,, | ஞா 2; நா 2 | |
| 10 | காவிரிப்பூம்பட்டணம் | ஷை | கி | 13 | பல்லவனீசர் | சௌந்தரி | ஷை | ,, | ஞா 2 | * |
| 11 | திருவெண்காடு | ஷை | ஷை | 9 | சுவேதாரண்யர் | பிரமவித்யாநாயகி | சோம சூரியாக்னி தீர்த்தங்கள் | வடவால் | ஞா-3, நா 2 சு-1 ஆ 6 | |
| 12 | திருக்காட்டுப்பள்ளி | ஷை | ஷை | 8 | ஆரண்யசுந்தரர் | அகிலாண்டநாயகி | அமுதப்பொய்கை | ,, | ஞா-1 | |
| 13 | திருக்குருகாவூர் | சீர்காழி | தெ-கி | 3 | திருமேனி வெள்ளடையீசர் | காவியங்கண்ணியம்மை | வெள்ளடை | ,, | ஞா-1 சு, 1 | * |
| 14 | சீகாழி | ஷை | தெ-கி | ½ | பிரமபுரீசர் | திருநிலைநாயகி | பிரமதீர்த்தம் கழுமலநதி | ,, | ஞா-67, நா-3 சு 1 ஆ 71 | ** |

| கெ. | ஸ்தலங்களின் பெயர். | இன்ன ரெயில்வேஸ்டேஷனிலிருந்து. | இன்ன திசையில். | இத்தனை மைல். | சுவாமி பெயர். | அம்மன் பெயர். | தீர்த்தம். | விருக்ஷம். | பதிகங்கள். | மான்மியம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 15 | திருத்தாளமுடையார் கோயில் | ஷை | கி | 1 | சப்தபுரீசர் | ஓசைகொடுத்தநாயகி | சூரியதீர்த்தம் | ,, | ஞா-1, சு-1 | * |
| 16 | வைத்தீஸ்வரன் கோயில் | ஷை | கி | ½ | வைத்திநாதர் | தையனாயகி | சித்தாமிர்தம் | வேம்பு | ஞா-1, நா 2 | ** |
| 17 | திருக்கண்ணார் கோயில் | ஆனைதண்டாபுரம் | வ-கி | 4 | கண்ணாயிரேசர் | முருகுவளர் கோதை நாயகி | மணிகர்ணிகை | ,, | ஞா-1 | |
| 18 | திருக்கடைமுடி கீழையூர் | மாயூரம் | கி | 8 | கடைமுடியீசர் | அபிராமவல்லி | கடைமுடி | ,, | ஞா-1 | |
| 19 | திருநின்றியூர் | ஆனைதண்டாபுரம் | வ-கி | 2 | மகாலெக்ஷ்மீசர் | உலகநாயகி | நீலமலர்ப்பொய்கை | ,, | ஞா-1, நா 1 சு-2 ஆ-4 | |
| 20 | திருப்புன்கூர் | வைத்தீஸ்வரன் கோவில் | மே | 2 | சிவலோகநாதர் | சொக்கநாயகி | ரிடபதீர்த்தம் | ,, | ஞா-1, நா 1, சு-1 ஆ 3 | * |
| 21 | திருநீடூர் | ஆனைதண்டாபுரம் | தெ-மே | 1 | அருட் சோமநாதர் | வேயுறுதோளி | செங்கழுநீர் | ,, | சு | * |
| 22 | திருஅன்னியூர் | ஷை | ஷை | 4 | ஆபத்சகாயர் | பெரியநாயகி | சிவகங்கை | ,, | ஞா-1, நா-1 | |
| 23 | திருவேள்விக்குடி | குற்றாலம் | வ-கி | 1½ | கலியாண சுந்தரர் | பரிமள சுகந்த நாயகி | மங்கள தீர்த்தம் | ,, | ஞா-1, சு-1 | |
| 24 | மேலத்திருமணஞ்சேரி | குற்றாலம் | வ-கி | 3 | ஐராவதீசர் | மலர்க்குழலாம்பிகை | சிவகங்கை | ,, | சு-1 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 25 | கீழத்திருமணஞ்சேரி | ஷை | ஷை | $3\frac{1}{4}$ | அருள்வல்லநாயகர் | யாழின்மொழி | சமுத்திர | ,, | ஞா-1, நா-1 | * |
| 26 | திருக்குறுக்கை | ஆனைதண்டாபுரம் | மே | 6 | வீரட்டேசர் | ஞானம்பிகை | சூலதீர்த்தம் | ,, | நா-2 | * |
| 27 | தலைஞாயிறு (மேலைக்காழி | வைத்தீஸ்வரன் கோவில் | ஷை | $4\frac{1}{2}$ | குற்றம் பொறுத்தீசர் | கோல்வளையம்மை | சூரியதீர்த்தம் | ,, | ஞா-1, சு-1 | |
| 28 | திருக்குரக்குக்கா | ஷை | வ-மே | 5 | கொந்தளீசர் | கொந்தளநாயகி | சுந்தரதீர்த்தம் | ,, | நா-1 | |
| 29 | திருவாளொளிப்புற்றூர் | ஷை | மே | 5 | மாணிக்கவண்ணீசர் | வண்டார்பூங்குழலி | பிரமதீர்த்தம் | வாகை | ஞா-2, சு-1 | |
| 30 | இலுப்பைப்பட்டு | ஷை | ஷை | 6 | நீலகண்டர் | அமுதகரவல்லி | அமுத தீர்த்தம் | ,, | சு-1 | |
| 31 | ஓமாம்புலியூர் | ஷை | வ-மே | 7 | துயரந்தீர்த்தேசர் | பூங்கொடியாள் | கொள்ளிடம் | ,, | ஞா.1, நா-1 | |
| 32 | திருக்கானாட்டுமுள்ளூர் | ஷை | ஷை | 5 | பதஞ்சலீசர் | கோல்வளைக்கையம்மை | புஷ்கரணி | ,, | சு-1 | |
| 33 | திருநாரையூர் | ஷை | வ | 6 | சுந்தரேசர் | திரிபுரசுந்தரி | காருண்ய தீர்த்தம் | புந்நாகம் | ஞா-3, நா-2 | * |
| 34 | மேலைக்கடம்பூர் | ஷை | வ-மே | 11 | அமுதகடேசர் | ஜோதிமின்னாள் | ஆதிதீர்த்தம் | ,, | ஞா-1, நா-2 | |
| 35 | பந்தணைநல்லூர் | குற்றாலம் | வ-கி | 7 | பசுபதீசர் | மணவாளாம்பிகை | புஷ்கரணி | கொன்றை | ஞா-1, நா-1 | * |
| 36 | கஞ்சனூர் | நாரசிங்கம்பேட்டை | வ | 1 | அக்கினீசர் | கற்பகநாயகி | அக்னிதீர்த்தம் | புரசு | நா-1 | * |
| 37 | திருக்கோடிகா | ஷை | வ-கி | $2\frac{1}{2}$ | கோடிகாயீசர் | வடிவாம்பிகை | அகஸ்திய தீர்த்தம் | ,, | ஞா-1, நா-3 | |

| ெ. | ஸ்தலங்களின் பெயர். | இன்ன ரெயில்வேஸ்டேஷனிலிருந்து. | இன்ன திசையில். | இத்தனை மைல். | சுவாமி பெயர். | அம்மன் பெயர். | தீர்த்தம் | விருக்ஷம். | பதிகங்கள். | மானியம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 38 | திருமங்கலக்குடி | ஆடுதுறை | வ | 2½ | பிராணவரதீசர் | மங்களநாயகி | மங்களதீர்த்தம் | கோங்கிலவம் | ஞா-1, நா-1 | * |
| 39 | திருப்பனந்தாள் | ஷை | ஷை | 6 | சடையப்பீசர் | பெரியநாயகி | பிரமதீர்த்தம் | பனை | ஞா-1 | * |
| 40 | திருவாப்பாடி | ஷை | வ-மே | 7 | பாலுகந்தேசர் | பெரியநாயகி | மண்ணியாறு | ஆத்தி | ஞா-1 | * |
| 41 | திருச்சேய்ஞலூர் | ஷை | ஷை | 6½ | ஸ்ரீசர் | ஜெகதேவி | சப்ததீர்த்தம் | ,, | ஞா-1 | |
| 42 | திருந்துதேவன்குடி | திருவிடைமருதூர் | வ-மே | 4½ | கற்கடேசர் | அருமருந்தம்மை | பங்கயதீர்த்தம் | ,, | ஞா-1 | * |
| 43 | திருவிசநல்லூர் | ஷை | ஷை | 4 | ஏகாந்தீசர் | சௌந்தரநாயகி | சடாயுதீர்த்தம் | ,, | ஞா-1 | * |
| 44 | கொட்டையூர் | கும்பகோணம் | ஷை | 2 | சோடீஸ்வரர் | பந்தாடுநாயகி | கோடிதீர்த்தம் | ,, | நா-1 | |
| 45 | இன்னம்பூர் | ஷை | ஷை | 4 | அம்பர்மூர்த்தி | கொந்தார்பூங்குழலி | ஐராவததீர்த்தம் | ,, | ஞா-1, நா-4 | * |
| 46 | திருப்புறம்பியம் | ஷை | ஷை | 6 | சாக்ஷிநாதீசர் | சொல்லணநாயகி | பிரம்மதீர்த்தம் | புன்னை | ஞா-1, நா-1 சு-1 | * |
| 47 | திருவிஜயமங்கை | ஷை | ஷை | 7 | விஜயநாதர் | மங்கைநாயகி | அர்ச்சுன | ,, | ஞா-1, நா.1 | |
| 48 | திருவைகாவூர் | ஷை | ஷை | 8 | வில்வவனீசர் | பூவைவல்லி | கூற்றுவ | ,, | ஞா-1 | |
| 49 | திருவடகுரங்காடுதுறை | ஐயம்பேட்டை | ஷை | 3½ | குலைவணங்கீசர் | அழகுசடை | காவேரி | ,, | ஞா -1 | |
| 50 | திருப்பழனம் | தஞ்சாவூர் | வ-கி | 10 | ஆபத்சகாயர் | பெரியநாயகி | மங்கள | ,, | ஞா-1, நா 4 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 51 | திருவையாறு (தக்ஷிணகாசி) | ஷை | வ | 7 | பஞ்சனதீசர் | தருமாம்பிகை | காவிரிவகையறு 5 | ,, | ஞா-5, நா-12-சு-1 ஆ 18 | * * |
| 52 | திருநெய்த்தானம் | ஷை | வ | $7\frac{1}{2}$ | நெய்யாடீசர் | வாலாம்பிகை | காவிரி | ,, | ஞா-1, நா, 5 | |
| 53 | பெரும்புலியூர் | ஷை | வ-மே | 9 | வியாக்ரபுரீசர் | சௌந்தரநாயகி | ஷை | ,, | ஞா-1 | |
| 54 | திருமழபாடி | ஷை | ஷை | 11 | வஜ்ஜிரதம்பேசர் | அழகாம்பிகை | கொள்ளிடம் | ,, | ஞா-3, நா 2 சு 1-ஆ 6 | |
| 55 | திருப்பழுவூர் | தஞ்சாவூர் | வ | 18 | வடமூலநாதர் | அருந்தவநாயகி | பிரமதீர்த்தம் | ,, | ஞா-1 | * |
| 56 | திருக்கானூர் | பூதலூர் | வ | 7 | செம்மேனீசர் | சிவயோகம்மை | வேததீர்த்தம் | ,, | ஞா-1, நா-1 | |
| 57 | அன்பிலாந்துறை (அம்பில்) | ஷை | வ-மே | 12 | சத்திவாகீசர் | சௌந்தரநாயகி | காயத்ரீ | ,, | ஞா-1, நா-1 | |
| 58 | மாந்துறை | திருச்சிகோட்டை | வ-இ | 11 | அம்பரவருணேசர் | அழகிலுயர்நாயகி | ஷை | ,, | ஞா-1 | |
| 59 | திருப்பாற்றுறை | திருவெறும்பூர் | வ | 4 | திருமூலநாதர் | மோகாம்பிகை | கொள்ளிடம் | ,, | ஞா-1 | * |
| 60 | திருவானைக்கோயில் | திருச்சிகோட்டை | வடக்கு | 3 | ஜம்புகேசர் | அகிலாண்டநாயகி | காவேரி | நாவல் | ஞா-3, நா-3 சு-1 ஆ 7 | * * |
| 61 | திருப்பைஞ்ஞீலி | ஷை | வ-மே | 11 | நீலகண்டேசர் | விசாலாக்ஷி | ஏழுதீர்த்தங்கள் | ,, | ஞா-1, நா 1 சு-1 ஆ 3 | |
| 62 | திருவாசி | ஷை | ஷை | 6 | மாற்றுவரதீசர் | வாலசௌந்தரி | பிரமதீர்த்தம் | ,, | ஞா-1, சு 1 | * |
| 63 | திருவீங்கோய்மலை | குழித்தலை | ஷை | 5 | மரகதசலேசர் | மரகதவல்லி | அமுததீர்த்தம் | வன்னி | ஞா-1 | * |
| | | | காவிரிக்குத் தென்கரையிலுள்ளவை 127. | | | | | | | |
| 64 | இரத்தினகிரி | குழித்தலை | தெற்கு | $6\frac{1}{2}$ | இரத்தினகிரீசர் | கரும்பார்குழலி | கௌரிதீர்த் | ,, | நா-1 | |
| 65 | கடம்பர்கோவில் | ஷை | வ-மே | $1\frac{1}{2}$ | கடம்பவனேசர் | முற்றிலாமுலையாள் | அகண்டகாவேரி | கடம்பை | நா-1 | |

| எ. | ஸ்தலங்களின் பெயர். | இன்ன ரெயில்வேஸ்டேஷனிலிருந்து. | இன்னதிசையில். | இத்தனைமைல். | சுவாமி பெயர் | அம்மன் பெயர். | தீர்த்தம். | விருக்ஷம். | பதிகங்கள். | மானியம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 66 | திருப்பராய்த்துறை | எழுமனூர் | ஷை | 1½ | பராய்த்துறைநாதர் | பொன்மயிலாம்பிகை | அசண்டகாவேரி | ,, | ஞா-1,நா 1 | |
| 67 | உய்யக்கொண்டான்மலே | திருச்சிஜங்ஷன் | ஷை | 1⅓ | உச்சிநாதேசர் | அஞ்சனுக்ஷி | காவேரி | ,, | ஞா-1,நா 1 சு-1 ஆ 3 | |
| 68 | உறையூர் | ஷைகோட்டை | மே | 1 | பஞ்சவருணேசர் | காந்திமதி | பஞ்சவர்ண | ,, | ஞா,1 | * |
| 69 | திருச்சிராப்பள்ளி | ஷை | கி | ½ | தாயுமானவர் | மட்டுவார்குழலி | காவேரி | ,, | ஞா-1,நா 1 | * |
| 70 | எறும்பேஸ்வரம் | திருவெறும்பூர் | வ-மே | ½ | எறும்பீசர் | நறுங்குழநாயகி | பிப்பிலீகம் | ,, | நா-2 | * |
| 71 | திருநெட்டாங்குளம் | ஷை | கி | 8 | நித்யசுந்தரேசர் | ஒப்பிலாநாயகி | சூரியதீர்த்தம் | ,, | ஞா-1 | |
| 72 | திருக்காட்டுப்பள்ளி | பூதலூர் | வ | 5 | தீயாடியப்பர் | வார்கொண்டமுலேயம்மை | ஷை | ,, | ஞா-1,நா 1 | |
| 73 | திருவாலம்பொழில் | தஞ்சாவூர் | வ | 9 | ஆத்மநாதீசர் | ஞானம்பிகை | திருப்பாற்குளம் | ,, | நா-1 | |
| 74 | திருப்பூந்திருத்தி | ஷை | வ | 8 | புட்பவனநாதர் | அழகாம்பிகை | காசிக்கங்கை | ,, | நா-3 | * |
| 75 | கண்டியூர் | ஷை | வ | 6 | வீரட்டானநாதர் | மங்கலநாயகி | காவேரி | ,, | ஞா-1,நா 1 | |
| 76 | திருச்சோற்றுத்துறை | ஷை | வ-கி | 9 | தொலேயாச்செல்வநாதர் | ஒப்பிலாம்பிகை | சூரியதீர்த்தம் | ,, | ஞா-1,நா-4 சு-1 ஆ 6 | |
| 77 | திருவேதிகுடி | தஞ்சாவூர் | வ-கி | 7½ | வேதபுரீசர் | மங்கையர்க்கரசி | சுந்தர | ,, | ஞா-1,நா-1 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 78 | திட்டை | திட்டை | மே | $\frac{3}{4}$ | பசுபதீசர் | உலகநாயகி | சக்கர | ,, | ஞா-1 | |
| 79 | திருப்புள்ளமங்கை | ஐயம்பேட்டை | மே | 2 | பசுபதிநாதேசர் | பால்வளைநாயகி | சிவ தீர்த்தம் | ,, | ஞா-1 | |
| 80 | சக்கராப்பள்ளி | ஷை | ஷை | $\frac{3}{4}$ | ஆலந்தரித்த ஈசர் | அல்லியங்கோதை | காக தீர்த்தம் | ,, | ஞா-1 | |
| 81 | திருக்கருகாவூர் | பாபநாசம் | தெ | 4 | முல்லைவனேசர் | கரும்பனைவல்லி | பிரமதீர்த்தம் | ,, | ஞா-1,நா 1 | |
| 82 | திருப்பாலைத்துறை | ஷை | வ-கி | 1 | பாலைவனநாதர் | தவளவெண்ணகையம்மை | காவேரி | ,, | நா-1 | |
| 83 | நல்லூர் | சுந்தரப்பெருமாள் கோயில் | தெ | 2 | பெரியாண்டேசர் | திரிபுரசுந்தரி | சப்தசாகர | ,, | ஞா-3,நா 2 | * |
| 84 | திருவாவூர் | பாபநாசம் | தெ-கி | $6\frac{1}{2}$ | பசுபதீசர் | மங்களநாயகி | பிரமதீர்த்தம் | ,, | ஞா-1 | * |
| 85 | திருச்சத்திமுற்றம் | தாராசுரம் | தெ-மே | 2 | சிவக்கொழுந்தீசர் | பெரியநாயகி | சூலதீர்த்தம் | ,, | நா-1 | * |
| 86 | பட்டீஸ்வரம் | ஷை | ஷை | 2 | பட்டீஸ்வரர் | பால்வளைநாயகி | ஞானதீர்த்தம் | ,, | ஞா-1 | * |
| 87 | திருவடதளி (1) | ஷை | தெற்கு | 2 | சோமேசர் | சோமகலையாம்பிகை | சிவகங்கை | ,, | நா-1 | * |
| | திருப்பழையாறை (2) | ஷை | தெ-கி | 3 | | | | | | |
| 88 | திருவலஞ்சுழி | சுந்தரப்பெருமாள் கோயில் | கி | 1 | கற்பகேசுரர் | பெரியநாயகி | 66-கோடி | ,, | ஞா-3,நா 2 | |
| 89 | கும்பேஸ்வரன் கோவில் | கும்பகோணம் | மே | 1 | கும்பேசர் | மங்களாம்பிகை | காவேரி | ,, | ஞா-1,நா 1 | * |
| 90 | நாகேஸ்வரன் கோவில் | ஷை | மே | 1 | மடந்தைபாகர் | பெரியநாயகி | மாமக தீர்த்த | ,, | நா-1 | |
| 91 | காசிவிசுவநாதன் கோவில் | ஷை | மே | $\frac{3}{4}$ | சோமநாதர் | தேனார்மொழியம்மை | காசிபதீர்த்த | ,, | ஞா-1 | |
| 92 | திருநாகேஸ்வரம் | ஷை | கி | 3 | சண்பகாரண்யர் | குன்றுமுலைநாயகி | நாக தீர்த்தம் | ,, | ஞா-2,நா 3 சு-1-ஆ 6 | * |

| நெ. | ஸ்தலங்களின் பெயர். | இன்ன ரெயில்வேஸ்டேஷனிலிருந்து. | இன்ன திக்கில். | இத்தனை மைல். | சுவாமி பெயர். | அம்மன் பெயர். | தீர்த்தம். | விருக்ஷம். | பதிகங்கள். | மாணிக்க[illegible] |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 93 | திருவிடைமருதூர் | திருவிடைமருதூர் | வடக்கு | ¼ | மருதப்பர் | பெருநலமாமுலை நாயகி | கருணாகாவேரி | மருது | ஞா-6, நா 5 சு-1. | ** |
| 94 | ஆடுதுறை | ஆடுதுறை | வ-மே | ¾ | ஆப்தசகாயர் | பவளக்கொடி | சகாய | ,, | ஞா-1, நா 1 | * |
| 95 | தென்னல்குடி | ஷை | தெ | 2 | நல்லநாயகர் | அழகாம்பிகை | வன்னீலம் | ,, | நா-1 | |
| 96 | (1) திருவைகல் | ஷை | தெ-கி | 5 | வைகனுதேசர் | வைகலாம்பிகை | ,, | ,, | ஞா-1 | |
| | (2) மலக்கோவில் | ஷை | ஷை | 5 | கோமளேசுவரர் | கோமளேஸ்வரி | | | | |
| 97 | கோனேரிராஜபுரம் | ஷை | ஷை | 7 | உமாமணீசர் | மங்களநாயகி | கங்கை | ,, | ஞா-,1 நா 1 | |
| 98 | திருக்குழம்பியம் | நாரசிங்கம்பேட்டை | ஷை | 2½ | கோகிலேசர் | சௌந்தரிநாயகி | மதுதீர்த்தம் | ,, | ஞா-1, நா 1 | |
| 99 | திருவாவடுதுறை | ஷை | ஷை | 1 | மாசிலாமணித்தியாகர் | ஒப்பிலாமுலையம்மை | கோமுத்தி | படராசு | ஞா-1, நா 5 சு-2 ஆ-8 | * |
| 100 | குறாலம் | குற்றாலம் | வ-கி | ¾ | உத்தரவேதீசர் | முகிழாம்பிகை | காவேரிசுந்தர | குற்றால் | ஞா-1, நா 1 சு-1 ஆ 3 | |
| 101 | தேரழுந்தூர் | ஷை | தெ-கி | 3 | வேதபுரீசர் | சௌந்தராம்பிகை | சித்தாமிருத | ,, | ஞா-1 | |
| 102 | மாயூரம் | மாயூரம் | கி | 2 | வதானியீசர் | வள்ளலார் கை | காவேரி | மா | ஞா-2, நா 1 | ** |
| 103 | திருவிளநகர் | ஷை | கி | 6 | வள்ளலார் | தோழியம்மை | ஷை | ,, | ஞா-1 | |
| 104 | பறசலூர் | ஷை | ஷை | 8 | வீரட்டேசர் | இளங்கொடியாள் | சந்திரபுஷ்கரணி | ,, | ஞா-1 | * |
| 105 | செம்பனார் கோவில் | ஷை | ஷை | 10 | சொர்னபுரீசர் | சுகந்தவன நாயகி | வீரபத்திர | ,, | ஞா-1, நா -2 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 106 | திருநணிப்பள்ளி (புன்செய்) | ஷை | ஷை | 11 | நற்றுணையப்பர் | பார்வதி | சொர்ண | ,, | ஞா-1,நா 1 சு-1 ஆ 3 | |
| 107 | மேலப் பெரும் பள்ளம் | ஷை | ஷை | 11 | வலம்புரிநாதர் | வடுவகிர்விழி யாள் | பிரம | ,, | ஞா-1-நா 2 சு-1 ஆ 4 | * |
| 108 | தலச்சங்காடு | ஷை | ஷை | 13 | சங்காரண்யர் | சௌந்தரநாயகி | காவேரி | வில்வம் | ஞா-1 | * |
| 109 | திருவாக்கூர் | ஷை | தெ-கி | 13 | சுயம்புநாதர் | வாள்நெடுங் கண்ணி | குமுத | ,, | ஞா-1, நா -1 | |
| 110 | திருக்கடவூர் | மாயூரம் | தெ-கி | 11 | அமுதகடேசர் | அபிராமி | அமுத | வில்வ | ஞா-1,நா-3 சு-1 ஆ 5 | * |
| 111 | ஷை மயானம் | ஷை | ஷை | 12 | பிரமபுரீசர் | மலர்க்குழன் மின்னம்மை | கூபகங்கை | ,, | ஞா-1,நா3 சு-1 ஆ 5 | * |
| 112 | திருவேட்குடி | பொறை யாறு | வ-கி | 4 | திருமேனியழ கர் | சாந்தநாயகி | சந்திரபுஷ் கரணி | ,, | ஞா-1 | |
| 113 | கோயிற்பத்து | ஷை | வ-மே | ½ | பார்வதீசர் | சத்தியம்பாள் | சத்திதீர்த்தம் | ,, | ஞா-1 | |
| 114 | தருமபுரம் | திருநள்ளாறு | கி | 2½ | யாழ்மூரிநாதர் | மதுரமின்னம் பிகை | விஷ்ணு, பிர்மஹ | ,, | ஞா-1 | |
| 115 | திருநள்ளாறு | ஷை | தெ | ½ | தருப்பாரணீ சர் | போகமார்த்த பூண் முலை யம்மை | நளதீர்த்தம் | ,, | ஞா-4, நா 2 சு-1 ஆ 7 | * |
| 116 | திருக்கொட்டா ரம் | அம்பகரத் தூர் | வ-கி | 1½ | ஐராவதீசர் | வண்டமர் பூங் குழலி | சூரிய | ,, | ஞா.2 | |
| 117 | திருவம்பர் கோ யில் | பூந்தோட் டம் | கி | 2 | பிரமபுரீசர் | பூங்குழநா யகி | அன்னமாம் பொய்கை | ,, | ஞா-1 | * |
| 118 | கோயிற்றிரு மாகாளம் | ஷை | ஷை | 1½ | காளகண்டேசர் | பக்ஷநாயகி | தேவ தீர்த் தம் | ,, | ஞா-3 | * |
| 119 | திருமீயச்சூர் | பேரளம் | மே | 1 | திருமுயற்சிநா தர் | சௌந்தரநாயகி | கங்காகூபம் | ,, | ஞா-1 | |

